சங்கு நூல்கள்—5 அணா 4



# மகாத்மா காந்தி

(ஜீவிய சரித்திரம்)

ரொமேன் ரோலண்ட்
எழுதியது



சுதந்திரச் சங்கு ஆபீஸ்
திருவல்லிக்கேணி, சென்னை

# மகாத்மா காந்தி

(ஜீவிய சரித்திரம்)

ரொமேன் ரோலண்ட்
எழுதியது







சுதந்திரச்சங்கு காரியாலயம்
திருவல்லிக்கேணி, சென்னை.



# பொருளடக்கம்

# முகவுரை

எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்று அறியேன் பராபரமே

என்று அந்நாளிலே தாயுமான சுவாமிகள் பாடிப் போனார். ஆனால் அப் பெரியவர் அவ்வுண்மையை உலகினருக்கு எடுத்துப் புகட்டவில்லை. இந்நாளிலோ, மகாத்மா காந்தி தோன்றி, அவ்வுயர்ந்த உண்மையைத் தமது வாக்கு, செயல், சிந்தை ஆகிய மூன்றினாலும் உலகத்தாருக்கு எடுத்துப் புகட்டி வருகிறார். ஆனதுபற்றியே, அவரை உலக சிரேஷ்டர், புருஷோத்தமர், பரம ஆத்மஞானி, சத்தியாவதாரம் எனப் பலர் பயபக்தி விசுவாசத்துடன் மதித்துப் போற்றுகின்றனர். இப்போது, அப் பெரியவரின் போதனைக்கு ஓர் அறிகுறியாக விளங்கும் இயக்கம் ஒத்துழையாமை எனப்படும். பொதுவாகப் பார்த்தால், மகாத்மா காந்தியே ஒத்துழையா இயக்கம், அல்லது ஒத்துழையா இயக்கமே மகாத்மா காந்தி என்று சொல்லவேண்டும். சென்ற இரண்டாயிர வருஷ காலமாக, அத்தகைய விசேஷமான இயக்கம் இப்புவியில் பிறந்ததில்லை யென்பர் பெரியோர்.

வெளித் தோற்றத்திற்கு அவ் வியக்கம் தற்போது ஆங்கில அரசின் முறையை எதிர்த்து நிற்பதாக உளதே என்று சிலர் நினைக்கலாம். உலகிலுள்ள மனிதகோடிகளில் எல்லாரும் இன்புற்றிருக்க வேண்டுமென்றால், ஒருவர் நலத்தை ஒருவர் பறித்துண்பதாக இருக்கக் கூடாதல்லவா? ஆங்கில அரசின் முறையோ இந்தியரின் நலத்தைப் பறித்துத் தின்னுவதாகவே யுளது. ஆதலின் அவ்வரசின் முறையில் அழிந்து கிடக்கும் நம்மவரின் புத்திப் போக்கை முதன்

முதலாக நல்வழிப் படுத்தி, அப்பால் ஆங்கில வரசையும், ஆங்கில ஜாதியையும் சீர்திருத்தி, முடிவிலே உலக ஜனங்களை உயர்வழியில் நடத்தவே, ஒத்துழையா இயக்கம் ஏற்பட்டுள்ளது. அவ்விதமே மகாத்மா காந்தி பன்முறை பாமரருக்கும் மனதில் படும்படி சொல்லி யிருக்கிறார்.

அங்ஙன மிருந்தும், ஆதியிலே நம்மவரிலும் சிலர் அவ்வியக்கத்தைக் கண்டு அஞ்சி நடுங்கினர்; ஆங்கிலேயரும் "அப்பப்பா! அவ்வியக்கம் பரம மடமைத்தனமாகும்" என்று பரிகசித்தனர். உதாரணமாக, அவ்வியக்கம் ஆரம்பமான காலத்திலே இந்தியாவின் ராஜப்பிரதிநிதியாக விருந்த லார்டு செம்ஸ்போர்டு என்பவரோ, அது பரம பைத்தியக்கார இயக்கமென்றே வாய் கூசாமல் பேசினர். மேலே சொல்லியவாறு சிலர் அஞ்சி நடுங்கியதற்கும், சிலர் இலேசாகப் பேசிப் பரிகசித்ததற்கும் காரணம் அவ் வியக்கத்தின் உட்கருத்தான உண்மையை உணராது போனதே யாகும்.

நாளடைவிலே ஆராய்ச்சியையும் அனுபவத்தையும் ஆதாரமாகக் கொண்டு, பலரும் அவ்வுண்மையைச் சிறிது சிறிதாகக் காணலாயினர். ஆயினுமென்ன? இந்த இருபதாம் நூற்றாண்டிலே, பலவானே நியாயவான் என்ற கொள்கை எங்கும் பரவியுளது. ஆதலால் படை பலம், பண பலம் எனப்படும் மிருக மூர்க்க பலத்தையே கைகண்ட பலனாகப் பலரும் கொண்டுளர்; ஐரோப்பிய மகா யுத்தம் ஏற்பட்டு, அதில் இலட்சக் கணக்கான ஜனங்கள் மாண்ட பின்பு, நியாயவானே பலவான் என்னும் சத்திய வசனம் பலருக்கும் சிறிதளவு புலப்படலாயிற்று. என்றாலும், அச் சத்திய வசனத்தைக் கடைப்பிடித்து நடக்கப் பலரும் தயங்குகின்றனர். இத்தனை காலமாக அசத்திய வசனத்தில் ஆழ்ந்து கிடந்தோர் திடீரென்று சத்திய வசனத்தைக் கடைப்பிடித்தல் கஷ்டமே.

அத்தகைய நிலைமை பரவியுள்ள சமயத்தில் காந்தியின் தர்ம இயக்கம் தோன்றலாயிற்று. அதுபற்றி நம்மவரும், நம்

மவரை யாண்டுவரும் ஆங்கிலவரசினரும் பரம தியாகஞ் செய்யும்படி நேர்ந்து விட்டது. பரம தியாகம் பண்ணத் தயங்கியதனலேயே, இயக்கத்தைக் கண்டு சிலர் முன்னம் முணு முணுத்தனர்; அதே மாதிரி தயங்கிய ஆங்கில அர சினரும் அப் பெரியவரின் மீது அடங்காக் கோபங் கொண் டனர். அவ்வரசின் சட்டங்களோ அக் கோபத்திற்கு உடந்தையா யிருந்தன; இருக்கவே, மகாத்மா காந்தி சிறைப் பட்டார். தியாக உணர்ச்சியில் தேர்ந்துவிட்ட நம்மவர் அது கண்டு வேறு விதியில்லை, அப்படித்தான் நடக்கும் என்று சாந்த சொரூபிகளாக நிற்கலாயினர். இதுகண்டு, மேனட் டிலே மதியூகிகளான சிலருக்கு ஆச்சரியம் விளைந்தது; பரம ஞானிகளான ஒரு சிலருக்கே பரம பரிவும், மனக் கசிவும் தோன்றலாயின.

அவ்விதப் பரிவும், கசிவும் கொண்ட ஒரு பெரியவர் ரோமேன் ரோலண்டு எனப்படுவார். கற்றுரைக் கற்றுரே காமுறுவர் என்பது போல், பரம ஞானிகளைப் பரம ஞானி கள் தாம் காமுற்றுப் புகழ முடியும். மேனட்டினரிலே வெகு பலர் காந்தி சிறைப்பட்ட தீமையையும், அவரது இயக்கத்தின் மகிமையையும் மதித்துப் பார்க்கவில்லை. ஆத லால் அன்னருக்கு மதிபுகட்ட வேண்டு மென்று, ரோமேன் ரோலண்டு என்னும் பெரியவர் கருதினர்; கருதி, மகாத்மா காந்தி வெளியிட்டு வரும் "யௌவன இந்தியா" என்னும் பத்திரிகையின் புத்தக வடிவமாக நாம் வெளியிட்டுள்ள நூலை பிரஞ்சு பாஷையில் மொழி பெயர்த்துப் பிரசுரித்துள் ளார். அம் மொழிபெயர்ப்பு நூலை வாசிக்கும் பிரஞ்சுக்கார ருக்கு மகாத்மா காந்தி என்பவர் யார், அவரது இயக்கத் தின் தன்மை என்ன, என்று புலப்பட வேண்டு மல்லவா? இதற்காக, "மகாத்மா காந்தியும் இந்திய தேசிய இயக்கமும்" என்று பெயர் பெறும்படியான சிறு நூலொன்று ரோமேன் ரோலண்டு எழுதலானர்.

இதனை நாம் முதலிலே ஆங்கிலத்தில் பிரசுரித்தோம். அதன்மேல் பலர், அமிழ்தினுமினிய தமிழ் மொழியிலும்

வெளியிட வேண்டு மென்று விரும்பினர். அவ்வாறே இந் நூலை இப்போது நமது தாய் மொழியில் வெளியிடத் துணிந்தோம். இந்நூலின் விசேஷத்தைச் சொல்லுமுன், ரோமேன் ரோலண்டு என்னும் மகானைப் பற்றிச் சிறிது சொல்ல வேண்டும்.

## ரோமேன் ரோலண்டு

ரோமேன் ரோலண்டு என்பவர் மகாத்மா காந்தியைப் போல் ஓர் உத்தம புருஷர்; எல்லாரும் இன்பமாக வாழ வேண்டு மென்ற விருப்பமுள்ளவர்; ஜாதி, மத, வர்ண வேற்றுமை யில்லாதவர்; பரம ஞானமும், பேரறிவும் படைத்தவர்; நல்ல படிப்பாளி; மிக்க சத்தியசந்தர்; இயற்கையாகவே மனத்துறவும், தெய்வீக மதப்பற்றும் வாய்ந்தவர். அன்னவர் பிறக்கும்படி பாக்கியம் படைத்த பூமி பிரான்ஸ் தேசம். அவர் பிறந்த இடம் கிளாமஸி என்னும் நகரம். அது புராதனமான பட்டணம்.

அவர் பிறந்த நாள் 1866-ம் வருஷம், ஜனவரி மாதம் 29-ந் தேதி; எனவே இப்போது அவருக்கு வயது 65 ஆகும். அவர் மிகவும் கௌரவம் வாய்ந்த மத்திய வகுப்பைச் சேர்ந்தவர்; பார்ப்பதற்கு நமது காந்தியைப் போல் பஞ்சையாக இருப்பார்; உருவம் அவ்வளவு பெரியதன்று; மிக மெல்லியதாகவே இருக்கும். கண்கள் பளபளப்பானவை. நோக்கோ சாந்தமயம்; பார்ப்போருக்குப் பரவசமளிக்கும்.

ரோமேன் ரோலண்டுடன் கூடப் பிறந்தது ஒரே யொரு பெண். அப்பெண் அவருக்குச் சிறியவள்; அவருடைய தந்தை வக்கீலாக இருந்தவர்; கிளாமஸி நகரில் செல்வாக்குப் படைத்த பிரமுகர்களில் ஒருவராக விளங்கியவர். அவருடைய தாய் பக்தி சிரத்தை வாய்ந்தவள்; தனது பிள்ளையிடம் பேரன்பு படைத்தவள்.

கல்விச் சாலையில் வாசித்து வந்த சிறு பிராயத்திலேயே

பேராசிரியர்கள், பரம ஞான வீர புருஷர்கள், தர்மாத்மாக்கள் முதலியோரிடம் ரோமேன் ரோலண்டுக்குப் பரமபக்தி விசுவாசம் ஏற்படலாயிற்று. விளையும் பயிர் முளையிலே என்பது பழமொழி. இளம்பிராயம் முதற்கொண்டே சங்கீதத்தில் அவர் பெரிதும் ஈடுபட்டார். மேனாட்டினரின் முக்கியமான சங்கீதக்கருவி பியானோ எனப்படும். ஓய்ந்தநேரங்களிலெல்லாம் அவர் அக்கருவியைக் கையாண்டு, சங்கீதத்தில் சென்றதன் பயனாக, நாடக நூலாசிரியர்களிடம் அவருக்கு மிக்க பிரமை உண்டாயிற்று. அவருடைய மனத்தைக் கவர்ந்த நாடக நூலாசிரியர் ஷேக்ஸ்பியர் என்னும் ஆங்கில மகா கவி. அந் நூலாசிரியரின் நாடகங்களைப் படித்தல் அவருக்குப் பரமானந்தம் விளைக்கும்.

சங்கீதத்திலும் நாடகத்திலும் மிக்க கவனஞ் செலுத்தியதனால், ஒரு பரீட்சையிலே அவர் இருமுறை தவறிவிட்டார். அது பற்றி அவர் வருந்தவில்லை. நாளடைவிலே பெரிய நூலாசிரியர், அல்லது சங்கீத வித்வான், அல்லது கவிவாணர் ஆகிய ஒருவராக ஆகவேண்டுமென்று அவருக்கு ஆதியிலேயே விருப்பமிருந்தது. தத்துவ சாஸ்திரத்தில் அவர் கவனஞ் செலுத்தினார். அப்பால், தேச சரித்திரங்களை ஊன்றிப் படிக்கலானார். இதன்பயனாக, அவருக்கு மனோதிருஷ்டியும், நோக்கமும் விசாலமாயின.

பின்னர், ருஷியா தேசத்துத் தத்துவ ஞானியான டால்ஸ்டாய் என்பவரிடம் அவர் மிக்க பக்தி விசுவாசங் கொண்டார். அதனால், ஜீவகாருண்யம், பரோபகாரம், முதலிய அருங்குணங்கள் அவரிடம் பெருகி வளர்ந்து வந்தன. அந்த ஞானியுடன் கடிதப் போக்குவரவு செய்தபலனாக, மனிதகோடிகளிடம் பேரன்பு காட்டி அவர்களை உயர்த்த வேண்டுமென்ற பரம மனவுறுதி ஏற்பட்டது. ஒருவாறு கலாசாலைப்படிப்பு முடிந்தவுடனே, தேசாபிமான முயற்சி, ஜெர்மன் சங்கீதம், ஞானியின் போதனை, கவிவாணரின் வாழ்வு, ஜீவனோபாயம் ஆகிய எத்துறையில் இறங்குவதென அவர் தத்தளித்தார்.

அப்பொழுது, அவர் உபகாரச் சம்பளம் பெற்று, ரோமாபுரி சென்று, சரித்திர ஆராய்ச்சி செய்யும் வண்ணம் நேர்ந்தது. அதனால் இரண்டு வருஷகாலம் இத்தாலி தேசத்தில் தாமதிக்கலானார். அச்சமயம், மால்விடா வான் மெயிஸன்பர்க் என்னும் ஜெர்மன் மாதின் பழக்கம் ஏற்பட்டது. அம் மாதே சுதந்திர தத்துவ வீரசிங்கங்களான வாக்னர், மாஜினி, கோஸத், கரிபால்டி முதலியவர்களை நேரில் நன்கறிந்தவள். மிக்க உலக அனுபவம் வாய்ந்தவள்; மிகவும் மேலான புத்திப் போக்கும், நடையும் பொருந்தியவள்; ரோமேன் ரோலண்டைப்போல் ஞான விசேஷம் படைத்த வாலிபரைப் பரம உத்தம புருஷராகும் வண்ணம் பண்படுத்தும் ஆற்றல் படைத்தவள். அத்தகைய மாதின் பழக்கம் கிடைத்தது ரோலண்டின் பாக்கியவசமேயாம். அப்போது அம்மாதின் வயது 73. ரோலண்டின் வயது 23. ரோலண்டைத் தனது பிள்ளையையும், மாணுக்கனையும்போல் பாவித்து அவள் பட்சமுடன் நடந்தி வந்தாள். தனது சங்கீத வன்மையினால் ரோலண்டு அம்மாதைக் களிப்பிக்க, அவளோ தனது உயர்ந்த போதனைகளால் ரோலண்டை மகாபுருஷனாக்கி வந்தாள். உலக வாழ்வின் லட்சியத்தையும், நன்மையையும் அம்மாதின் மூலமாகவே ரோலண்டு அறிந்துகொண்டார் என்பதில் தடையில்லை.

இனி, ரோலண்டின் புத்தியோ சங்கீதத்தில் தீவிரமாகச் சென்றது; ஆசையோ கவியாக ஆவதில் பரந்தது; அவசியமோ சரித்திர ஆசிரியப் பதவியில் அவரைக் கொண்டு செலுத்தியது. முப்பதாவது வயதுமுதல் ஓர் இருபது வருஷகாலம் அவர் தமது நண்பரொருவருடன் கூடி ஒரு பத்திரிகையை நடத்தி வந்தார். அக்காலத்திலே அவர் எழுதிய நூல்கள் கொஞ்சமல்ல. அவையனைத்தும் அப்பத்திரிகையிலே பிரசுரமாகி வந்தன.

அக்காலம் நாடகமேடையும், நாடகநூல்களும் மிகவும் சீர்கெட்டுக் கிடந்தன. அதனால் அவர் மிகவும் உயர்ந்த பல அரிய நாடக நூல்களை எழுதி வெளியிட்டார். நாடகத்

தின் மூலம் உலகினருக்குப் புத்திபுகட்ட வேண்டுமென்பதே அவர் கருத்து. அப்பால், பரம ஞான வீரபுருஷர்களின் சரிதங்களை எழுதி வெளியிட்டார். அவருடைய நூல்களும் வியாசங்களும் கருத்துக்களும் பொன்னே போல் போற்றத் தக்கவை. அவை, படிக்கவும் கேட்கவும் ஆராயவும் சிந்திக்க வும் இன்பம் பயக்கவும் அறிவை வளர்க்கும்; ஞானத்தை யூட்டும்; பரிபக்குவமான நிலையைக் கூட்டி வைக்கும்.

அவருடைய அறையில் சென்று பார்த்தால், நான்கு சுவரின் ஓரங்களிலும் மச்சுவரையில் நூல்கள் நிரம்பிக் குவிந் திருக்கும். அப்புத்தகங்களின் நடுவே பரம துறவியைப் போல் அவர் வீற்றிருப்பார்; தூங்குவதென்பது கொஞ்ச நேரமே. சதா சர்வகாலமும் படிப்பதுதான்; அல்லது உலகி னரின் நன்மைக்கான நூல்களை எழுதுவது தான். ஓய்வு என்றால், ஒருவகையான நூல்களை விடுத்து, மற்றொரு வகை யான நூல்களை ஆராய்வதேயாம். எந்தப் புத்தகமானாலும் சரி, அதனைப் படிக்க ஆவல் கொள்வார்; அதில் ஏதாவது புதிய விஷயம், உன்னத லட்சியம் தென்படாதா என்பது தான் அவரது ஆவலாக இருக்கும்.

மேற்கண்டவாறு, சங்கீதத்தில் சீர்திருத்தல் உண்டு பண்ணியும், நாடக மேடையின் மூலம் உலகை நல்வழிப் படுத்தியும், பரோபகாரமாக ஓர் இருபது வருஷ காலம் அவர் பாடு பட்டு வந்தும், அவரைப் போற்றுவார் இல்லை; ஆதரிப்பார் இல்லை; அவர் போதனையை நிர்மல சிந்தை யுடன் மதிப்பாரில்லை. அதோடு அவருடைய பணநிலைமை யும் சௌகரியமாக இல்லை. என்றாலும் அவர் தமக்கு ஒரு பெயரையோ, கீர்த்தியையோ நாடி நின்றதில்லை.

அக்காலத்திலே மனித கோடிகளின் நலத்துக்காக அவர் பல முயற்சிகள் புரிந்தார். அப்போது, அவருடன் கூடவிருந்து உழைத்து வந்த நண்பர்கள் சுய நலத்தினாலும், அசூயையினாலும் நட்டாற்றில் கைவிடுவதுபோல் அவரை விட்டுப் போயினர். அதனால், அவருக்கு மிகுந்த ஏமாற்றம்

உண்டாயிற்று. ஆயினும், அவர் மனமொடிந்து போக வில்லை; தமது முயற்சியையும் விட்டு விடவில்லை; தம் முடைய லட்சியத்தையும் மறக்கவில்லை. இப்படி ஏமாற்றம் நேருவது இயற்கை தான் என்று ஆறுதலடைந்தார்; மேலும் அத்தகைய சமயங்களிலே உத்தம புருஷரின் பாடு களை ஞாபகப்படுத்திக்கொண்டு, தைரியமும், மனவுறுதியும் தீவிரமாகக் கொள்வார். காரியசித்தி ஒரு பெரிதன்று, லட்சியத்தைக் கடைப் பிடித்து உறுதியாக நிற்றலே முக்கியம் என்பதே அவருடைய கொள்கையும், கோட்பாடு மாகும்.

மக்களின் நலத்தையே கருதி ஓர் இருபது வருஷ காலம் ஓயாமல் உழைத்து வந்ததும், அவரைப் பலரும் அவ்வளவாக அறிந்து மதிக்கவில்லை. பிதோவன் என்னும் நூலை எழுதிய பின்பு, சிலர் அவரது அரிய பெரிய போதங்களை மதிக்க லாயினர். அதன் மேல் அவருடைய நூல்களெல்லாம் ஐரோப்பிய பாஷைகளில் மொழி பெயர்க்கப்பட்டன. அது கண்டு பத்திரிகைகள் அவரையும் அவர் தம் நூல்களையும் பாராட்டி எழுதலாயின. அவர் எழுதியுள்ள நூல்களின் பெருமையை நம்மால் விரித்துரைக்க இயலாது. அவர் எழுதிய ஜீன்கிரிஸ்டபி என்னும் ஒரு நூலுக்கு, நமது வங்காள கவிஞருக்குக் கிடைத்தது போல்: 1200 - பவுன் நோபல் வெகுமதி கிடைக்கலாயிற்று. இத்தகைய சில கார ணங்களால் அவருடைய பெயரும், கீர்த்தியும் ஐம்பதாவது வயதில் ஐரோப்பா வெங்கும் பரவி வரலாயின.

கனியைக் கொண்டு மரத்தின் பான்மையை மதிக்க வேண்டும். அங்ஙனமே, ஒருவரது வாக்கையும், நடையையுங் கொண்டு, அவர் குணத்தைக் குறிக்க வேண்டும். நமது ரோமேன் ரோலாண்டின் வார்த்தையும், எழுத்தும் பொன்னே போல் போற்றத் தக்கவை; நடையும் அப்படியே. அவை அனைவரின் மனத்தையும் கவரும்; நல் சிந்தனையை ஊட்டுவிக் கும்; சன்மார்க்க நெறியில் உய்விக்கும். அவர் எழுதியுள்ள பலவாறான நூல்களும் மனிதரின் மனதைப் பண்படுத்தி

சீர்திருத்தக் கூடியவை. அவ்விதம் இராமல் போனல், அவர் நூலுக்கு நோபல் வெகுமதி கிடைத்திருக்குமா?

ஐரோப்பிய மகாயுத்தம் ஏற்பட்ட காலையிலே அவர் இத்தாலி தேசத்திலிருந்தார். யுத்தம் கிளம்பி விட்ட தென்பதைக் கேட்டு, அவர் தமது தினசரிக் குறிப்பில் எழுதியதாவது :—

“ நான் மாண்டு போயிருந்தால் நலமாக இருந்திருக்கும். இக் கோரமான காட்சியை நான் காணவும் கேட்கவும் வேண்டுமா? மனிதர்கள் பித்தேறி விட்ட சமயத்தில், உயிர் வாழ்வது கோரமே; ஐரோப்பிய நாகரிகம் குலைந்து போவதைக் கண்ணுல் காண்பதும் கோரமேயாம். இந்த மகாயுத்தத்தைப் போல், பல நாற்றுண்டுகளாகப் பேரனர்த்தம் எதுவும் விளையவில்லை. மனிதர்கள் அனைவரும் சகோதரப் பான்மை கொண்டிருக்க வேண்டுமென்ற நமது பெரு விருப்பம் மண்ணைக் கவ்வி விட்டதே. யுத்தத்தின் கோரங்களைக் கருதின், சுவாசம் விடுவது கஷ்டமாயிருக்கிறது. அந்தோ? பிரான்ஸின் பாடென்ன, எனது நண்பர்களின் விதிப் பயனென்ன, அவர்களின் சாவென்ன, லட்சோப லட்சக் கணக்கான ஜனங்கள் சொல்ல வொண்ணுத் துயருறுவதென்ன, இவைகளை எப்படிச் சகிப்பது? படுகொலைக் கிடான யுத்தத்திலே மனித கோடிகள் பித்தேறி, தங்களது அரிய உடைமைகளையும், சக்தியையும், புத்தியையும் நாசமாக்குகின்றனரே. அந்தோ! என் மனம் தாளவில்லை. நான் உயிருடனிருந்து யாது பயன்? ஒரே தூக்கமாக நான் ஒழிந்து விடக் கூடாதா?”

மகாயுத்தத்தைக் கண்டு, அவரது உள்ளமும் உடலும் அவ்வாறு துடித்தனவென்றால், அவருடைய பெருந்தன்மையையும், மனோ விலாசத்தையும் நாம் விரித்துரைக்க வேண்டுமோ? யுத்தத்தின் கன கோரத்தையும், ஜனங்களின் கடுங்கோபத்தையும் அடக்க அவர் எவ்வளவோ முயன்று பார்த்தார். ஆயினும் அவரது போதனையைக் கேட்பாரில்லை. எனினும் எந்த விதத்திலாவது ஜனங்களுக்கு ஊழி

யம் புரிய வேண்டுமென அவர் பேராவல் கொண்டார். யுத்த சமயத்தில் ஸ்விட்ஸர்லாண்டு என்னும் தேசம் நடு நிலைமை வகித்திருந்ததல்லவா? காயமடைந்தோருக்கு ரண சிகிச்சை புரிவதும், அன்னாரின் குடும்பத்தாருக்குத் தகவல் கொடுப்பதுமான பரமகாருணியமான வேலையை அத்தேசம் ஏற்றுக் கொண்டது. அப்போது என் கணவன் உயிருடன் இருக்கின்றானா, என் பிள்ளை குணமடைந்து விட்டானா, எனது சகோதரர் எங்கிருக்கின்றனர், என்று நாள்தோறும் லட்சக் கணக்கான கடிதங்கள் வந்து மலைபோல் குவிந்தன. அக்கடிதங்களுக்கெல்லாம் பதிலெழுதி, ஜனங்களுக்கு ஆறுதலளிக்கும் ஊழியத்தில் அவர் பதினெட்டு மாதம் முனைந்திருந்தார். அக்காலத்திலே ஊணிலோ, உறக்கத்திலோ அவர் சிந்தை செல்லவில்லை; கவலை கொண்டு கிடக்கும் குடும்பத்தினருக்கு ஓரளவு ஆறுதலளிப்பதே ஊணும், உறக்கமுமென அவர் மதித்திருந்தார். மகா பண்டிதரான அவர் அவ்வேலை செய்தது பாராட்டத் தக்கதன்றோ?

அத்தகைய ஊழியம் புரிந்து வந்த காலையிலும், அந்தோ! மனிதர்கள் அனைவரும் சகோதரர்கள், ஏன் ஒருவரை யொருவர் வெட்டிக் குவிக்கவேண்டும். அதனால் கிடைக்கக்கூடிய பலன் ஒன்றுமில்லை, என்று போதித்து வருவதை அவர் விட்டு விடவில்லை. ஆதியிலே வெகு பலர் அவரது வார்த்தையைக் கண்டித்து, அவரை இலேசாகப் பேசி வந்தனர்; அரசாங்கத்தாரும் அம் மகான் மீது சந்தேகப்பட்டு, ஒற்றரைக் கொண்டு அவரது நடவடிக்கைகளைக் கவனித்து வந்தனர். யுத்தத்தின் கடுமையும், கோரமும் பெருகி வளர்ந்து ஓங்கியவுடனே, அவரைப் பாராட்டி அவருக்கு நாள் தோறும் கிடைத்து வந்த கடிதங்கள் ஆயிரம், பதினாயிரமாகும். போர் முனையிலே அரணிலிருக்கும் வீரர் என்ன, தாய் மார்களென்ன, மனைவி மக்களென்ன, சாமானிய ஜனங்களென்ன, ஆகிய பலரும் அவ்விதம் கடிதமெழுதினர். அவைகளை ஒரு பொக்கிஷம் போல் அவர் இன்னும் போற்றி வருகிறார்.

மகா யுத்தத்தின் ஐந்து வருஷ காலத்திலும் அவர் நாள்தோறும் தமக்குப்பட்ட கருத்துகளை எழுதி வைத்திருக்கிறார். அவ்வரிய கருத்துக்கள் புத்தக வடிவாக இன்னும் வெளிவரவில்லை. அவருடைய காலத்திற்குப் பின்பே வெளிவரும் போலும்! ஐரோப்பிய தேசத்திலே, அவரைப் போல் மனத்துறவும், மகிமையான கருத்தும், நிர்மல சிந்தையும், நேர்மையான நடையும் கொண்ட உத்தமரைக் காண்பதரிது. நமது ஆதிகால மகான்களைப் போல அவர் விருப்பும், வெறுப்பும் இல்லாதவர்.

அத்தகைய ஒரு பெரியவர் நமது மகாத்மா காந்தியின் வாழ்வையும், ஒத்துழையா இயக்கத்தையும் பற்றி ஓர் நூல் எழுதி யிருக்கிறாரென்றால், அதன் அருமை பெருமையை அளவிட முடியுமோ? மேலெழுந்தவாரியாக அவர் எழுதி விடவில்லை. சிரத்தையுடன் ஆராய்ந்து பார்த்தே அவர் எழுதி யுள்ளார். எழுதிய காலையில் நாம் பிரசுரித்துள்ள,

1. யௌவன இந்தியா, 2. இந்திய சுயராஜ்யம், 3. நீதி தர்மம், 4. சுக வழி, 5. சுதேசிய போதம், 6. மகாத்மாவின் பான்மை, 7. புதிய வாழ்வின் உதயம், 8. மாணவருக்கு ஒரு வார்த்தை

முதலிய பல நூல்களை ஆதியோடந்தமாக ஆராய்ந்து பார்த்தார்; அவ் விதம் ஆராய்ந்தறிந்த பின்பே, "காந்தியே! தாகூரே! தெய்வீக புத்திரர்களே! நீங்கள் இருவரும் இவ்வுலகை நல்வழியில் திருப்புவீர்களாக" என்று மனமார வாழ்த்திக் கூறியுள்ளார்.

அத்தகைய இந்நூலின் விசேஷத்தை, நம் தமிழ் மக்கள் அறியவேண்டி, நமது தாய மொழியில் பிரசுரிக்கலானோம். யாவரும் எளிதில் உணர்ந்து கொள்ளும்படியான இனிய எளிய நடையில் இருக்க வேண்டுமென்று கருதி, அவ்விதமே எழுதுவித்துப் பிரசுரித்துள்ளோம்.

அறிவு முதிர்ச்சியும், ஞானப்பெருக்கும் பெற்று, உயர்

படியில் ஏறி யமர்ந்து விட்டால், கீழ் நாட்டினரென்றும், மேனுட்டின ரென்றும், ஐரோப்பியரென்றும், ஆசியாக்கார ரென்றும், எவ்விதமான ஜாதி, மத, வர்ணபேதமும்தோன்ரு தென்ற உண்மை இந்நூலைப் படிப்போர்க்கு நன்கு புலனுகும். அதைக் கண்டு, அதனையே பிரதிபலனுகக் கொண்டு, நாம் அகமகிழ்வோம்.

வந்தே மாதரம் ! சுபம் !!

உ

# மகாத்மா காந்தி

## அதிகாரம் 1

## முன்னுரை

**மகாத்மா** என்றால், மகா புருஷன் என்று அர்த்தம். அம் மகாத்மா என்பது உபநிஷத்துக்களில் காணப்படும் வார்த்தை. அந்த உபநிஷத்துக்களில் மகாத்மா என்பதற்கு இரண்டு அர்த்தம் உண்டு; ஒன்று, எல்லாம் வல்ல கடவுள் என்பது; மற்றொன்று, ஞானமும் அன்புங்கொண்டு, அக் கடவுளுடன் ஐக்கியமாகும் முக்தன் என்பதாகும். 1921-ம் வருஷம், டிசம்பர் மாதத்திலே காந்தியின் ஆசிரமத்துக்கு (வங்காள கவிஞரான) ரவீந்திரநாத தாகூர் போயிருந்தார். அப்பொழுது, மகாத்மா என்னும் வார்த்தை காணப்படும் உபநிஷத்து வாக்கியத்தை அக்கவிஞர் எடுத்துச் சொல்லி, தேவதூதரான காந்தியை மகாத்மா என்றழைத்தார்.

மகாத்மா காந்தி சிறிய உருவமுள்ளவர்; சரீர பலமும் இல்லாதவர்; கண்கள் இருண்டு சாந்த மயமா யிருக்கும்; காதுகள் பரந்து விரிந்திருக்கும்; அவர் தமது சிரசிலே வெள்ளைத் தலைப்பாகை தரிப்பார்; இடுப்பில் கட்டும் வேஷ்டி வெள்ளையான முரட்டுத் துணி; காலிலே பாதரட்சை போடுவதில்லை; சாதம், பழம், ஜலம் இவையே அவருடைய ஆகாரம்; தரையில் தான் அவர் படுத்துறங்குவார். ஆனால் நெடுநேரம் தூங்குவதில்லை. சிறிது பொழுதே தூங்குவார்;

சளைக்காது வேலை செய்வார். சுருங்கச் சொன்னால், பார்ப்பதற்குப் பஞ்சை.

எனினும், அவரைப் பார்த்தவுடனே பரம சாந்தமும், பேரன்பும் வடிவெடுத்து வந்துளவோ என்று தோன்றும். அவரைத் தென்னாப்பிரிகாவில் பார்த்த வுடனே, பிரான் ஸிஸ் என்பவரின் அவதாரமென நினைத்ததாக பியர்ஸன் என்பவர் சொல்லி யிருக்கிறார். (பிரான்ஸிஸ் என்பவர் 1182-ம் வருஷத்தில் இருந்தவர்; பெருங் குணம் படைத்த மத குரு. சன்மார்க்கம், சாந்தம், வறுமை ஆகிய மூன்றுமே அவருடைய குண விசேஷங்கள். எனவே, நமது காந்தியை நாம் திருவள்ளுவர் போன்றவர் என்று கொள்ளலாம்) தமது விரோதிகளிடமும் அவர் அன்பும் மரியாதையும் காட்டுவார். அவருடைய அடக்கத்திற்கு அளவு கிடையாது; எப்பொழுதாவது தவறிவிட்டால், தவறிவிட்டேன் என்று சொல்லத் தயங்க மாட்டார். தமது குற்றங் குறைகளை அவர் மறைப்பதில்லை; தமது கொள்கையை விட்டுக் கொடுப்பதென்பது அவரிடம் கிடையாது. சாலாக்கும், தந்திரமும் அவரிடம் காணப்படா; வாக்கு வன்மை கொண்டு ஜனங்களை மயக்குவதென்றால், அது அவருக்குப்பிடிக்காது. வாக்கு வன்மை கொண்டு மயச்குவ தென்பதை அவர் கனவிலும் கருதார் என்றே சொல்ல வேண்டும்.

அவருடைய முக விலாசத்தைக் கண்டு, ஜனங்கள் கும்புகூடி ஆனந்த ஆரவாரஞ் செய்வது வழக்கம். இதைக் கண்டால், அவருக்கு வெறுப்பு ஏற்படும். மகாத்மா அல்லது மகா புருஷன் எனப்படும் அப் பெரியவர், தம்மைக் கண்டதும் வணங்கித் துதிக்கும் ஜனக் கூட்டத்தைக் கண்டு, உண்மையில் அலுத்துப் போய் விட்டார். சிலர் மட்டும் தம்மைச் சூழ்ந்திருப்பதில்தான் அவருக்கு சுகமும், நலமும் உண்டு. ஏகாந்தமாக அல்லது தனியே யிருப்பதில் அவருக்கு மிகவும் சந்தோஷம். தன்னந் தனியே யிருக்கையில் அவர் தமது சித்தத்தைச் சிவன்பால் நிறுத்துவார். அப்பொழுது அரிய, பெரிய உண்மைகள் உதிக்கும். அவ்

வுண்மைகளை அவர் நன்கு உணர்ந்து கொள்வார். இதில் தான் அவருக்கு அதிக ஆனந்தம் உண்டு.

இத்தகைய மனிதர்தான் முப்பது கோடி இந்தியரை உறக்கத்தி லிருந்து தட்டி யெழுப்பியவர்; பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை ஆட்டிக் குலுக்கி விட்டவர்; சென்ற இரண்டாயிர வருஷ காலமாக இவ்வுலகில் என்றும் இருந்திராத சக்தியை மனித கோடிகளிடம் மூட்டி விட்டவர்; மனித கோடிகளின் ராஜீய விவகாரங்களிலே அத்தகைய நீதியான இயக்கத்தை உண்டு பண்ணிய முதல் புருஷனுமாவார்.

இளம்பருவம் :—அப் பெரியவரின் முழுப் பெயர் மோகனதாஸ் கரம்சந்த் காந்தி. அவர் 1869-ம் வருஷம் பிறந்தவர்; பிறந்தவிடம் போர்பந்தர் என்னும் சமஸ்தானம். அது இந்தியாவின் வடமேற்குப் பாகத்தில் உள்ளது. அவருடைய தந்தையின் பெயர் கரம் சந்த் காந்தி. இவர் அச் சமஸ்தானத்தின் முதன் மந்திரியாக இருந்தவர். எனவே மகாத்மா காந்தி பணம் படைத்த குடும்பத்தில் பிறந்தவர். சிறந்த புத்தியும், நல்ல பழக்க வழக்கமு முள்ள கோத்திரத்திலும் உதித்தவர்; அவருடைய பெற்றோர்கள் ஹிந்து மதத்திலே ஜெயின வகுப்பைச் சேர்ந்தவர்கள். அஹிம்ஸை என்பது அம் மதபோதனைகளில் ஒன்று. அஹிம்ஸை என்றால், பிறருக்குத் தீமை செய்யா திருத்தலே. இது, ஹிந்து மதத்தின் மிகவும் புராதன லட்சியங்களில் ஒன்றாகும். புத்த பகவானால் பெரிதும் வற்புறுத்திச் சொல்லப் பட்டது; வைஷ்ணவ ஆசார்யர்களால் விசேஷமாகச் சொல்லப்படுவது; அவ் வைஷ்ணவ ஆசார்யர்களின் போதனைகளில் காந்தி மிகவும் ஈடுபட்டவர். அத்தகைய அஹிம்ஸையை அவர் நல்ல வெற்றியுடன் உலகெங்கும் ஓதிப் பரப்பியவர்.

எல்லாம் வல்ல கடவுளுடன் கலந்து கொள்வதற்கு ஞானபலம் அவ்வளவு சிறந்த தன்று; அன்பின் பலமே மிகவும் சிறந்தது, என்பதே ஜெயினரின் கோட்பாடாகும். காந்தியின் குடும்பத்திலே ராமாயணத்தை வரன்முறை

யாகப் படிப்பது வழக்கம். 1921-ம் வருஷம், ஏப்ரல் மாதம் 13-ந் தேதி, தீண்டாதாரின் மகாநாடு நடந்தது. அதன் தலைவரா யிருந்து, தமது குழந்தைப் பருவத்தின் கதையை அவர் நன்கு சொல்லி யிருக்கிறார். இளம் பருவத்திலே பிராமண ரொருவர் அவருக்கு ஆசிரியராக இருந்தார். வைஷ்ணவ கிரந்தங்களிலுள்ள வாக்கியங்களை நெட்டுருப் பண்ணி ஒப்புவிக்கும் வண்ணம் காந்தியை அந்த ஆசிரியர் கட்டாயப்படுத்தி வந்தார். அப்படி நெட்டுருப் பண்ணி ஒப்புவித்து வந்தும், வடமொழியில் வல்லவனாக ஆகவில்லையே என அவர் தமது பிற்காலத்தில் புகார் சொல்லியதுண்டு. ஆங்கிலப் படிப்பில் அவருக்கு வெறுப்புண்டானதற்கு இது ஒரு காரணம். ஏனெனில், அந்த ஆங்கிலப் படிப்பு அவரது தாய் மொழியிலுள்ள அரிய விஷயங்களைக் கிட்டாமற் செய்து விட்டது. என்றாலும், ஹிந்து மத வேதக் கிரந்தங்களில் அவர் நல்ல பயிற்சி யுள்ளவர். ஆனால், வேதங்களையும், உபநிஷத்துக்களையும் மூலத்திலிருந்து அவர் படிக்க முடியவில்லை; ஆங்கில மொழி பெயர்ப்புக்களின் மூலமாகவே படித்திருக்கிறார்.

சிறு பையனாக இருந்த பொழுதே அவருக்குக் கலியாணம் ஆகிவிட்டது. பால்ய விவாகமே ஜாதி யழிவுக்குக் காரணம். இவ் வுண்மையை அவர் உணர்ந்து, பிற்காலத்திலே அக் கெட்ட வழக்கத்தைக் கண்டித்திருக்கிறார். லண்டன் சர்வகலாசாலையில் படிக்கவும், பாரிஸ்டர் பரீட்சை கொடுக்கவும், இருபதாவது வயதில் அவர் இங்கிலாந்துக்குப் போனார். அவருடைய தாயார் பக்தி சிரத்தை யுள்ளவள். ஆதலால், ஜெயின வகுப்புக்குரிய மூன்று சபதங்கள் செய்து கொடுக்கும் வண்ணம் அவள் காந்தியைக் கேட்டாள்; அவ்வாறே அவரும் சபதம் செய்து கொடுத்தார். அவை யாவன, (1) மதுபானம் செய்யா திருத்தல்; (2) மாமிசம் புசியாதிருத்தல்; (3) பிற மாதரைக் கருதா திருத்தல்.

1921-ம் வருஷம், ஏப்ரல் மாதம் 13-ந் தேதி அவர் ஒரு பிரசங்கம் செய்தார்; அதில் காணப்படும் வண்ணம்,

ஐரோப்பாவில் இருந்த காலத்திலே, அவர் பிற மதங்களைப் படித்தறியலானார்; அதனால், கிறிஸ்தவ மதத்தில் சேர்ந்து விடலாமா என அவருக்கு ஒரு சமயம் எண்ணம் உண்டாயிற்று. அது பற்றி அவர் சிறிது காலம் தத்தளித்தார். என்றாலும், ஹிந்து மதத்திலிருந்து தான் ஆனந்தநிலையடையலாமென முடிவிலே அவருக்கு உணர்ச்சியுண்டாயிற்று. 1891-ம் வருஷத்திலே அவர் இந்தியாவுக்குத் திரும்பினார்; திரும்பியதும், பம்பாயிலே ஹைகோர்ட் வக்கீலானார். கொஞ்ச வருஷமானதும், வக்கீல் தொழிலை அவர் விட்டு விட்டார். ஏனென்றால், அது அதர்மமான தொழிலென அவருக்குத் தோன்றிற்று. தாம் வக்கிலாக இருந்த காலத்திலும் சரி, தாம் வாதிப்பதாக ஏற்றுக் கொண்ட தாவாவிலே அதர்மம் உள்ளதெனத் தோன்றின் அதனை அவர் விட்டு விடுவார். அப்படி விட்டு விடுவதாக ஆதியிலேயே உடன்படிக்கை செய்து கொள்வது அவர் வழக்கம்.

அவர் வக்கிலாக இருந்து வந்த காலத்திலே, இந்தியாவில் சிறந்த ராஜீயவாதிகள் பொது நன்மைக்காக உழைத்து வந்தனர். அவர்களுடைய தேச ஊழியத்தை மகாத்மா காந்தி கவனித்து வந்தார். அப்பொழுதே, பிற்காலத்தில் தாம் பிரமாதமாக தேச சேவை செய்ய நேரும் என அவருக்கு நன்கு புலப்பட்டது. அது பற்றி ஆழ்ந்த சிந்தனையும் உண்டாயிற்று. அக்காலத்தி லிருந்த வாலிபத் தலைமுறையார் அந்த ராஜீய வாதிகளிடம் அவ்வளவாக விசுவாசங் காட்டவில்லை; அவர்களை அவ் வாலிபர் மறந்தும் விடலாயினர் என்று சொல்ல வேண்டும். ஆனால் காந்தி மட்டும் அத் தலைவர்களிடம் இன்றும் விசுவாசங் காட்டி நடந்து வருகிறார். உதாரணமாக "யௌவன இந்தியா" என்னும் பத்திரிகையிலும், "இந்திய சுயராஜ்யம்" என்னும் நூலிலும், அத் தலைவர்களின் குணாதிசயங்களை அவர் எடுத்துக் காட்டிப் புகழ்ந்திருக்கிறார். காந்தியின் மனத்தைக் கவர்ந்த இந்தியத் தலைவர்களில் இருவரைக் குறிப்பிட வேண்டும்.

அவ்விருவரில் ஒருவர் பார்ஸி ஜாதியைச் சேர்ந்த தாதா பாய் நௌரோஜி; பம்பாயின் முடிசூடா மன்னரென இவ ரைச் சொல்வதுண்டு. மற்றவரோ, பேராசிரியரும் பண்டி தருமான கோபால கிருஷ்ண கோகுலர். இவ் விருவரும் தேச பக்தியில் இணையற்றவர்கள்; கோகுலரோ இந்திய ராஜ தந்திரிகளிலே சிறந்த ஒருவர்; இந்தியரின் இயற் கைக்கு ஏற்ற படிப்பு வேண்டுமென்று சொல்லி, அதனை மீண்டும் உயிர்ப்பிக்க முயன்றவர். தாதாபாய் நௌரோ ஜியோ (காந்தி கூறும் வண்ணம்) இந்திய தேசிய இயக்கத் திற்குத் தந்தை; காந்தியின் வாலிப உற்சாகத்தை ஓர் ஒழுங்கு படுத்தியவர்; 1892-ம் வருஷத்திலே அஹிம்சை யென்பதை நம் காந்திக்குச் சுட்டிக் காட்டியவர்; ராஜீய வாழ்விலும் அஹிம்சையே ஒப்பற்றது, அதுவே சாந்த மான நிரத்தனம், அதுவே ஆத்ம சக்தி, அதுவே தீமையை அழிக்க வல்லது; அதனைப் பின் பற்றி நின்று, தீமையைத் தீமை கொண்டு எதிர்க்காமல், அன்பு கொண்டு எதிர்க்கலாம், என்றும் அனுபவத்தில் காட்டியவர். அந்த அஹிம்ஸா தர்மம், ஆத்ம சக்தி என்பதே உலகனைத்திற்கும் இந்தியாவி லிருந்து உதிக்கும் மகத்தான படிப்பினை யாகும். அதைக் குறித்து, அப்பால் விரிவாக ஆராய்வோம்.

அரும் போர் :—1893-ம் வருஷத்தில் தான், ராஜீயத் துறைகளில் இறங்கி, காந்தி வேலை செய்யலானார். 1893-ம் வருஷத்திலிருந்து 1914-ம் வருஷம் வரையில் தென்னாபிரிக் காவே காந்தியின் ராஜீய உழைப்பிடமாயிருந்தது. 1914-ம் வருஷத்திற்குப் பிறகு தான், இந்தியாவிலே காந்தி தேச ஊழியஞ் செய்யத் தொடங்கினார்.

ஓர் இருபது வருஷகாலம் தென்னாபிரிக்காவிலே காந்தி பொது நன்மைக்காகப் பாடுபட்டு வந்துமென்ன? அதைப் பற்றி ஐரோப்பியர் கவனிக்கவேயில்லை; இது ஐரோப்பிய ராஜீய வாதிகளின் குறுகிய திருஷ்டியையே காட்டும். ஐரோப்பிய ராஜீயவாதிகள் தாம் குறுகிய திருஷ்டிகொண்டு

விட்டன ரென்றால், ஐரோப்பிய ஆசிரியர்களும் சரி, மதாச்சாரியர்களும் சரி, தத்துவ வாதிகளும் சரி, அப்படித் தான். ஓர் இருபது வருஷ காலம் அங்கே காந்தி உழைத்து வந்தது பெரிதும் போற்றத் தக்கது; ஏனெனில் ஆத்ம சக்தி அப்பொழுது தான் நன்கு புலப்பட்டது; அம்மாதிரி யான சக்தியின் வேகத்தை நாம் நமது நாளில் கண்டதில்லை. ஆத்ம சக்தியின் வேகம் மட்டுமா தென்பட்டது? இடை விடா ஆத்ம தியாகத்தின் வன்மையும் புலப்பட்டது; தவிர, ஆத்ம சக்தியின் முடிவான வெற்றியும் புலப்பட்டது.

1890-91-ம் வருஷத்திலே தென்னாபிரிக்காவில், அதி லும் முக்கியமாக நேட்டாலிலே, ஒரு லட்சத்து ஐம்பதாயி ரம் இந்தியர் குடியேறி யிருந்தனர். அன்னியரான இந்தியர் வந்து குடியேறி யிருந்ததைக் கண்டு, அங்குள்ள வெள்ளையருக்கு வெறுப்பும் விரோதமும் ஏற்பட்டு விட்டன. அந்த விரோதங் காரணமாகவே, அந்த ராஜாங்கத்தார் இந்தி யரை அங்கிருந்து விலக்கி யோட்டிவிட முயன்றனர். உதா ரணமாக, இந்தியர் வந்து குடியேறக் கூடாதென அந்த ராஜாங்கத்தார் தடுத்தனர்; ஏற்கெனவே வந்து, குடியேறி யிருந்த இந்தியரையும் ஒட்டிவிட விரும்பி முனைந்து நின்ற னர். அதை யொட்டி இந்தியருக்குப் பல தொல்லைகள் ஒன்றன் பின் ஒன்றாக ஏற்பட்டன; அவர்களுடைய வாழ்வு சகிக்க முடியாததாக ஆகிவிட்டது; துன்பத்திற்கு இடமான வரிகளென்ன, அவமானத்துக்கு இடமான போலீஸ் விதிக ளென்ன, பகிரங்கமான மானக் கேடுகளென்ன, சித்திரவதை, கொள்ளை முதலியன என்ன, ஆகிய இவைகளால் இந்தியர் படாதபாடு பட்டனர். வெள்ளையரின் நாகரிகத்தைப் பாது காக்கவே, அவ்விதம் செய்வதாக தென்னாப்பிரிக்காவின் ஐரோப்பியர் புகன்றனர். அப்படி யிருக்கையில், 1893-ம் வருஷத்திலே காந்தியின் உதவியை அந்த இந்தியர் நாடி நின்றனர். அவரும் அவ்விதமே உதவி புரிய விரைந்து வந்தார்.

அதன் பின்பே, ஒருபக்கம் மனச்சாட்சிக்கும், மற்றொரு

பக்கம் அரசாங்கம், மிருகத்தனமான ஜனத் திரள் ஆகிய இரண்டுக்கும் மகத்தான போர் மூண்டது. அப்போர் நிகழ்ந்த காலத்திலே, காந்தி வக்கிலாக இருந்து வந்தார். ஆதலின், ஆசியாக்காரரை விலக்கிவிடும் மசோதா சட்ட சம்மதமான தன்று என்று அவர் நியாய பூர்வமாக எடுத்துக் காட்டலானார்; அதற்கு மகாப் பிரமாதமான எதிர்க்கட்சி இருந்தும், முடிவில் அவருடைய கட்சிக்கே வெற்றி கிடைத்தது. பின்பு, தென்னாபிரிக்காவிலுள்ள தமது இனத்தினருக்குப் பிரஜா வுரிமை கிடைக்க வேண்டும், அவ்வுரிமைகளுக்குப் பங்கம் வரக்கூடாது, அவர்கள் கௌரவமாக சுகமே வாழவேண்டும், இதற்கு நாம் வழி தேடி வைக்க வேண்டும், என்று காந்தி கருதினார். அக்கருத்துக் கிணங்க, அவர் சாதாரணமான ஓர் இந்தியனைப்போல் தென்னாபிரிக்காவிலே வாழ்ந்துவரத் தலைப் பட்டார்; வறுமையை மேற்கொள்ள வேண்டுமென்று கருதி, ஏராளமான வருமானம் வரக்கூடிய வக்கில்தொழிலை விட்டு விடலானார்; பரிதாபத்துக்கு இடமான இந்தியரின் கஷ்ட நஷ்டங்களையெல்லாம் தாமும் அனுபவிக்கலானார்; சரீரபலங் கொண்டு எதிர்க்காமல், ஆத்ம பலங்கொண்டு, எதிர்க்காமல் எதிர்க்க வேண்டுமென்ற சத்திய தத்துவத்தை அவர்களுக்கு மீண்டும் மீண்டும் புகட்டி வரலானார்.

டர்பன் நகருக்கு அருகே விவசாயக் குடியேற்ற மொன்றை அவர் ஏற்படுத்தினார். அக்குடியேற்றம் டால்ஸ் டாய் என்பவரின் வழியைப் பின்பற்றியது.

இச் சந்தர்ப்பத்தில் அந்த டால்ஸ்டாய் என்பவரைப் பற்றி ஒரு வார்த்தை. இவர் ருஷியா தேசத்து ஒரு பெரிய தத்துவ ஞானி; சாந்த குண சீலர். இவரிடம் காந்திக்குப் பெருமதிப்பு உண்டு. 1918-ம் வருஷம் காந்திக்கு இவர் எழுதிய கடிதமொன்றை நான் பார்த்தேன். எனது நண்ப ரொருவரின் மூலம் அக் கடிதம் எனக்குக் கிடைத்தது. தென்னாபிரிக்காவிலே காந்தி ஏற்படுத்தி நடத்திய "இந்தியன் ஒபினியன்" என்ற பத்திரிகையை இவர் வாசித்து வந்தவர். சரீர பலங்கொண்டு இந்தியர் எதிர்க்காமலிருந்து வந்ததைக்

கண்டு இவர் அக்கடிதத்திலே வியந்து பேசியிருக்கிறார். அந்த இயக்கம் ஓங்கிப் பரவி வெற்றிபெற வேண்டுமென விரும்பியிருப்பதோடு, "தீமை செய்வோரைச் சரீர பலங்கொண்டு எதிர்க்காமலிருத்தலே அன்பின் துறையும் வழியுமாகும்; அது தான், எல்லா ஆத்துமாக்களும் ஒன்றென உணர்ச்சி கொள்வதுமாகும்" என்றும் சொல்லியிருக்கிறார். இது நிற்க,

டர்பன் நகரிலிருந்த இந்திய ரனைவரையும் காந்தி யழைத்து, ஒவ்வொருவருக்கும் கொஞ்சப் பூமி கொடுத்து, வறுமை விரதங் கொள்வோமென அவர்களிடமிருந்து அரிய சபதம் வாங்கினார். அவரே மிகவும் தாழ்வான வேலைகளெல்லாம் செய்திருக்கிறார். அந் நாட்டிலே இந்தியர் அனைவரும் ஆரவாரமின்றி அந்த ராஜாங்கத்தை எதிர்த்து வந்தனர். நகரங்களில் குடியேறி வேலைசெய்து வந்தவர்களெல்லாம் டர்பன் குடியேற்றத்தில் வந்து குவிந்து விட்டார்கள். அதனால், அந் நாடு நகரங்களிலிருந்த தொழிற் சாலைகளெல்லாம் உயிரற்று ஓய்ந்து போய் விட்டன. அந்த அரசாங்கத்தைச் சரீர பலங் கொண்டு முரட்டுத் தனமாக எதிர்ப்பதென்றால், அது முடியாத காரியம். ஆதலால் மேலே கண்டவாறு, மனோசக்தி கொண்டு அரிய சத்திய நெறியில் இந்தியர் எதிர்க்காமல் எதிர்த்து வந்தார்கள். என்றாலும், எதிரிகளுக்குக் கஷ்டம் நேர்ந்த காலத்திலே, அவர்களை மன்னித்து, அவர்களிடம் அன்பு காட்டுவதில், காந்தி சிறிதும் தவறியதில்லை; அவரைப் போல் எவரும் எதிரிகளுக்கு உதவிபுரிந்து, அன்பு செலுத்தியிருக்க முடியாது.

தென்னாபிரிக்காவின் ராஜாங்கத்துக்கு ஆபத்து நேர்ந்த போதெல்லாம், காந்தி தமது இயக்கத்தை நிறுத்திவைத்து, வலுவில் உதவி புரியப் போயிருக்கிறார். இதற்கு உதாரணம் காட்டுவோம். 1899-ம் வருஷத்திலே 'போயர்' யுத்தம் ஏற்பட்டது. அப்போது, போரில் காயமுண்டோருக்கு ரணசிகிச்சை செய்வதற்காக ஒரு இந்தியக் கூட்டத்துடன் காந்தி போனார். போர் முனையில் குண்டுகள் நாலா பக்கமும் பறந்து கொண்டிருந்தன. அதைக் கவனியாமல்,

காந்தி தமது சகாக்களுடன் சென்று, காயமுண்டோருக்கு வைத்திய உதவி புரிந்தார். அது கண்டு, இரு முறை அந்த அரசாங்கத்தார் அவரையும், அவர் சகாக்களையும் பாராட்டிப் பேசினார்கள். அப்பால், 1904-ம் வருஷத்திலே, ஜொஹானஸ்பர்க் என்னுமிடத்தில் பிளேக் என்ற கொள்ளை நோய் மிகவும் தாண்டவமாடிப் பல உயிர்களைக் கொள்ளை கொண்டு போயிற்று. அப்பொழுதும், நோயாளிகளுக்காக ஒரு வைத்திய சாலையை அவர் ஏற்படுத்தி, அதில் அநேகம் பேருக்கு மருந்து கொடுத்து ஒத்தாசை செய்தார். அதற்கப்பால், 1906-ம் வருஷத்திலே நேட்டாலிலுள்ள பூர்வீகக் குடிகள் ராஜாங்கத்துக்கு விரோதமாகக் கிளம்பினார்கள். அப்பொழுதும் அந்த அரசாங்கத்துக்குச் சாதகமாக காந்தி வைத்திய உதவி புரிந்தார். அது கண்டு நேடால் மாகாண கவர்னரே பகிரங்கமாக அவரைப் புகழ்ந்து பேசி, அவருக்கு வந்தனமளித்தார். அவ்விதம், எதிரிகளிடம் பகை காட்டாமல், அன்பு கொண்டு, காந்தி உதவி புரிந்தது போல், உலகிலே எங்கேனும் யாராவது உதவி புரிந்ததுண்டோ?

வெற்றி மாலை:—மேலே சொல்லியவாறு, பெருந்தன்மையாக காந்தியும் அவர் சகாக்களும் தீரங் காட்டி உதவிசெய்துமென்ன? கறுப்பு மனிதர்களிடம் வெள்ளையர் கொண்டிருந்த விரோதம் தொலையவில்லை. நேட்டால் கவர்னர் காந்தியைப் புகழ்ந்து பேசி அவருக்கு வந்தனமளித்த பின் என்ன நேர்ந்தது? பல முறை காந்தியை அவ் வெள்ளையர் சிறையில் போட்டு வைத்தனர்; கடுங்காவல் தண்டனை விதித்தனர்; கூண்டிலடைத்து வைத்துக் காலையும், கையையும் கம்பிகளிலே கட்டிப் போட்டனர்; ஒரு சமயம் வெள்ளையர் கும்பு கூடி அவரை அடித்துப் புடைத்தனர்; அப்போது, இனி அவர் பிழைக்க மாட்டார் எனவே பலரும் கருதிவிட்டனர்; இவ்விதம் அவர் பட்ட கஷ்டமும், நஷ்டமும், மானக்கேடும், இழிவும் கொஞ்சமல்ல. என்றாலும் அத்துன்பங்களும், அவமானமும் அவருடைய கொள்கையை அசைக்க முடியவில்லை; மற்றும் அவருடைய கொள்கையை

நாளுக்கு நாள் வலுப்படுத்தி வளர்ந்தே வந்தன. பாடு படப்பட ஆத்மசக்தி ஓங்கிப் பரவிக் கொண்டே வந்தது. அப்படி யிருக்கையில், எத்தனை நாள் இப்படிப் பாடு படு வது; இனி, சரீர பலங்கொண்டு எதிர்த்தே ஆகவேண்டும்; இல்லாவிட்டால் முடியாது என்று சிலர் 1908-ம் வருடம் காந்திக்கு வற்புறுத்தினர். அப்பொழுது அவர், பகைவ ரிடம் வீர தீரமான அன்பு காட்டுதலே சிறந்ததென எழுதி வெளியிட்ட "இந்திய சுயராஜ்யம்" என்னும் சிறிய புத்த கம் பொன்னே போல் போற்றத் தக்கது. அப் புத்தகத் தைப் பற்றி அப்பால் பேசுவோம்.

1914-ம் வருஷம் வரையில் எதிர்க்காமல் எதிர்க்கும் போராட்டம் கன மிடுக்காகவே நடந்து வந்தது. 1913-ம் வருஷத்திலும் அந்த இயக்கத்தை மீண்டும் அவர் தொடங் கினர். நேட்டாலிலிருந்து திரான்ஸ்வாலுக்குப் பல்லாயிரம் பேருடன் அவர் போனர். அப்பொழுதும் அவரை அந்த ராஜாங்கத்தார் பிடித்துச் சிறையில் போட்டனர்; அவ ருடன் சிறைபட்ட இந்தியரின் தொகை பல்லாயிரக் கணக் காகும். ஆனல் அத்தனை பெயரையும் அடைத்துவைக்கச் சிறைக் கூடம் இல்லை. ஆதலின் பலரைப் பூமியின் கீழே உள்ள சுரங்கங்களில் அடைத்து மூடி வைத்தனர். எனி னும் இத் தடவையிலே, இந்தியாவெங்கும் இந்தியரனைவ ரும் பிரமாதமாகக் கூக்குரல் போடலாயினர். பொது ஜன வாக்குக்கு இந்தியாவின் ராஜப் பிரதிநிதி இணங்கும்படி ஆயிற்று. ஆதலால், தென்னப்பிரிக்காவின் ராஜாங்கத்தார் செய்வது அநீதமென்று ராஜப் பிரதிநிதி கண்டித்துப் பேசி னர்.

எனவே பரம புருஷரான காந்தியின் சலியா மனவுறுதி யும், ஆத்ம சக்தியின் வேகமும் தலை நிமிர்ந்து நின்று வெற்றி பெறலாயின; தென்னப்பிரிக்கரின் ராஜாங்க மூர்க்க, மிருக பலமோ வீர தீரத்தனமான சாந்த குணத்தின் முன்னிலையில் தலைவணங்கி மண்டிபோடலாயிற்று. இந்தியரின் கட்சிக்குப் பரம சத்துருவான ஜெனரல் ஸ்மட்ஸ் என்பவர் "இந்திய

ருக்கு விரோதமான சட்டத்தை ரத்து செய்ய மாட்டேன்'' என்று 1909-ம் வருஷத்தில் பிடிவாதமாகப் பேசியிருந்த போதிலும், அவரே அச் சட்டத்தை 1914-ம் வருஷம் ரத்து செய்து போட்டார். இந்தியரின் கட்சியை ராஜப்பிரதிநிதியான லார்டு ஹார்டிஞ்சு ஆதரிக்கவே, காந்தியின் பக்கமே எல்லாவிதத்திலும் சாதகமாக முடிவு ஏற்பட்டது. தென்னாபிரிக்காவிலே சுதந்திரமுள்ள தொழிலாளராகத் தங்கிவிட விரும்பும் இந்தியர் அனைவரும் முன் போல் சுதந்திரமாகக் குடியேறலாம் என்று 1914-ம் வருஷத்திலே ஒரு மசோதாவும் ஏற்பட்டது. எனவே, இருபது வருஷகாலம் தியாகஞ் செய்து சாத்விகமாக எதிர்த்து வந்த இயக்கம் வெற்றிமாலை சூடிற்று. அவ்விதம் வெற்றி கிடைத்த பின், மகாத்மா காந்தி இந்தியாவுக்குத் திரும்பினர். அப்பொழுது அவருக்கு ஜனத் தலைவர் என்ற மதிப்பும் ஏற்பட்டது.

---

## அதிகாரம் 2

---

### காந்தி, திலகர்

இந்தியாவுக்குச் சுதந்திரம் வேண்டுமென்ற தேசிய இயக்கம் இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்திலேயே தோன்றி யிருந்தது. 1885-ம் வருஷத்திலே இந்திய காங்கிரஸ் மகா சபை ஏற்பட்டது. அதனை ஏற்படுத்தியவர்களில், ஏ. ஒ. ஹியூம், ஸர் வில்லியம் வெட்டர்பர்ன், ஆகிய இருவரும் முக்கியமாவர். அவ் விருவரும் ஆங்கிலேயர்கள் ; புத்திசாலித் தனமும், தாராள சிந்தையும் பொருந்தியவர்கள். இந்தியாவின் சுக போக நன்மைக்கும் ஆங்கிலேயரின் ஆதிக்கத்துக்கும் இடையே மாறுபாடுகள் ஏற்படாமலில்லை. அவ்விதம் மாறுபாடுகள் ஏற்பட்டும், அவற்றை அவ்விருவரும் சமரஸப் படுத்தி வந்தார்கள் ;

தவிர, அம் மகா சபையிடம் ராஜ விசுவாச உணர்ச்சியிருந்து வரும் வண்ணமும் முயன்று வந்தார்கள்.

எனினும், ருஷியாவைத் தோற் கடித்து, ஜப்பான் வெற்றி பெற்ற வுடனே, அதனைக் கண்டு ஆசியாக்காரர்களின் சுயமதிப்பான கர்வம் தலை தூக்கலாயிற்று. மேலும், ராஜப் பிரதிநிதியாக இருந்த லார்டு கர்ஸன் என்பவரோ தமது செயல்களால் இந்தியருக்குக் கோபமூட்டி வந்தார். இதனால் தேசாபிமானமுள்ள இந்தியர் மனக்கசப்புக் கொண்டனர். இக் காரணங்களால், காங்கிரஸ் மகா சபையாருக்குள்ளே தீவிரக்கட்சியார் என ஒரு கட்சியார் தோன்றினர். பலவந்தமாக வேனும் தேசிய சுதந்திரம் பெற்று விட வேண்டு மென்பது அக் கட்சியாரின் கொள்கை. இக் கொள்கையை தேசத்திலுள்ள சில பலரும் ஆதரித்து வரலாயினர். என்றாலும், பழமையாகவுள்ள கட்சியார், அதாவது சட்ட சம்மதமான வழிகளிலேயே கிளர்ச்சி செய்ய வேண்டுமென்ற கட்சியார், ஐரோப்பிய மகா யுத்தம் ஏற்படும் வரையில் அம் மகா சபையிலே கை மேலாக இருந்து வந்தார்கள். இக் கட்சியின் தலைவர் கோபால கிருஷ்ண கோகுலர். இவர் மனப் பூர்வமான தேசாபிமானி. ஆங்கிலேயருடன் சம்பந்தம் கொண்டிருக்க வேண்டுமென்ற கருத்துடன் நின்றவர். ஆயினும், மகா சபையினருக்குள் தேசிய உணர்ச்சியும் நோக்கும் ஓங்கிப் பரவி விட்டன. அதனால், சுயராஜ்யம் வேண்டுமென அம் மகா சபை கேட்கலாயிற்று. சுயராஜ்யம் என்றால் எப்படி யென்பதைப் பற்றி ஜனத் தலைவர்களுக்குள்ளே ஒரு மனதான அபிப்பிராயம் ஏற்படவில்லை.

ஒரு கட்சியாரோ, ஆங்கிலேயருடன் ஒத்துழைக்க வேண்டுமென்று தெளிவாகச் சொல்லி வந்தனர்; மற்றொரு கட்சியாரோ, ஆங்கிலேயரின் சம்பந்தத்திலிருந்து விலகி விட வேண்டுமென விரும்பி நின்றனர். முதல் சொன்ன கட்சியார் கானடாவும், தென்னாப்பிரிக்காவும் ஒத்துழைத்து, சுயராஜ்யம் பெறவில்லையா என்று சுட்டிச் சொல்லி வந்த

னர். பின் சொன்ன கட்சியாரோ, ஜப்பான் முதலிய தேசங்களைப் பார்த்து, அவற்றின் வழியைப் பின் பற்றக் கூடாதோ என்று பேசி வந்தனர். இத்தகைய சமயத்தில் தான், காந்தி தமது யோசனையைச் சொல்லலானார். அவருடைய வழி முறை அவ்வளவு ராஜரீகமாயில்லாமல், பெரிதும் மதப் பற்றுடையதாக இருந்தது. தவிர மற்ற வழிகளை விட மேலானதாகவும் இருந்தது. என்றாலும், அச் சமயத்திலே தேச நிலைமை யின்னதென்ற விவரம் அவருக்கு நன்கு தெரியவில்லை; ஆதலால் அனுபவ பூர்வமாகத் தமது கருத்தை வற்புறுத்திக் காட்ட அவரால் முடியாது போயிற்று. தென்னுப்பிரிக்காவிலே பல வருஷகாலமிருந்து, சாத்விகப் போர் நடத்தி வந்ததனால், இந்தியரின் ஆத்ம சக்தி எவ்வளவு பலமானதென்றும், அஹிம்சையின் அடங்கா வேகம் எவ்வளவென்றும், அவருக்கு நன்கு தெரியும். என்றாலும், இருபத்து மூன்று வருஷ காலம் அவர் தமது சொந்த தேசத்தில் இல்லாமல் இருந்தாரல்லவா? ஆதலால், தமது சொந்த தேசத்தின் நிலைமையை அவர் கவனித்து வரலானார்; அதோடு தமது நோக்கங்களையும் கருத்துக்களையும் ஓர் உருப்படுத்தி வந்தார்.

ஏமாற்றம்:—1914-ம் வருஷத்திலே ஐரோப்பிய மகா யுத்தம் ஏற்பட்டதல்லவா? அப்பொழுது, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு எதிரிடையாகக் கிளம்பவேண்டுமென அவர் சிறிதும் நினைக்கவில்லை. ஆனால், யுத்தத்திலே வைத்திய உதவி புரிவதற்காக ஒரு இந்தியக் கூட்டத்தைத் திரட்டலானார். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திலே தாமும் ஒரு பிரஜையெனத் தாம் மனப்பூர்வமாக நம்பியதாக 1921-ம் வருஷத்தில் கூட எழுதியிருக்கிறார். இதனை அவர் பல முறை எடுத்தெடுத்துச் சொல்லியுமிருக்கிறார். "இந்தியாவிலுள்ள அங்கிலேயருக்கு" என்று மகுடமிட்டு, 1922-ம் வருஷத்திலே அவர் எழுதிய கடிதத்திலிருந்து இரண்டொரு வாக்கியங்களை இங்கே குறிப்பிடுவோம்:—

"பிரிய நண்பர்களே! சென்ற 29 வருஷ காலமாக

நான் பொது நலத்துக்காகப் பாடுபட்டு வந்தவன். இக்கால மனைத்திலும், என்னைப் போல் எந்த ஆங்கிலேயரும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துடன் ஒத்துழைத்ததில்லை. இங்கிலாந்தின் நன்மையை மதித்து, ஊழியம் புரிந்து வந்த சமயத்தில், நான்கு முறை என் உயிருக்கே ஆபத்து நேரலாயிற்று. ஆங்கிலேயருடன் ஒத்துப் போக வேண்டுமெனவே 1919-ம் வருஷம் வரையில் நான் பேசி வந்தேன். ஏனெனில், ஒத்துழைப்பதால், நலம் உண்டாகுமென எனக்கு மனப்பூர்வமான நம்பிக்கை இருந்து வந்தது."

அவர் மட்டுந் தான் இங்கிலாந்துடன் அவ்விதம் ஒத்துழைத்து வந்தார் என்பதில்லை. 1914-ம் வருஷத்தில் இந்தியர் அனைவருமே இங்கிலாந்துக்குத் தலை கொடுக்க முன் வந்தனர். தர்மத்தையும், நியாயத்தையும் நிலை நாட்டவே யுத்தம் நடக்கிறதென்று சொல்லப்பட்டது. அச்சொல் வெளி வேஷமாகும். எனினும் வெளி வேஷமென இந்தியர் நினைக்கவில்லை. உண்மை யென்றே நம்பினர். அதனாலேயே இந்தியர் தலைகொடுக்கப் போயினர். யுத்தத்தில் உதவி புரிய வேண்டுமென இந்தியாவை இங்கிலாந்து வேண்டிக் கொண்டது. அப்பொழுது, அதன் பலனாக இந்தியருக்குப் பிரமாதமான பல நன்மைகள் கிடைக்குமெனவும் இங்கிலாந்து வாக்களித்தது; யுத்த உதவிக்காகவும், ராஜ விசுவாசத்துக்காகவும், சுயராஜ்யம் கொடுக்கப் படுமென்றும் கூறியது. இந்தியாவுக்கு ஜவாப்தாரியான பொறுப்பாட்சி கிடைக்குமென இந்தியா மந்திரியான மிஸ்டர் மாண்டேகு வாக்களித்தார். அரசியல் திருத்த விஷயமாக இந்தியா மந்திரியும், ராஜப்பிரதிநிதியான லார்டு செம்ஸ்போர்டும் சேர்ந்து, ஒரு யாதாஸ்து எழுதி அதில் கையெழுத்திட்டுப் பிரசுரஞ் செய்தனர்.

1918-ம் வருஷத் துவக்கத்திலே நேச தேசச் சேனைகளுக்கு யுத்தத்தில் பேராபத்து நேரும் போலிருந்தது. அப்பொழுது, அதாவது 1918-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 2-ந்தேதி யன்று, இந்தியர் பேருதவி புரிய வேண்டுமென

இங்கிலாந்தின் முதன் மந்திரியான லாயிட் ஜார்ஜ் வேண்டிக் கொண்டார். அதன் பொருட்டு, டில்லியிலே யுத்த கான்பரன்ஸ் நடந்தது. இந்தியத் தலைவர்கள் அனைவரும் அதற்கு அழைக்கப்பட்டனர்; அப்பொழுதும், இந்தியர் சுதந்திரம் அடையுங்காலம் நெருங்கி விட்டதென அதிகாரிகளால் அறிவிக்கப்பட்டது. ஆதலால், இந்தியர் அனைவரும் உதவி புரிய முன் வந்து, இங்கிலாந்தினிடம் ராஜவிசுவாசம் காட்டினர். அது காரணமாக யுத்த ஊழியம் புரியச் சென்ற இந்தியரின் தொகை 9 லட்சத்து 85 ஆயிரம். இதைத் தவிர, பணத்தாலும், பொருளாலும் இந்தியா செய்த உதவி இவ்வளவு அவ்வளவு அன்று. இதனால், நமது விசுவாசச் செயல்கள் வீண் போகுமோ, தக்க பிரதிப் பிரயோஜனம் கிடைக்கா திருக்குமோ, என்று இந்தியர் மிகவும் நம்பி யிருந்தனர்.

ஆயினும் என்ன? அவை யெல்லாம் கனவாகவே முடிந்தன. பிரான்ஸிலே நேச தேசச் சேனைகளுக்கு நேர்ந்திருந்த பேராபத்து 1918-ம் வருஷக் கடைசியில் விலகிப் போய் விட்டது. அதோடு, இந்தியா புரிந்த பேருதவியும் இங்கிலாந்துக்கு மறந்து போய் விட்டதென்று சொல்ல வேண்டும். யுத்தம் நின்றவுடனே, கவர்ன்மெண்டார் என்ன செய்தனர்? தங்களது உண்மையான சுபாவத்தைக் காட்டி விட்டனர். எப்படி யென்றால், இந்தியாவுக்கு எந்த சுதந்திரமும் கொடுக்கவில்லை. ஆனால் ஏற்கெனவேயுள்ள சுதந்திரத்தையும் பறித்தொடுக்கி விடலாயினர். 1919-ம் வருஷம் டில்லி சட்ட சபையில் நிறைவேறிய ரௌலட் சட்டங்களின் பான்மை எப்படி? ஆபத்துக் காலத்தில் பேருதவி புரிந்த இந்தியாவைக் கொஞ்சமும் நம்ப முடியாதென்பதே அச் சட்டங்களின் அர்த்தமாகும். அச்சட்டங்கள் காரணமாக, யுத்தகாலத்தில் ஏற்பட்ட தேசப் பாதுகாப்புச் சட்டத்தின் மிடுக்கும், ரகஸ்யப் போலிஸாரின் தொந்தரவும், இன்னும் இவை போன்ற கொடுமையான அமுல்களும், நீடித்து நிற்கலாயின.

அப்படி இந்தியர் ஏமாற்ற மடைந்தவுடனே, அவர்களுக்குத் திடீரென உணர்ச்சி மாறலாயிற்று; கொதிப்பும் கிளம்பியது. அதனை ஒழுங்குபடுத்தவே காந்தியும் முன் வந்தார்.

இரு பெரியார் :—அதற்கு முன் வருஷங்களிலே, ராஜீய விஷயங்களில் காந்தி தலையிடவில்லை. விவசாயிகளின் நிலைமையை உயர்த்தி, அவர்களைக் கைதூக்கி விடுவதிலேயே அவர் கவனஞ் செலுத்தி வந்தார். யாதொரு படாடோபமும் இல்லாமல், கெய்ரா, சம்பரான் ஆகிய இரண்டு இடங்களிலும் அஹிம்ஸை யென்னும் அழியா ஆயுதத்தின் சக்தியை அவர் உலகறியக் காட்டி, வெற்றி பெற்றார். அதன் பின்புதான், அந்த அஹிம்ஸா சக்தி, அல்லது ஸத்தியாக்கிரகம் என்பதை தேசியப் போராட்டத்திலே அவர் கையாளத் தொடங்கினர். இச்சக்தியைக் குறித்து, இந்நூலின் மற்றோரிடத்தில் பேசுவோம்.

1919-ம் வருடம் வரையில் ராஜீயக் கிளர்ச்சியில் அவர் கலந்து கொள்ளவில்லை. அப்பொழுது, தீவிர கட்சியினரான இந்தியர் அனைவரும் லோகமான்ய பால கங்காதர திலகரைத் தலைவராகக் கொண்டிருந்தனர். இப்பெரியவர் மகத்தான சக்தியும், மனவுறுதியும் பொருந்தியவர்; புத்தி கூர்மை, மனோதிடம், சன்மார்க்கம் ஆகிய மூன்று அருங்குணங்களும் இவரிடம் கட்டுப்பட்டுக் கிடந்தன. காந்தியைக் காட்டிலும் இவர் புத்தி வன்மை வாய்ந்தவர். மேலும், ஆசியாவுக்குரிய நாகரிகத்தில் நல்ல ஞானமுள்ளவர்; மகா பண்டிதர்; பேரறிவாளி; தேச சேவைக்காக எல்லாவற்றையும் தியாகம் செய்தவர். காந்தியைப் போலவே சுயநலம் கருதாதவர்; தமது தேச மக்களின் லட்சியம் கைகூடியவுடனே, ராஜீயக் கிளர்ச்சியிலிருந்து விலகிப் போய், ஏகாந்தமா யிருந்து, அறிவு வளர்ச்சிக்கான வழியில் காலங் கழிக்க வேண்டுமென்ற கருத்துக் கொண்டிருந்தவர். உயிருடன் இருந்தவரையில், அவர்தான் பிரதம ஜனத்தலைவராக

விளங்கினர். 1920-ம் வருடம் ஆகஸ்டு மாதம் இவர் அகால மரணமடைந்தார்.

இல்லையானல், இந்தியாவின் முன்னேற்றம் மிகவும் விசேஷமாக முடிந்திருக்கும். அதனை யார் அளவிட்டுச் சொல்லமுடியும்? திலகரின் புத்திகூர்மையைக் கண்டு, காந்திக்குப் பக்தி விசுவாசம் உண்டு. என்றாலும், தேசிய இயக்கத்திலே திலகரின் வழி முறைகளில் காந்திக்குப் பிடித்தம் கிடையாது. திலகர் உயிருடன் இருந்திருப்பாரானல், தேசிய இயக்கத்திலே மத சம்பந்தமான துறைகளில் மட்டும் காந்தி கவனஞ் செலுத்தியிருப்பார். இவ்விதம் ஒரு பெருந் தலைவர் ராஜீயத் துறைகளில் உழைத்து வர, மற்றொரு மகான் மத சம்பந்தமான வழிகளில் உழைத்து வர, இந்திய மகாஜனங்களின் சக்தி எவ்வளவோ விசேஷமாக இருந்திருக்கும்! அப்பொழுது, மகா ஜனங்களை யடக்கி யொடுக்க, யாவராலும் ஆகாது; எதனலும் ஆகாது. ஏனெனில், ஆத்ம சக்தியில் காந்தி பரம புருஷராக இருப்பது போலவே, திலகரும் ஜனத்திரள்களின் ஒரு மனதான செயல்களை உருப்படுத்தி நடத்துவதில் வல்லவரா யிருந்தார். எனினும் விதியோ வேறு விதமாக இருந்து விட்டது. திலகரின் மரணத்தைக் கண்டு அனைவரும் வருந்தவேண்டும்; இவருடைய மரணம் இந்தியாவுக்கு மட்டுமன்று, காந்திக்கும் நஷ்டமேயாகும்.

பெரும்பாலான ஜனங்களின் தலைமையை வகித்து நடத்தும் வண்ணம் திலகரை காந்தி விட்டிருப்பார். பெரும்பாலான ஜனங்களைக் கொண்டு காரியங்கள் நடத்துவதில், மிக்க பலனுண்டென்பது திலகரின் நம்பிக்கை. ராஜரீக விஷயங்களில் மும்முரமாக வேலை செய்யும் பொழுது, மதவிஷயங்களைத் திலகர் அவ்வளவாகப் பொருட்படுத்தார். ராஜீய விஷயங்களுக்கும், சாதுக்களுக்கும் வெகு தூரம் என்று திலகர் சொல்லுவது வழக்கம். இம் மகா பண்டிதர் தேச சுதந்தரத்தை மதித்து, ஸத்தியத்தையும் தியாகம் செய்யக் கூடியவர். இதனல், இவரை அசத்தியவான் என்று சொல்லிவிட

முடியாது. இவர் மகா சத்திய சந்தரே. இவரது வாழ்வில் யாதொரு குற்றமுங் குறையும் காட்ட முடியாது. ஆயினும், ராஜீய விஷயமாக உழைத்து முபதும்பொழுது, எதையும் இசய்யலா மென்று இவர் அடிக்கடி சொல்லி வருவார். இத்தகைய மகா புருஷனும், ருஷியாவிலே கொடுங்கோலை வீழ்த்திய லெனின் என்பவரும் ஒரு விதத்தில் ஒரளவு ஒருமித்த கருத்துள்ளவ ரெனலாம். காந்தியின் கொள்கை களை போல்ஷிவிக்கரின் கொள்கைகளுடன் சம்பந்தப் படுத்த முடியாது. இப்படியே காந்தி தெளிவாகச் சொல்லி யுள்ளார்.

காந்தியும், திலகரும் பல சமயம் கலந்து பேசியிருக் கின்றனர். அதன் பலனாக இருவர் வழிகளிலுமுள்ள வித்தி யாசங்கள் நன்கு புலப்பட்டன; என்றாலும் ஒருவர் மீது ஒருவருக்குள்ள அன்புக்கும், பக்திக்கும் அளவு கிடையாது. "அவசியமானால், சத்தியத்தை நிலைநாட்ட வேண்டி, சுதந் திரத்தையும் விட்டுக் கொடுப்பேன்" என்று காந்தி பகிரங்க மாகச் சொல்லியிருக்கிறார். தேசத்தைக் காட்டிலும் மதமே சிறந்ததென்பது காந்தியின் கருத்து. உதாரணமாக, "இந்தியாவினிடம் எனக்குப் பேரபிமானம் உண்டு. ஏனெனில், எனக்குள்ளன வெல்லாம் இந்தியாவிலிருந்தே கிடைத்துள்ளன. உலகனைத்திற்கும் போதிக்கும் படியான பாக்யமும், கடமையும் இந்தியாவுக்கு உள. வாள் வலியும், தோள் வலியும் சிறந்தன என்று இந்தியா கருதுமாயின், அது எனக்குச் சோதனை காலமாகும். அப்பொழுது நான் இந்தியாவை எதிர்த்து நிற்கத் தயங்க மாட்டேன். உலகி லுள்ள அனைவரும் சுகமே வாழ்ந்து வர வேண்டுமென்பது தான் எனது மதமாகும்" என்று சொல்லியிருக்கிறார்.

மேலே காட்டிய வார்த்தைகள் மிகவும் விசேஷமாகும். அவற்றின் உண்மையை உணரின், இந்திய தேசியப் போராட்டத்தின் பான்மையை யாவரும் நன்கு கண்டு கொள்ளலாம். மனித கோடிகளிலே பல ஜாதிகளிருக்கலா மாயினும், எல்லாரும் ஒரே இனமாகு மென அவர் கூறுதல்

தெய்வ வாக்கியம் போலாகும். ஆதலின், மனித கோடிக ளாகிய நாமனைவரும் சுகமே வாழ வேண்டுமென்ற கருத் துடன் தான், சென்ற நான்கு வருட காலமாக இந்தியாவில் ராஜரீக தர்ம யுத்தம் நடந்து வருகிறது.

---

## அதிகாரம் 3

---

### காந்தி தத்துவம்

மகாத்மா காந்தி ஜனத் தலைமை வகித்ததில் ஒரு விசே ஷம் உண்டு. ரௌலட் சட்டம் ஏற்பட்டதைக் கண்டு ஜனங்கள் கொதித் தெழுந்தனர். அக் கொதிப்பு மூர்க்க மாக முடியுமோவென அவருக்கு அச்சம் உண்டாயிற்று. ஆதலின் அக் கொதிப்பு மூர்க்கத்தில் முடியாமல், சத்யாக் கிரகத்தில் முடிய வேண்டுமென்றே அவர் ஜனத் தலைமை வகிக்கலானார். இது மிகவும் விசேஷமானதும். கொதிப்பு கிளம்பி விட்டது, அதனை ஒழுங்கு படுத்தி நடத்த வேண் டும் என்று அவர் கருதினார். இந்தியாவின் இராஜீயப் போக்கை நன்கு அறிந்து கொள்ள வேண்டுமானால், இரண்டு விஷயங்களைக் கவனிக்க வேண்டும்.

மகாத்மா காந்தியின் தத்துவத்திலே இரண்டு அம்சம் உளது. முதலாவது அம்சம் யாதெனில், திடமான மதப் பற்றாகும். இரண்டாவது, சமூகச் சீர்திருத்தம். அச் சமூ கச் சீர்திருத்தத்தில் அவர் தமது இஷ்டப்படி காரியஞ் செய்வதில்லை. தேசத்தில் உள்ள நிலைமையும், ஜனங்களின் அபிப்பிராயத்தையும் தழுவியே அவர் காரியம் நடத்து கிறார். இயற்கையாகவே அவருக்கு ஆழ்ந்த மதப்பற்றுண்டு. அவசியமாக இருப்பதனால் தான், அவர் ராஜீய வாதியாக இருக்கிறார்.

இந்தியாவிலே காலப் போக்கு மாறி விட்டது, அதோடு இதர ஜனத் தலைவர்களும் மறையலாயினர். இதனால் தான், காந்தி ஜனத் தலைமை வகிக்கும்படி ஆயிற்று. மகாத்மா காந்தியின் காரியங்களெல்லாம் மதத்தையே ஆதாரமாகக் கொண்டவை. அந்த அடிப்படையின் மீது தான், ராஜீய விஷயமாக அலங்காரமான மாளிகைகளைக் கட்ட வேண்டு மென்பது அவர் கருத்து. எனவே அவரது தத்துவங்களெல்லாம் மதத்தைத் தழுவின என்பதை நாம் நன்கு உணர்ந்து கொள்ள வேண்டும்.

ஹிந்து மதம் :—இந்தியரில் பலர் ஹிந்து மதத்தினர்; மகாத்மா காந்தியும் அம் மதத்தில் வைராக்யம் கொண்டவர். ஆனால், ஹிந்து மதக் கிரந்தங்களை வாசக விநோதத்துக்காக மகா பண்டிதன் படிப்பது போல் அவர் படிப்பதில்லை. அல்லது பரம்பரை வழக்கமெல்லாம் சரியே என ஒரு பக்தன் கண் மூடித்தனமாக நம்புவது போலவும், அவர் நம்புவது கிடையாது. மனச் சாட்சிக்கும், தர்க்கத்துக்கும் ஒத்து வந்தால் தான், மதக் கோட்பாடுகளை அவர் ஒப்புக்கொள்வார். உதாரணமாக, "மதம் மதம் என்று சொல்லிக் கண் மூடியாக நின்று நான் கும்பிட்டேன். மதக் கோட்பாடு என்று சொல்லி இழைக்கப்படும் எந்தத் தீமையையும் நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். மிகவும் புராதனமான சாஸ்திரங்கள் தெய்வத் தன்மை பொருந்தியனவே. ஆயினும் அச் சாஸ்திரங்களில் உள்ள விஷயங்கள் எனது புத்திக்கும் விவகாரத்துக்கும் ஒத்து வராமற் போனால், சாஸ்திரங்களின் தெய்வத் தன்மையை மறுக்கவும் நான் தயார்" என்று அவர் எழுதி யிருக்கிறார்.

தவிர, ஹிந்து மதத்தில் மட்டுமே தனிப்பட்ட தெய்வீகத் தன்மை உண்டென அவர் கருதுவதில்லை. உதாரணமாக, "வேதங்களுக்கு மட்டுமே தனிப்பட்ட தெய்வீகத்தன்மை உளதென நான் நம்பமாட்டேன். கிறிஸ்தவரின் வேதமாகிய பைபில், முகம்மதியரின் வேதமாகிய குர்-ஆன் முதலியனவும் ஹிந்து வேதங்களைப் போல் தெய்

வீகம் பொருந்தியவை. உலகத்தில் போற்றப்படும் ஒவ்வொரு தீர்க்கதரிசியையும் போற்றலாம் எனவே வேதம் சொல்லுகிறது. தன்னுடைய கொள்கை அல்லது தர்மத்தின் படி கடவுளை வணங்க வேண்டுமென்று தான் வேதம் விளம்புகிறது. இதனால் எல்லா மதத்தினிடமும் சமரஸங் காட்டவேண்டுமென்பது வெளிப்படை. மதங்கள் பலவாறாயினும், ஏகமாக கடவுளை யடைய அவை ஒவ்வொன்றும் ஓரொரு வழியாகும்" என்றும் அவர் எழுதி வைத்திருக்கிறார்.

சென்ற பல நூற்றாண்டுகளுக்குள் ஹிந்து மதத்திலே பல பிழைகளும், கெட்ட வழிகளும் வந்து புகுந்து விட்டன. அவைகளை அவர் கவனிக்காமலில்லை. கவனித்துப் பார்த்து, உடனே கண்டித்திருக்கிறார். உதாரணமாக,

"எனது மனைவியிடம் எனக்கு எவ்வளவு அன்பு உண்டோ, அவ்வளவு அன்பு ஹிந்து மதத்தினிடமும் எனக்கு உண்டு. என் மனைவி என்னிடம் மிகவும் நெருங்கிப் பழகுகிறாள். ஆதலின் என் மனைவியை நேசிக்கிறேன். இதனால் என் மனைவியிடம் குற்றங் குறை இல்லையென அர்த்தமில்லை. எனக்குத் தெரிவதைக் காட்டிலும், அதிகமான குறைகள் அவளிடம் உள. என்றாலும், நாங்கள் ஒருவரை யொருவர் விட்டுப் பிரிய முடியாது. அவ்வளவு பந்தம் எங்கள் இருவருக்கும் ஏற்பட்டு விட்டது. அதே மாதிரி ஹிந்து மதத்தினிடம் குற்றமும், குறையும் இருப்பினும், நான் அதனை நேசியாமலிரேன். பகவத் கீதையென்ன, துளசிதாஸரின் ராமாயண மென்ன, ஆகிய இரண்டும் என்னைக் கவர்ந்து விடுவது போல், எதுவும் என்னைக் கவர்வதில்லை. ஹிந்துக்களின் கோயில்களிலே பாபம் நடக்கிறதென எனக்குத் தெரியும். என்றாலும் கோயில்களிடம் எனக்குப் பக்தி விசுவாசம் உண்டு. அடிமுதல் நுனிவரையில் சீர்திருத்தம் செய்யவேண்டு மென்பதே எனது கொள்கை. அப்படி நான் சீர்திருத்தக்காரனாக இருந்தபோதிலும், ஹிந்து மதத்திலுள்ள ஜீவாதாரமான லட்சியம்

எதையும் நான் மறுக்க மாட்டேன்" என்று அவர் எழுதி யுள்ளார்.

உயிர் நிலை உண்மை:—ஹிந்து மதத்திலுள்ள உயிர் நிலையான உண்மைகளை ஒப்புக்கொள்வதாக அவர் சொல்லு கிறார். அவை யென்ன? "யௌவன இந்தியா" என்னும் பத்திரிகையில், அவை என்னவென்று அவர் சொல்லியுள் ளார். அவர் சொல்லியிருப்பதாவது:—

1. வேதங்கள், உபநிஷத்துக்கள், புராணங்கள், மற்று முள்ள ஹிந்துமதக் கிரந்தங்கள் ஆகிய இவைகளை நான் நம்பு கிறேன். எனவே அவதாரங்களும், மறுபிறப்பும் உண்டென் பதை ஒப்புக் கொள்ளுகிறேன்.

2. வர்ணாசிரம தர்மத்தையும் நம்புகிறேன். ஆனால் அந்த வர்ணாசிரம தர்மம், வேதத்தில் சொல்லிய வண்ணம் இருக்க வேண்டும். இப்போது உலக வழக்கில் உள்ள வர்ணா சிரம தர்மத்தை நான் நம்புவதில்லை.

3. சாதாரணமாக ஜனங்கள் கருதி யிருப்பதை விட இன்னும் மேலான முறையிலே பசு சம்ரட்சணையில் நான் நம்பிக்கை கொண்டவன்.

4. விக்கிரக ஆராதனையை நான் நம்பாமலில்லை.

மேற்கண்ட வாக்கியங்களை ஆராய்ந்து பார்க்கும் எந்த ஐரோப்பியரும் மகாத்மா காந்தியின் மனப் போக்கை நன்கு கண்டு கொள்ளலாம். ஆனால், ஐரோப்பியராகிய நம்மவரின் மனப்போக்கோ கால தேச வர்த்தமானத்துக்கு ஒவ்வாதது; எனவே அவருடைய மனப்போக்கின்படி நாம் நடக்க முடியு மா, நடந்தால்தான் சரியாக இருக்குமா, என்று ஐரோப்பியர் கருதுவர். என்றாலும், இன்னும் தெளிவாக அவர் சொல்லி யிருப்பதைப் பார்ப்போம்.

"பரிபூரணமான அஹிம்ஸை நிலைமை யடையாதவ னும் சரி, சத்தியத்தைக் கடைப் பிடிக்காதவனும் சரி, தன்

னடக்கமான பிரம்மசரிய விரதமில்லாதவனும் சரி, பொன்னுசையைக் கைவிடாதவனும் சரி, சாஸ்திரத்தை உணராதவர்கள் என்று ஹிந்து மதம் போதிக்கிறது. இதனை நான் அப்படியே நம்புகிறேன்."

எனவே மேற்சொன்ன ஹிந்து மத போதனையும் கிறிஸ்தவராகிய நமது மத போதனையும் ஒத்திருக்க வில்லையா? ஹிந்துமத போதனையும் கிறிஸ்துமத போதனையும் ஒன்றையொன்று ஒத்துள. இதனை மகாத்மா காந்தி நன்கறிந்தவர். தமது மனத்தை மிகவும் கவர்ந்த புத்தகம் எதுவென்று ஒரு சமயம் மகாத்மா காந்தியை ஒரு பாதிரி கேட்டார். அதற்கு அவர் முதலில், கிறிஸ்தவரின் வேத நூலாகிய "புதிய ஏற்பாடு" என்று சொன்னார். அவர் எழுதியுள்ள "நீதி தர்மம்" என்னும் நூலின் முடிவிலே ஏசுநாதரின் வாக்கியமொன்றை அவர் குறிப்பிட்டிருக்கிறார்.

இனி, ருஷிய தத்துவ ஞானியான டால்ஸ்டாய் என்பவரின் நூல்களிலும் ஆசியாக்காரரான மகாத்மா காந்தி பெரிதும் ஈடுபட்டவர் என்பதையும் நாம் கவனிக்க வேண்டும். இன்னும் அமெரிக்காவிலும், ஐரோப்பாவிலும் இருந்த தத்துவ ஞானிகளில் பலருடைய நூல்களை அவர் வாசித்திருக்கிறார்; சில நூல்களை மொழி பெயர்த்து மிருக்கிறார். எனவே, மகா புருஷனான மகாத்மா காந்தியின் கருத்துக்களும், எண்ணங்களும் புதியன என்பதாக எந்த ஐரோப்பியரும் எண்ண வேண்டாம். சரியான உணர்ச்சியுடன் ஆராய்ந்து பார்ப்பின், அவருடைய கருத்துக்கள் எல்லாருக்கும் ஒப்ப முடிந்தன என்று புலப்படும். தவிர அக்கருத்துக்கள் முதலில் வியப்பை உண்டுபண்ணினாலும், முடிவிலே அவைகளின் ஆழ்ந்த அர்த்தம் நன்கு தெரியவரும். மகாத்மா காந்தியின் கருத்துக்கள் நான்கிலே இரண்டு, ஐரோப்பிய மதஉணர்ச்சிக்கு ஒத்துவராததாகக் காணப்படலாம். அவ்விரண்டும், பசு சம்ரட்சணை, வர்ணாசிரம தர்மம் என்பன; அவ்விரண்டையும் அவர் எப்படி அர்த்தம் பண்ணுகிறார் என்று பார்ப்போம்.

பசு, வர்ணாசிரமம் :—காந்தியின் போதனைகளிலே, பசு

பரிபாலனமும், வர்ணுசிரம தர்மமும் முக்கியமே. பசு பரி பாலனம் ஹிந்து மதத்தின் விசேஷம். பசு பரிபாலன விஷயத்தில் மனித கோடிகளின் முன்னேற்றத்துக்கு வழி யுண்டென்பது அவருடைய கருத்து. எப்படி யென்ருல், "ஜீவராசிகளிலே மனிதரைத் தவிர்த்த மற்றவைகளின் பிரதிநிதியாகவே பசு உளது. பசுவைப் பரிபாலனம் செய் வதிஞல், மனிதனுக்கும் மிருகத்துக்கும் இடையே சமரஸ மான கட்டுப்பாடு ஏற்படுகிறது" என்று அவர் சொல்லுகிருர். மற்ற மிருகங்களெல்லா மிருக்கையில், பசுவை மட்டும் விசேஷ மாக எடுத்துச் சொல்வதேன் என்ருல், அது மிகவும் சாந்த மான பிராணி, மனிதனுக்குப் பல வழிகளிலும் மிகவும் உப யோகமானது; பசுவைப் பரிபாலிக்க வேண்டும் என்பதில் உள்ள மறைவான அர்த்தம் என்ன வென்ருல், எல்லா ஜீவ ராசிகளிடத்திலும் மனிதன் பட்சமாக இருக்கவேண்டு மென் பதே. அதன்படி, ஜீவராசிகளிடமெல்லாம் அன்பு காட்டா மல், பசுவை மட்டும் பரிபாலித்து வருவது போதவே போதாது, என்று அவர் பலமாகக் கண்டிக்கிருர். இந்த உண்மையை மதித்துப் பார்ப்பின், பசு சம்ரட்சணை விசேஷ மென நன்கு புலப்படும். எனவே, பசு சம்ரட்சணை ஹிந்து மதத்தின் விசேஷ போதனை யென அவர் சொல்வது சரியே. கிறிஸ்தவரின் வேத புத்தகமாகிய பைபிள் என்பதிலும் "உன்னை நேசிப்பது போலவே உன் அயலானையும் நேசிப்பா யாக; உயிருள்ள எந்தப் பிராணியும் உனது அயலானே யாகும்" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

வர்ணுசிரம தர்மத்தின் உள்ளர்த்தத்தை உணர்ந்து கொள்வதும் ஒப்புக்கொள்வதும், ஐரோப்பியருக்கு மிகவும் கஷ்டமாகத்தான் இருக்கும். வர்ணுசிரம தர்மத்தின் அடிப் படை என்னவென்ருல், மனித கோடிகளிலே அல்லது ஜன சமூகத்திலே ஒவ்வொரு பிரிவும் ஒவ்வொரு காரியத்தைச் செய் தால் தான், உலகம் நன்கு நடக்கும் என்பதாகும். இதனுல் ஒரு பிரிவு உயர்வானது என்றும், ஒரு பிரிவு தாழ்வானது என்றும் அர்த்தமில்லை. அவர் சொல்லும் வண்ணம், வர்ணு

சிரம தர்மம் மனிதர்களின் இயற்கைக்கு ஒத்தது. ஹிந்து மதமானது அதனை ஓர் ஒழுங்கு படுத்தி யிருக்கிறது.”

ஜாதிகள் நான்கு என்று தான் அவர் சொல்லி யிருக்கிறார். அவை பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர ஜாதிகள் ஆகும். பிராமணர் என்போர் தமது புத்தியினாலும், பாரமார்த்திக வழிகளாலும் இதாருக்கு ஊழியம் புரிய வேண்டும்; க்ஷத்திரியர் என்போர் தமது புஜ பல பராக்கிரமத்தினால் ஊழியம் புரியவேண்டும். வைசியர் என்போர் தமது வியாபாரத்தினால் ஊழியம் புரியவேண்டும்; சூத்திரர் என்போர் தமது சரீரத்தினால் ஊழியஞ் செய்ய வேண்டும். ஆகலின், ஒருஜாதி உயர்ந்தது என்றில்லை, ஒன்று தாழ்ந்தது என்றில்லை யென அவர் சொல்லுகிறார். அம்முறை ஒவ்வொரு ஜாதிக்கும் ஒரொரு தொழிலை ஏற்படுத்தி யிருக்கிறதே யன்றி வேறன்று. கடமையைச் செய்ய வேண்டுமென்பதில் சலுகையும், உயர்வும் எப்படி உண்டாகும்? இது விஷயமாக அவர் சொல்லி யிருப்பதாவது:—

“ஒருவருக்கு உயர் பதவி யளிப்பதென்பதும், ஒருவருக்குக் கீழ்ப் பதவி யளிப்ப தென்பதும், ஹிந்து மத விசேஷத்துக்கு ஒவ்வா. கடவுள் சிருஷ்டியில் ஊழியம் புரியவே எல்லாரும் பிறந்திருக்கிறார்கள். பிராமணன் தனது அறிவினாலும், க்ஷத்திரியன் தனது புஜபலத்தினாலும், வைசியன் தனது வியாபாரத் திறமையினாலும், சூத்திரன் தனது சரீரத்தினாலும் உழைக்க வேண்டும். இதனால், பிராமணன் சரீர ஊழியம் புரிய வேண்டியதில்லை யென்றாவது, தன்னையும் பிறரையும் காத்துக்கொள்ளாமல் இருந்துவிடலாமென்றாவது அர்த்தமில்லை. பிராமணனாய்ப் பிறக்கு மொருவன் அறிவைப் பரப்பும் மேம்பாடு உள்ளவனாகிறான். பரம்பரையினாலும், பழக்கத்தினாலும், பயிற்சியினாலும், அவன் அதற்கு மிகவும் தகுதியுள்ளவனாகிறான். இனி, சூத்திரனாகப் பிறக்குமொருவன் தான் விரும்பும் அறிவு, வித்தை முதலியவற்றை வேண்டுமளவு தேடிக் கொள்ளலாம். அதில் அவனை யாரும் சரி,

எதுவும் சரி, தடுக்க முடியாது. ஆனால் சூத்திரன் தனது சரீரத்தினால் ஜன சமூகத்திற்குப் பேரூழியம் புரியலாம் என்பதே வர்ணசிரம தர்மத்தின் கருத்து. ஜன சமூகத்துக்கு ஊழியம் புரிவதில் பிறருக்குள்ள விசேஷ குணங்களைக் கண்டு அவன் அசூயை அடைய வேண்டியதில்லை. புத்தி விசேஷத்தினால் மேம்பாடு வேண்டுமென்று விரும்பும் பிராமணன் அப்புத்தி விசேஷமில்லாதுபோனால், தன் பதவியை யிழந்து விடுவான். தன்னடக்கம், தியாகம், சக்தியை வீணாக்காதிருத்தல், இவையே வர்ணசிரம தர்மத்தின் கருத்துக்கள்."

வர்ணசிரமம் தன்னல மறுப்பையே ஆதாரமாகக் கொண்டது. விசேஷ உரிமையை அல்லது சலுகையை ஆதாரமாகக் கொண்டதன்று. இன்னும் ஒரு விஷயம். உயிர்கள் அனைத்தும் மறு ஜன்மம் அடையுமென்பது ஹிந்து மதத்தின் கொள்கை. அதன், பாப புண்ணியத்திற்கு ஏற்றவாறு மறு ஜன்மங்களிலே பிராமணன் சூத்திரனாவான்; சூத்திரனும் பிராமணனாகலாம்.

பறையர்களின் நிலையைக் கண்டு காந்தியின் மனம் பதைக்கிறது. சமூகத்திலே அவர்களைத் தாழ்த்தி வைத்திருப்பது பற்றி அவர் கண்ணீர் வடிக்கிறார். அத்தகைய தாழ்வு கூடாதென ஓயாமல் அவர் கண்டித்தும் வருகிறார். அவருடைய போதனைகளில், பறையர்களின் விஷயமே முக்கியமானது. பறையர்களைத் தாழ்த்தி வைத்திருத்தல் ஹிந்து மதத்திற்கே மானக்கேடு, மதத்திற்கு விரோதம், பெரிய மாசு, என்பதே அவருடைய அபிப்பிராயம். இவ் விஷயத்தைக் கண்டு அவர் மனம் புண்ணாகிக் கிடக்கிறது. உதாரணமாக,

"மறுபடியும் உலகில் பிறக்க எனக்கு விருப்பமில்லை. ஆனால், மீண்டும் நான் பிறக்க வேண்டுமாயின், தீண்டாதான் அல்லது பறையனாகவே பிறக்க விரும்புவேன். ஏனெனில், அவர்களுக்குள்ள கஷ்டங்களை நானும் அனுபவிக்க வேண்டும்

என்பது என் கருத்து. தவிர, அவர்களைக் கை தூக்கி விட்டு, உயர்நிலை யடையச் செய்யவேண்டு மென்பதும் எனது ஆசை" என்று அவர் எழுதியிருக்கிறார்.

தீண்டாத வகுப்பைச் சேர்ந்த ஒரு பெண்ணை அவர் தத்து அல்லது சுவீகாரம் செய்துகொண்டிருக்கிறார். அவளைக் கண்டு அன்பும், இரக்கமும் காட்டியே அவர் பேசுவார். அப்படி யிருப்பதினால் தான், தனது வீடு உள்ள இடத்தில் மழை பெய்கிற தென்பதும், வெயில் காய்கிறதென்பதும் அவருடைய கருத்து.

அவருடைய போதனைகளைக் கவனித்துப் பார்த்தால் அப்பொழுது அவருடைய நல்ல எண்ணமும், சிந்தையும் நன்கு புலப்படும். எனவே, டால்ஸ்டாயைக் காட்டிலும் அவர் இளக்கமான மனதுடையவர் என்று சொல்வேன்.

நாகரிகம்:—மேனாட்டு நாகரிகத்தைக் கண்டு ருஷிய தத்துவ ஞானியான டால்ஸ்டாய் என்பவர் பிரமாதமாகக் கண்டித்திருக்கிறார். காந்தியும் அப்படியே. எனவே, அவருடைய போதனையில் காந்தி பெரிதும் ஈடுபட்டவர் என்பது வெளிப்படை.

பல வருஷங்களுக்கு முன்னிருந்த ரூஸோ என்ற தத்துவ ஞானியும் மேனாட்டு நாகரிகத்தைக் கண்டித்துப் போனார். இவருடைய காலத்திற்கு பின்போ, ஐரோப்பியரிலே பல நிதான புருஷர்கள் அதனை ஓயாமல் கண்டித்து எழுதி வைத்துள்ள புத்தகங்களும் கொஞ்சமல்ல.

இப்போது ஆசியாக்காரர் சுதந்திர தாகங்கண்டு விழித்துக்கொண்டு விட்டனர். முன்னம் தங்கள் நாட்டின்மீது பல துறைகளிலும் படை யெடுத்து வந்து, தங்களை அடிமைப் படுத்திவரும் ஐரோப்பியரை எதிர்க்க வேண்டுமானால், ஆசியாக்காரர் வேறு எந்த ஆயுதத்தையும் தேடி யடைய வேண்டியதில்லை. ஐரோப்பிய நாகரிகத்தைப்பற்றிக் கண்டித் தெழுதப் பட்டுள்ள நூல்களே அந்த ஆசியாக்காரருக்கு மிகவும் பல

மான ஆயுதங்களாகும். இந்த ஆயுதங்களைக் காந்தி நன்கு கையாளாமலில்லை. எங்ஙனமெனில், தாம் எழுதியுள்ள இந்திய சுயராஜ்யம் என்னும் நூலிலே அக் கண்டன நூல்களை யெல்லாம் வரிசையாக அவர் எடுத்துச் சொல்லி யிருக்கிறார்.

அந் நூல்களில் பலவும் ஆங்கிலேயராலேயே எழுதப் பட்டவை. நாகரிகர் நாகரிகர் என்று சொல்லி ஐரோப்பியர் செய்திருக்கும் கொடுமை கொஞ்சமோ? எத்தனையோ ஜாதி களை அவர்கள் துன்பப்படுத்தி யிருக்கிறார்கள்; எத்தனையோ ஜாதிகளின் இரத்தத்தைச் சிந்தியோடும்படி விட்டிருக்கிறார் கள்; எத்தனையோ ஜாதிகளை உரிஞ்சி விட்டார்கள். நாக ரீகத்தை நிலைநாட்டுவதற்காகவே, போர் புரிகிறோமென ஐரோப் பிய மகா யுத்த சமயத்தில் அவர்கள் சொன்னார்கள். அவ்விதம் சொல்லிப் போர் புரிந்த சமயத்திலே, அப்பப்பா! வெளி வேஷத்திற்கு வரம்புண்டோ? பறித்த கொள்ளைக்கும், காட் டிய மூர்க்கத்துக்கும் கணக்கு வழக்குண்டா? இவற்றை யெல்லாம் உலகினர் கண்கூடாகக் கண்டு கொண்டு விட்டனர். எனவே ஐரோப்பிய நாகரிகம் என்றால் என்னவென்று நன்றாக வெளியாகி விட்டது. அப்படி யிருக்க, யுத்தத்தில் உதவி புரியுங்களென ஆசியாக்காரரையும் ஆபிரிக்கா வாசிகளையும் ஐரோப்பியர் கூவி யழைத்து வேண்டிக் கொண்டது என்ன அவமானம்! என்ன அவமானம்! ஐரோப்பியருடைய வள் ளலை அவ்விருவரும் நன்கு கண்டு கொண்டார்கள்; வெகு பேஷ் என்றும் உள்ளூரக் கருதியிருப்பார்கள்; இது பற்றி காந்தி என்ன சொல்லுகிறார்?

“ஐரோப்பாவில் ஆதிக்கம் பெற்றுள்ள நாகரிகம் பேய்த் தனமுள்ளதென ஐரோப்பிய மகாயுத்தம் புலப்படுத்திவிட்டது. யுத்தத்திலே வெற்றி பெற்றோர் தர்மம் தர்மம் என்று சொல் லிக்கொண்டு தர்ம விதிகளில் ஒவ்வொன்றையும் காற்றில் பறக்கவிட்டு விட்டனர். எத்தகைய பெரும் பொய்யையும் புகல அவர்கள் கூசவில்லை; ஐரோப்பாவிலே கிறிஸ்தவ மதம் பரவியுள தென்கின்றனர்; அன்று, அன்று; பேய்மதமே

அங்கு பரவியுளது; அதுவே அங்கு போற்றிப் புகழப்படுகிறது."

இந்தியாவிலும் சரி, ஜப்பானிலும் சரி, மேற்கண்டவாறே பலரும் பல சமயங்களிலும் சொல்லியுளர். வாய் விட்டுச் சொல்வானேன் என்று வாய்மூடி யிருப்போரின் மனத்திலும் அத்தகைய வெறுப்பே வேரூன்றிக் கிடக்கின்றது. ஐரோப்பிய மகாயுத்தத்திலே அடைந்த வெற்றியின் பலாபலன் இதுதான். எனவே அந்த வெற்றியை வைத்துக் கொளுத்தத் தான் வேண்டும்.

1919-ம் வருஷத்துக்கு முன்னமேயே மேனாட்டு நாகரிகத்தின் உண்மையான பான்மையை காந்தி கண்டுகொண்டவர். எப்படியென்றால், சுமார் இருபது வருஷ காலம் அவர் தென்னாப்பிரிக்காவில் வாழ்ந்து வந்தாரல்லவா? அப்பொழுது அந் நாகரிகம் வெட்ட வெளிச்சமாக அவருக்குப் புலப்பட்டது. 1908-ம் வருஷத்திலே அவர் "இந்திய சுயராஜ்யம்" என்ற புத்தகத்தை எழுதினார். அதில் மேனாட்டு நாகரிகம் என்பது படுமோசமான தீமையென்று சொல்லி யிருக்கிறார்.

காந்தி சொல்லும் வண்ணம், நாகரிகம் என்பது சொல்லளவில் தான் இருக்கிறது. காரியத்தில், செய்கையில், நடவடிக்கையில் இல்லை. அந் நாகரிகத்தின்படி பணப்பெருமை தான் வாழ்வின் ஒரே லட்சியமாக இருக்கிறது. தவிர, எவ்விதத்திலேனும் செல்வத்தைத் திரட்டும்படி ஐரோப்பியரை மதிகெட்டுப் போகச் செய்கிறது; பணத்திற்கு அவர்களை அடிமைகளாக்கி விடுகிறது; சமாதான வாழ்வே இல்லாது போகும்படி செய்து விடுகிறது; மனத்தின் தூய்மையைப் பாழ் பண்ணுகிறது; அல்லாமலும் அந் நாகரிகத்திலே, எளியோருக்கும் தொழிலாளருக்கும் நரகந்தான் கதி. சுருங்கச் சொன்னால் மனித வர்க்கத்தின் உயிருக்கு அது உலை வைக்கிறது.

பேய்த்தனமாக அந்த நாகரிகம் தனது தீமையின் வேகத்தினால், தானே அழிந்து போகுமென்பது நிச்சயம். ஆங்கி

லேயரைக் காட்டிலும் அந்த நாகரிகமே உண்மையில் இந்தியா வுக்குப் பரம விரோதி. இயற்கையாக ஆங்கிலேயருக்குக் கெட்ட சிந்தை கிடையாது. ஆனால், நாகரிகத்தின் விஷம் தலைக்கேறி விட்டதால், அவர்கள் மதிமயங்கிக் கிடக்கிறார்கள். ஆதலால், ஆங்கிலேயரைக் காட்டிலும் அந்த நாகரிகமே இந்தியாவுக்கு உண்மையில் பரம விரோதி யென்பதில் சந்தேகம் உண்டோ?

இந்தியாவிலிருந்து ஆங்கிலேயரை விரட்டி யோட்டி விட்டு, இந்தியாவை நாகரிகமாக்கி விடலாம் என்போர் இந்தியாவில் உளர். அதற்கு மகாத்மா காந்தி "அது சரியன்று. அவ்விதம் ஆங்கிலேயரை விரட்டி விடுதல் என்பது அழகு ஆகாது. அவர்கள் என்ன செய்வார்கள்? இயற்கையில் அவர்களுக்குக் கெட்ட சிந்தை கிடையாது. நாகரிகத்தின் விஷம் மட்டுமே அவர்களின் தலைக்கு ஏறி யிருக்கிறது. ஆதலால் விஷத்தையும் அதன் மூல காரணமான நாகரிகத்தையுமே போக்க வழி தேடவேண்டும். அப்படிச் செய்யாமல் ஆங்கிலேயரை விரட்டி யோட்டிவிட வேண்டுமென்றால், அது புலியின் உருவத்தைக் கொள்ளாமல், புலியின் சுபாவத்தை மட்டும் கொள்வோம் என்பது போலாகும்" என்று சொல்லி யிருக்கிறார். அதாவது மேனாட்டினரின் மீது துவேஷம் கொள்ளாமல், அவர்களைப் பிடித்தாட்டும் நாகரிகத்தையே ஒழிக்க வழி தேடவேண்டு மென்பதே அர்த்தம்.

மூவகை மனிதர்:—காந்தியால் பலமாகக் கண்டிக்கப் படுவோர் மூவகை மனிதராவர். அவர்கள் யாரெனில், வக்கீல்கள், வைத்தியர்கள், உபாத்தியாயர்கள்.

உபாத்தியாயர்களைப் பற்றி அவர் கண்டிப்பதை அனைவரும் நன்கறியலாம். இந்தியர் தங்களது தாய் மொழியையும், சுபாவமான கருத்துக்களையும் மறந்து விட்டனர்; அதனால், குழந்தைப் பருவத்திலிருந்தே இந்தியர் தாழ்வான நிலைமை யடைகின்றனர். இதற்கு உபாத்தியாயர்களே

காரணம். மேலும், குழந்தைகளின் சித்தமும், நடையும் சீர்திருந்த வேண்டும் என்பதை உபாத்தியாயர் கவனிப்பதே யில்லை; சரீர உழைப்பையும் அசட்டை செய்து, இழிவாகப் பேசுகின்றனர். இந்தியாவிலுள்ள ஜனங்களிலே நூற்றுக்கு 80 பெயர் விவசாயிகள்; 10 பெயர் கைத்தொழிலாளிகள். இப்படி யிருக்க, அவர்கள் அனைவருக்கும் ஒரே மாதிரியான புத்தகப் படிப்பே சொல்லிக் கொடுக்கப்படுகிறது. இது பெரும் பிழையாகும்.

இனி, வக்கீல்களுடைய தொழிலோ அதர்மமானது. இந்தியாவிலுள்ள கோர்ட்டுகள் எனப்படும் நீதி ஸ்தலங்களோ ஆங்கிலேயருக்கு அதிகார சக்தியை ஊட்டும் கருவிகளாக இருக்கின்றன; இந்தியருக்குள் கட்சிப் பிரதி கட்சிகளை உண்டு பண்ணுவதற்கும் சாதகமாக இருக்கின்றன; சண்டை சச்சரவுகளைப் பெருக்கி வளர்க்கின்றன. இன்னும் மனிதருக்குள்ள கெட்ட சுபாவங்களை வளர்க்கும் சாதனங்களாகவும் இருக்கின்றன.

வைத்தியர்களைப் பற்றியோ வென்றால், அவர்களின் தொழிலைக் கண்டு அவருக்கு ஆதியில் பிடித்தம் இருந்தது. ஆனால், அதன் பின்போ, அத் தொழில் கௌரவம் இல்லாத தென அவர் கண்டுகொண்டார். மேனாட்டு வைத்திய முறை உடலிலுள்ள வியாதியைப் போக்கத்தான் முடியும்; வியாதிக்கு மூல காரணத்தைப் போக்குவதாக இல்லை. வியாதிக்கு மூல காரணம் என்ன? மனிதனுடைய மனோ விசாரமும், தீச் செயல்களுமேயாம். மேனாட்டு வைத்திய முறை தீக்குணங்களை வளர்ப்பதாயும் இருக்கிறது எனலாம். ஏனென்னில், தீக் குணத்தைத் தடுக்க வகையில்லாமல் தீக்குணமுள்ளோரின் சுபாவம் வளர்வதற்கும் அனுகூலமா யிருக்கிறது; ஜனங்களை அதர்மவான்களாக ஆக்கி விடுகிறது; வீரமற்றவர்களாகவும் செய்து விடுகிறது. மேனாட்டு வைத்திய முறையிலே, ஜீவ ராசிகளின் உடல் கூறுகளை அறுத்தறுத்துச் சோதித்துப் பார்ப்பதுண்டு. இது மகா பாபம் என்பதே காந்தியின் புகார்.

ஆதலின், அப் பொய்யான முறைகளைக் கையாள வேண்டியதில்லை; உண்மையில் வியாதியின் மூலத்தைத் தடுக்கும்படியான இயற்கை வழிகளைக் கையாளலாம் என்று காந்தி கூறுகிறார். அந்த இயற்கை வழி இன்னதென அவர் எழுதியுள்ள "சுக வழி" என்னும் நூலில் சொல்லப்பட்டுள்ளது. அது இருபது வருஷகால அனுபவத்தை ஆதாரமாகக் கொண்டது. அந்நூல் தர்ம நெறியைப் போதிப்பது. அதில் அவர் சொல்லி யிருக்கும் வண்ணம், "நமது செயல்களும், எண்ணங்களுமே வியாதிக்குக் காரணம்" ஆதலின், வியாதியைத் தடுப்பதற்கான வழிகளைச் சொல்லுதல் எளிது. ஏனெனில் எல்லா வியாதிகளுக்கும் உற்பத்தி ஸ்தானம் ஒன்றே. அது என்னவென்றால், சுகாதாரத்துக்கு ஏற்ற இயற்கையான வழி முறைகளைக் கையாளாது இருத்தலே. அந்த இயற்கையான வழி முறைகளைக் கையாண்டால், வியாதியே வராமலிருக்கும். ஒவ்வொரு மனிதனது உடலிலும் கடவுள் இருக்கிறார் என்பதே கொள்கை. ஆதலால் கடவுளுக்கு இருப்பிடமான உடலைப் பரிசுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும். இவ்விதம் காந்தி சொல்லியுள்ள சுகாதார போதனைகளிலே எவ்வளவோ நலங்கள் உள. அனுபவத்தில் மிக்க பலன் தந்துள்ள வைத்திய முறைகளை அவர் கண்டிப்ப துண்மை தான். சன்மார்க்கத்தைப்பற்றி அவர் சொல்லி யிருக்கும் மிடுக்கான வழியைப் பார்த்தால், ஆதியிலே ஸெயிண்டு பால் என்னும் தேவஞானி சொல்லி யிருப்பது ஞாபகத்துக்கு வரும்.

நவீன நாகரிகத்திற்கு உயிர் போன்றிருப்பது யந்திர சாதனமே. ராட்சதத் தனமுள்ள யந்திரங்களை அடியோடு போக்கிவிட வேண்டும். இந்திய ஜனங்கள் அந்த யந்திரங்களுக்கு அடிமையாகக் கிடக்கின்றனர். ஆதலின், அவர்களை அந்த அடிமையி லிருந்து விடுவிக்க வேண்டுமென்பது காந்தியின் பரம சபதமாகும். ஆங்கில சாமான்களுக்கு இந்தியர் அடிமைகளாகக் கிடந்தாலும் கிடக்கலாம். ஆனால், யந்திரங்களுக்கு அடிமைகளாகக் கிடக்கக் கூடாது. இதுவே காந்தியின் கருத்து. இன்னும் அவர் சொல்லி யிருப்பதாவது:—

" இந்தியாவிலே யந்திரசாலைகளை ஏற்படுத்தி நடத்துவதைக் காட்டிலும், மாஞ்செஸ்டருக்கு நாம் ஏராளமான பணத்தை வாரிக் கொட்டிக் கொடுத்து விடுதல் மேலாகும். யந்திரங்களால் ஆகும் தீமை சொல்லுந்தர மன்று. யந்திரமானது மனிதனை அடிமையாக்கி விடுகிறது; யந்திரமூலமாகக் கிடைக்கும் பணமோ மனிதனைத் திக்கற்றவ னாக்குகிறது. ஆனால் தற்கால நாகரிகத்தில் ஈடுபட்டுள்ள இந்தியரோ, ரயில் வண்டிகளும், டிராம் வண்டிகளும் தொழிற் சாலைகளும் இல்லாமல் போயின், இந்தியா அதோகதி யாகிவிடும் என்று சொல்லுவார்கள். எனினும், ஆதி காலத்திலே அந்த யந்திர சாதனங்கள் இல்லாமல், இந்தியா வாழ்ந்துவர வில்லையா? சென்ற பல்லாயிர வருஷ காலங்களில், இந்தியாவிலே எத்தனையோ ராஜ்யங்கள் இருந்து மறைந்து போயின. இந்தியா மட்டும் மறையவில்லை. மற்ற எல்லாம் போய்விட்ட போதிலும், ஆத்துமாவை அடக்கி வைப்பதிலும், ஆனந்த நிலைக்கான அறிவை யடைவதிலும், இந்தியா பெயர் பெற்றிருக்கிறது. யந்திரங்கள் ஏற்படுவதையும், பெரிய நகரங்கள் தோன்றுவதையும் ஆதியிலே இந்தியா தடுக்கவில்லை. புராதனமான கைராட்டினத்தையும், பூர்வீகமான கல்வியையும் இந்தியா கைவிடா திருந்தது. அதனால், எப்போதும் இந்தியாவிலே ஞானமும், நலமும் நிலைநிற்கலாயின. இப்போதோ நாம் அந்தச் சுலபமான கைராட்டினத்தையும், கல்வியையும் மேற்கொள்ள வேண்டும். அவ்விதம் ஒரே யடியில் மேற்கொண்டுவிட முடியாது. படிப்படியாகவும் பொறுமையாகவுமே தான் மேற்கொள்ள வேண்டும்."

**கருத்தின் சாரம்:** — காந்தியின் கருத்திலுள்ள சாரம் அதுவே. அது மிகவும் முக்கியமானது தான். ஐரோப்பிய சாஸ்திரம் அவருக்கு வெறுப்பாகும். ஆனால் சாஸ்திர பரிசிலனைகள் அடியோடு தேவையில்லையென அவர் சொல்லி விடவில்லை. ஐரோப்பிய சாஸ்திர மேதாவிகளின் உற்சாகத்தையும், தியாக புத்தியையுங் கண்டு அவர் மெச்சுகிறார். ஹிந்து மத போதகர்களின் ஊக்கத்தையும், தியாகத்தையும் விட

அவை சிறந்தன வென்றும் அவர் ஒப்புக்கொள்ளுகிறார். என்றாலும் ஐரோப்பிய சாஸ்திர மேதாவிகளின் உற்சாகமும், தியாகமும் போகும் போக்குத்தான் சரியல்ல வென்பது அவர் கருத்து. அக்கருத்து இக்காலத்திற்கு ஏற்குமா? ஏற்காதென வங்காள கவி கண்டித்திருப்பதை அப்பால் ஆராய்வோம். தற்காலம் மனித கோடிகளுக்குள்ள பிரமாதமான உணர்ச்சிக்கு அக் கருத்து நேர்மாறாகும்; தங்களுடைய நாகரிகப் போக்கே விசேஷமானது என்று மயங்கிவிடக் கூடாது; தங்களது போக்கு இதர மனித கோடிகளின் போக்குக்கு ஒத்துளதா என்று பாாக்கவேண்டும். மேலும் தங்களுடைய நாகரிகப் போக்குக்கு இடையே இடையூறுகள் நேருமென்பதையும், நேர்மாறான நாகரிகப் போக்கு வந்து தோன்றுமென்பதையும், உணர்ந்து கொள்ள வேண்டும்.

---

## அதிகாரம் 4

## சத்தியப் போர் முழக்கம்

உலகிலே ஜனங்களின் முன்னேற்றம் என்பதை ஐரோப்பியரும், பிறரும் ஒரு விதமாக மதித்திருக்கின்றனர். முன்னேற்றம் என்பதை அளவு படுத்துவதில் ஐரோப்பியரின் கோட்பாடு ஒரு விதமாக இருக்கிறது. அக் கோட்பாடு சரிதானா அல்லவா என்று நுணுக்கமாக ஆராய்ந்துபாராமல், காந்தியின் கொள்கை காற்றில் பறந்து போய்விடுமென நாம் நினைத்துவிடக் கூடாது. அவ்விதம் நினைப்பவர்கள் கீழ்த் தேசஜனங்களின் மனப்பான்மையை அறியாதவர்களாவர்.

ஒரு பெரியவர் சொல்லியிருக்கும் வண்ணம், "எவ்விஷயத்திலும் ஆசியாக்காரர் ஐரோப்பியரை விட மிக்க பிடிவாதமும், உறுதியும் உள்ளவர்கள். தங்களுடைய நம்பிக்கையும், கருத்தும் கைகூடுவதற்கு அந்த ஆசியாக்காரர் பல நூற்றாண்டுகள் வரையிலும் பொறுத்திருப்பர். அவ்வளவு காலம் காத்

திருந்தபோதிலும், அவர்களுடைய உற்சாகமும் சரி, ஊக்கமும் சரி, குன்றிப் போகா.''

நமது கருத்து சித்தியாகப் பல நூற்றுண்டுகளா போக வேண்டும் என்று ஹிந்துக்கள் கருதவும் மாட்டார்கள்; பயப்படவும் மாட்டார்கள். தமது முயற்சிகள் ஒரு வருஷ காலத்தில் பயனளிக்குமென காந்தி கருதியிருந்தார். அவ்விதமே, அவசியமானுல், தமது கருத்து கைகூடுவதற்கு அவர் பல நூறு வருஷம் வரையில் பொறுத்திருக்கத் தயங்கார். இந்தியாவிலே அதி தாராளமாக அடிமுதல் நுனி வரையில் சீர்திருத்தம் செய்ய வேண்டு மென்பது அவர் கருத்து. அதற்காக அவர் பல யோசனைகளும், வழிகளும் சொல்லுகிருர். அவற்றை நன்கறிந்து நடக்க இந்தியர் தயாராக இல்லையென அவருக்குத் தோன்றின், உடனே அனுபவத்திற்கு ஒத்து வரும் வண்ணம் தமது யோசனைகளையும், வழியையும் மாற்றியமைத்துக் கொள்வார்.

1921-ம் வருஷத்திலே யந்திரங்களைப் பற்றி அவர் சொல்லியிருப்பதாவது:—"யந்திரங்கள் அடியோடு மறைந்து போயின், அது கண்டு நான் வருந்தேன். ஆனுல், யந்திரங்களைக் கண்டு எனக்கு விரோதமில்லை. தங்கு தடையில்லாமல் பரிபூரணமாக யாரிடமும் அன்பு காட்டவேண்டு மென்பதே எனது வாழ்வின் கோட்பாடாகும். நான் மனோராஜ்யக்காரன் அல்லன். அனுபவத்திற்கு ஒத்து வரும் படியான லட்சியங்களையே போதிப்பவன்.''

எதை ஜனங்கள் தியாகம் செய்ய முடியுமோ அதைத் தியாகஞ் செய்ய வேண்டுமென அவர் வேண்டிக் கேட்கிருர். அதோடு, எவ்வளவு தியாகஞ் செய்யக் கூடுமோ அவ்வளவும் தியாகஞ் செய்துவிட வேண்டு மென்பதும் அவர் கருத்து. உலகனைத்தும் எத்தனை ஜனங்கள் இருக்கிருர்களோ அதிலே ஐந்திலொரு பங்கு ஜனங்கள் இந்தியாவில் இருக்கிருர்கள். இவ்வளவு ஏராளமான ஜனத்தொகை யுள்ளவர்கள் தங்களால் கூடியதை யெல்லாம் தியாகம் செய்து விடுவதென்றுல், அப்

பொழுது எந்தக் காரியந் தான் கைகூடாது? எதைத்தான் சாதிக்க முடியாது? இந்தியர் பரம்பரையான விசேஷம் பொருந்தியவர்கள்; ஆத்ம சக்தியிலும் உயர்ந்தவர்கள். அந்தகைய ஜனங்களுக்கும், காந்திக்கும் இடையே பரிபூரணமான ஒற்றுமையுளது. இவ்விருவரும் ஒருவரை யொருவர் அறிந்துளர். தமது ஜனங்களிடமிருந்து என்ன எதிர்பார்க்கலாமென அவருக்குத் தெரியும். தங்களிடமிருந்து காந்தி என்ன எதிர் பார்ப்பார் என்பதை ஜனங்களும் அறிவர். அவ்விருவருக்கும் ஒப்ப முடிந்ததாக உள்ள முதன்மையான கருத்து சுயராஜ்யமே. சுயராஜ்யமே தேச ஜனங்களின் லட்சியம், அஹிம்ஸையன்று என்பது தமக்குத் தெரியுமென காந்தி எழுதியிருக்கிறார். இனி, "எதிரிகளின் மூர்க்கச் செயலினால் இந்தியர் அடிமைகளாகக் கட்டுப்பட்டுக் கிடப்பதைவிட மூர்க்கச் செயல் கொண்டு சுதந்திரம் பெறுதல் நலமென்று கருதுவேன்" என்றும் அவர் கூறியுள்ளார். இவ் வசனத்தைக் கண்டு சிலர் வியப்படையலாம். ஆனால், "மூர்க்கச் செயல் காரணமாக இந்தியா ஒருநாளும் சுதந்திரம் அடைய முடியாது. ஆத்மசக்தியைக் கையாளாமல் சுயராஜ்யத்தை அடைவது அசாத்தியம். ஆத்மசக்தியே அழியா ஆயுதம். அதுவே அன்பின் சக்தியும், சத்தியத்தின் வேகமும், சத்தியாக்கிரகமுமாம்" என்று வற்புறுத்தியிருக்கிறார்.

ஸத்தியாக்கிரகம்:— தமது தேச எதிரிகளை காந்தி எதிர்த்துவரும் இயக்கத்திற்கு "ஸத்தியாக்கிரகம்" என்று பெயர். ஆனால் ஐரோப்பியரோ காந்தி இயக்கத்தின் தன்மையை நன்கு உணரவில்லை; அதனால் வேறு பெயரிட்டு அழைக்கின்றனர். அந்த ஐரோப்பியர் சொல்லும் வண்ணம், காந்தி இயக்கம் செயலற்ற எதிர்ப்பாம், அல்லது எதிர்க்காமலிருத்தலாம். அப்படியன்று. காந்தியோ சளைக்காத சண்டைக்காரர்; அதில் மிகவும் வீரதீரங் காட்டுபவர், அவரது இயக்கத்தின் உயிர்நிலை தீவிரமாக எதிர்ப்பதேயாம். தீவிரமாக எதிர்ப்பதென்றால் மிருக, மூர்க்க பலத்தைக் கொண்டன்று. அன்பின் முதிர்ச்சி, சத்தியத்தின் வேகம், தியாகத்

தின் தன்மை ஆகிய மூன்றையும் கருவியாகக் கொண்டு எதிர்ப்பதே. இப்படி மூவகையான திறமைகொண்டதே சத்தியாக்கிரகம் என்பதாகும்.

பயங்கொள்ளிக்கும், கோழைக்கும் காந்தியின் இயக்கத்தில் இடமில்லை. தமது இயக்கத்திலே கோழையொருவன் சேர்ந்திருக்கிறான் என்று தெரிந்தால், உடனே அவர் அவனை விரட்டி யோட்டி விடுவார். பயங்கொள்ளியை விட மூர்க்க குணமுள்ளவனே மேல் என்பது அவரது கொள்கை. இது விஷயமாக அவர் சொல்லியிருப்பதாவது:— கோழைத்தனம், மூர்க்ககுணம் ஆகிய இரண்டிலும், மூர்க்ககுணத்தை நான் விரும்புவேன். ஒருவன் பிறரைக் கொல்லாமல், தான் பொறுமை கொண்டு தீரமுடன் மாளவேண்டு மென்ற உணர்ச்சியை நான் ஊட்டுவேன். இத்தகைய தைரியம் இல்லாதவன் ஆபத்தைக்கண்டு அஞ்சி ஓடுவதைவிட, தானும் பிறரைக்கொன்று, பிறரால் தான் கொல்லப்படுவதான வழி முறையைத் தேடிக்கொள்ளலாகும். ஆபத்தைக்கண்டு அஞ்சி ஓடுகிறவன் மனமொடிந்து மனவன்மை யில்லாது போவான். ஏன் அவன் ஓடவேண்டும்? மாண்டு போகத் தைரியம் இல்லாததனாலேயே அவன் ஓடிப்போய் விடுகிறான். எனவே, ஒரு ஜாதி ஆண்மையற்றுப் போவதைக் காட்டிலும், மூர்க்க குணம் பொருந்தியிருத்தல் மேலாகும்.

"என்றாலும், மூர்க்கச் செயலை விட அஹிம்ஸையே மிகவும் சிறந்தது. பிறரைத் தண்டிப்பதைவிட மன்னித்தலே மேல்; பிறரைத் தண்டிக்கும்படியான ஆற்றல் கொண்டிருக்கும் காலத்திலும், பிறரைத் தண்டியாதிருத்தல் தான் மன்னிப்பு என்பதாகும். இந்தியர் சக்தியற்றவர்கள் அல்லது பல மற்றவர்கள் என்று யாரும் நினைக்கவேண்டாம். முப்பது கோடி இந்தியரை ஒரு சில ஆயிர ஆங்கிலேயர் பயமுறுத்தி விட முடியாது. மேலும், பலம் என்றால் சரீரபலம், அல்லது முரட்டு பலமன்று; அஞ்சா நெஞ்சுறுதி கொண்டிருத்தலே பலம் எனப்படும். அஹிம்ஸையை மேற்கொண்டுள்ளோம் என்றால், தீமை செய்வோனைக் கண்டு தபவாக அடங்கிக்

கிடக்கிறோம் என்பதன்று. அஹிம்ஸை யென்றால், கொடுங்கோலனுடைய மனத்தை முழு ஆத்ம சக்தி கொண்டு எதிர்ப்பதேயாம். இவ்விதம், ஒரு தனி மனிதன் மட்டும் ஒரு பெரிய ராஜ்யத்தை எதிர்த்து நின்று, அதனை அழித்துவிட முடியும்.''

அவ்விதம் அழிப்பதென்றால், அது சாமானிய மன்று. மகா பரித்தியாகம் செய்ய வேண்டும். எனவே, கஷ்ட நஷ்டமடைந்து, அதனைச் சகித்து தீரமாக நிற்கவேண்டு மென்பதே விதியாகும். இவ்விஷயமாக காந்தி சொல்லுவதாவது :

'' தானியம் முளைக்க வேண்டுமானால், விதை யழிந்து போகும். அவ்விதமே உயிர் வாழ்வு பயன் தரவேண்டுமானால் சாகாமல் முடியாது. கஷ்ட நஷ்டப்பட்டு பரிசுத்தமானால் தான், வாழ்வு பயனளிக்கும். கஷ்ட நஷ்டப்படுகிறவனுடைய கஷ்ட நஷ்டத்தைக் கொண்டு தான், முன்னேற்றத்தை அளவிட முடியும். கஷ்ட நஷ்டம் எவ்வளவு பரிசுத்த சித்தத்துடன் உளதோ, அவ்வளவு அதிகமாக முன்னேற்றம் ஏற்படுகிறது. அஹிம்சை யென்றால், மனப்பூர்வமாகக் கஷ்டப்படுவதேயாம். கஷ்ட நஷ்டப்படுதல், அல்லது பரித்தியாகஞ் செய்தல் என்பது ஆதிகாலத்திய கோட்பாடு. இதனையே நான் இந்தியருக்கு எடுத்துச் சொல்லுவேன். மூர்க்கச் செயலைக் கையாளுவதற்கான வழிகள் நிரம்பிக் கிடந்தும், அஹிம்ஸையைக் கண்டுபிடித்து போதித்த ரிஷிகள் மகா புத்திமான்கள். அப் புத்திமான்களுக்கு ஈடு யாருமில்லை. அது மட்டு மன்று ; அவர்கள், ஆங்கிலப் போர் வீரனாகிய வெல்லிங்டன் முதலியவர்களைக் காட்டிலும் மகா திறமையான போர் வீரர்களுமாவர். போர்க் கருவிகளைக் கையாளும் வழிகளெல்லாம் அவர்களுக்கு நன்கு தெரியும். ஆயினும், அவை பயனற்றவை என அவர்கள் அறிந்து கொண்டார்கள். அஹிம்ஸையை மேற்கொள்ள வேண்டுமென்ற கோட்பாடு ரிஷிகளுக்கும், மகான்களுக்கும் மட்டுமன்று ; சாமான்ய ஜனங்களுக்கும் அதுதான் கோட்பாடு. மிருகங்களுக்கு மூர்க்கச் செயலே விதி. அது போல் மனிதராகிய நமக்கு அஹிம்ஸையே விதி. மனிதனுக்கு

மதிப்பை யுண்டு பண்ணுவது எது? ஆத்ம சக்திக்கு அடங்கி நிற்றலே. இந்தியர் அனைவரும் அஹிம்ஸையை மேற்கொள்ள வேண்டும். இவ்விதியின் தத்துவத்தையும் அவர்கள் நன்கு கண்டு கொள்ள வேண்டும். இந்தியரின் ஆத்ம சக்தி அழிக்க முடியாதது. உலகத்திலுள்ள மிருக பலம், மூர்க்க பலம் முதலிய எல்லாம் திரண்டு வந்த போதிலும், அந்த ஆத்ம சக்தி எதையும் எதிர்த்து நிற்க முடியும். அந்த ஆத்ம சக்தியின் வேகத்தை யறிந்து அதன்படி நடக்க இந்தியர் தவறின், நான் இமயமலைக்குத் தவஞ் செய்யப் போய் விடுவேன்."

காந்தி எப்பொழுதும் அதைரியம் அடைவதில்லை. 1918-ம் வருஷத்திலே விவசாயிகளுக்காகப் போராடிய பொழுது, ஆத்ம சக்தியின் பலத்தை அவர் நன்கு கண்டு கொண்டார். அதனால், 1919-ம் வருஷம் பிப்ரவரியிலும் அச் சக்தியைக் கையாள அவர் ஆரம்பித்தார். ஆரம்பித்தபொழுது, இந்தியர் அச் சக்தி கொண்டே நடப்பரென அவர் நம்பினர். ராஜீய விஷயமாகப் போர் புரிய வேண்டுமென 1919-ம் வருஷம் வரையில் அவருக்கு எண்ணம் உதிக்கவில்லை. அது வரையில் அவர் ஆங்கிலேய அரசிடம் விசுவாசியாகவே இருந்தார். விசுவாசியாக இருப்பதால், சிறிதேனும் பலன் கிடைக்குமெனக் காணும் வரையில் அவர் விசுவாசியாகவே இருந்தும் வருவார். ஆங்கில அரசுடன் ஒத்துழைக்க வேண்டுமென 1920-ம் வருஷம் ஜனவரி மாதம் வரையில் அவர் வற்புறுத்தி வந்தார். அப்படிச் சொல்லி வந்ததற்காக அவரை இந்திய தேசிய வாதிகள் குறை கூறி வந்தனர். இந்தியா கவர்ன்மெண்டுடன் போராடத் தொடங்கிய முதல் வருஷத்திலே, ஸத்தியாக்கிரகிகள் அனைவரும் சட்ட சம்மதமான வழியை மேற்கொள்ளும் பிரஜையாகவே இருப்பரெனவும் அவர் லார்டு ஹண்டரிடம் உறுதி கூறினர். இந்தியா கவர்ன்மெண்டாரின் பிடிவாதம் காட்டியதனால் தான், அந்த ராஜவிசுவாசியும், சன்மார்க்க புருஷருமான காந்தியின் மனம் மாறுபட்டிருக்க வேண்டும்.

**பாஞ்சாலப் படுகோலை:**—ரௌலட் சட்டம் அதர்ம

மானது. அதனை எதிர்க்கவே ஸத்தியாக்கிரகம் ஏற்பட்டது. சட்ட சம்பந்தமான வழிகளில் எதிர்க்க வேண்டுமென்பதே ஸத்தியாக்கிரகத்தின் முதல் கருத்து. சாதாரணமான காலங்களிலே சத்தியாக்கிரகிகள் சட்டத்துக்குக் கட்டுப்பட்டவர்கள். தவிர, அவமானத்துக்கு இடமான சட்டங்களையே ஆரம்பத்தில் அவர்கள் நிராகரிப்பார்கள். அப்படிச் செய்தும் நியாயம் கிடைக்காமல் போனால், ராஜாங்கத்துடன் எந்த விதத்திலும் ஒத்துழைப்பதில்லை யென்பது அவர்களின் முடிவாகும். சட்டத்துக்கு அடங்காதிருத்தல் என்பதை ஐரோப்பியர்களாகிய நாம் ஒரு விதமாக அர்த்தம் பண்ணுகிறோம். ஆனால் ஸத்தியாக்கிரகிகள் அர்த்தம் பண்ணுவதோ வேறு விதம். எனவே, நமது கருத்துக்கும் அவர்களின் கருத்துக்கும் எவ்வளவோ வித்தியாசம் உண்டு. தவிர, சட்டத்துக்குக் கீழ்ப்படியாதிருத்தல் என்பதில் ஸத்தியாக்கிரகிகளிடம் மதப்பற்றான தீரம் நிரம்பிக் கிடக்கிறது. இது போற்றத் தக்கதே.

தங்களது எதிரிகளிடத்தில் சத்தியாக்கிரகிகள் மூர்க்கம் காட்டக் கூடாது. ஏனெனில், அவ் விரோதிகள் வேண்டுமென்று தீமை செய்யார். நமக்கு உண்மையெனப் படுவதை அவர்கள் தப்பெனக் கருதலாம் என்பதே சத்தியாக்கிரகிகளின் பான்மை. மேலும், மூர்க்கச் செயலிலே அவர்களுக்கு நம்பிக்கை கிடையாது. தங்கள் கொள்கையிலிருந்து உதிக்கும் அன்பு கொண்டே அவர்கள் தங்கள் எதிரிகளை ஜெயிக்க வேண்டும். எதிரிகளை ஜெயிப்பதற்கு அன்பு மட்டும் போதாது. தன்னலப் பரித்தியாகமும் வேண்டும்; தவிர எதிரிகளால் நேரும் கஷ்ட நஷ்டங்களைச் சந்தோஷமாகவும் அனுபவிக்க வேண்டும். இத்தகைய வழியை யார் எதிர்த்துப் பேச முடியும்?

இவ்வழியினால் அல்லவா ஏசு நாதரும் அவரது சில பக்தர்களும் மகத்தான ரோம ராஜ்யத்தை வீழ்த்தி ஜெயித்தனர்? சத்தியமும், சுதந்திரமும் வேண்டுமெனக் கருதித் தங்களையே தியாகஞ் செய்துவிட இந்தியர் முன் வந்தனர். அந்த இந்தியருடைய மதப்பற்றான உற்சாகத்தை உலகறியச் செய்ய

வேண்டுமென்று காந்தி கருதினர். அதற்காக 1919-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 6-ந் தேதி இந்திய மகா ஜனங்கள் அனைவரும் கடவுளைத் தொழுது, உண்ணு விரதங் கொண்டு, கடையடைப்புச் செய்ய வேண்டுமென்று அவர் சொன்னர். இதுவே அவருடைய முதல் காரியம். அதில் இந்திய மகா ஜனங்கள் மிகவும் ஈடுபட்டார்கள். அதனல் எதிர்பாராத பலன் ஏற்பட்டது. அது என்னவென்றால் முதன் முதலாக இந்திய மகா ஜனங்களின் எல்லா வகுப்பினரும் ஒருமனப்பட்டதாகும். அப்பொழுது தான், தங்களது சக்தியும், திறமையும் இவ்வளவென அவர்கள் மீண்டும் கண்டு கொண்டார்கள்.

தேசமெங்கும் அமைதியே நிரம்பி யிருந்தது. டில்லியில் மட்டும் சிறிது தொல்லை உண்டாயிற்று. ஆதலால் டில்லி வாசிகளுக்கு அறிவு புகட்டக் கருதி, காந்தி டில்லிக்குப் போனர். ஆனல் கவர்ன்மெண்டாரோ அவரை வழி மறித்து ரயிலிலேயே கைது செய்து, பம்பாயில் கொண்டு போய் விட்டனர். காந்தி கைதி செய்யப்பட்டாரென்ற செய்தி பஞ்சாபுக்கு எட்டியது. அதனல் அங்கே சில ஜனங்கள் கலகஞ் செய்தார்கள். அமிர்தஸரஸ் நகரிலே சில கொலையும், சிறிது கொள்ளையும் நடந்தன. ஏப்ரல் 11-ந் தேதி ஜெனரல் டயர் என்பவர் தமது படையுடன் அந்நகருக்கு வந்தார். துருப்புகள் வந்து விடவே, எங்கும் ஒழுங்கு ஏற்பட்டது.

ஏப்ரல் 13-ந் தேதி விசேஷமான ஹிந்து திருநாள். ஜாலியன் வாலா என்னுமிடத்திலே, ஜனங்கள் கூடியிருந்தனர். அவர்களில் பெண்களும், குழந்தைகளும் அதிகம். அவர்கள் சாந்தமாகவே இருந்தார்கள். கூட்டமே கூட்டக் கூடாதென முந்திய இரவில் ஜெனரல் டயர் கட்டளை யிட்டிருந்தார். அது ஜனங்களில் யாருக்கும் தெரியாது. இப்படி யிருக்க, ஜெனரல் டயர் மெஷீன் பீரங்கிகளுடன் அவ்விடத்துக்கு வந்தார். கூட்டம் கூடாமல் கலைந்து போய் விடுங்கள் என அவர் எச்சரிக்கை செய்யவில்லை; அந்த ஜனங்களிடம் ஆயுதம் எதுவும் இருக்கவில்லை; அப்படி யிருந்தும், அவர்களைச் சுடும்படி அவர் கட்டளை யிட்டார். தோட்டாக்கள் தீரும் வரையில் பத்து

நிமிஷம் துப்பாக்கிப் பிரயோகம் நடந்தது. அந்த இடத்தைச் சுற்றிலும் உயரமான பெரிய சுவர்கள் உள. ஆதலால் அவ் விடத்தை விட்டு ஓடுவது முடியாது. துப்பாக்கிப் பிரயோகத் தால் ஐந்நூறு அல்லது அறுநூறு ஹிந்துக்கள் கொல்லப்பட் டுப் போனார்கள். காயமடைந்தவர்களோ இன்னும் அதிகம். கொல்லப்பட்டுப் போனவர்களையும் சரி, காயமடைந்தவர்களை யும் சரி, அதிகாரிகளில் யாரும் கவனிக்கவே யில்லை.

எங்கும் ராணுவச் சட்டம் அமுலுக்கு வந்து விட்டது. பாஞ்சால மாகாண மெங்கும் பயங்கரமே நிரம்பிக் கிடக்க லாயிற்று. நிராயுதபாணிகளான ஜனங்களின் மீது ஆகாய விமானங்கள் குண்டுகளைப் போட்டு வந்தன. மிகவும் மதிப்பு வாய்ந்த ஜனங்கள் ராணுவக் கோர்ட்டுகளின் முன்பு கொண்டு வந்து நிறுத்தப்பட்டனர்; சவுக்கால் அடிக்கப்பட்டனர்; வயிற்றினால் நகர்ந்து செல்லும் வண்ணம் கட்டாயப்படுத்தப் பட்டனர்; இன்னும் மகத்தான மானக்கேடுகளுக்கு ஆளாக் கப்பட்டனர். இப்படி யெல்லாம் காரியம் நடந்ததைப் பார்த் தால், ஆங்கில அதிகாரிகளிடம் மடத்தனம் நிரம்பி விட்ட தெனவே சொல்லலாம். தவிர, அஹிம்ஸை யென்னும் தர்ம நெறியைக் கண்டு, ஐரோப்பாவிலுள்ள மூர்க்கருக்குப் பித்தம் பிடித்து விட்டதெனவும் பகரலாம். இதனை காந்தி எதிர் பாராமலில்லை. மிகவும் சுலபமான முறையில் காரியசித்தி யடைந்து விடலாம் என்று அவர் சொல்லவுமில்லை. எப்படி யென்றால்,

“ நிரபராதிகளான ஸ்திரீகளும், மனிதர்களுமாக ஆயிரம் பெயர் மட்டுமல்ல, பல்லாயிரம் பேர் கொல்லப்பட்டுப் போக வும் நாம் தயாராக இருக்க வேண்டும். அது கண்டு நாம் சித்தம் சலிக்கக் கூடாது. உலகிலே இது வரையில் எத் தேசத்தாரும் அடையாத மிகவும் மேலான நிலையை நாம் அடைய வேண்டும். அதற்கு இடையில் எவ்வளவோ நேரும். தூக்கிலிடப்படுவதையும் சாதாரணமாக யாரும் நினைத்துக் கொள்ள வேண்டும். அத்தகைய பரிபக்குவம் நமக்கு மிகவும் அவசியம்” என்று அவர் சொல்லி யிருக்கிறார். சத்தியாக்

கிரக இயக்கத்தில் மறைந்து கொண்டு, கலகக்காரர்கள் படு மோசம் புரிந்து விடுவரென காந்திக்குத் தெரியும். அதனால், அவர் எப்ரல் 18-ந் தேதி யன்று தமது சத்யாக்கிரக இயக் கத்தை நிறுத்திக் கொண்டார்.

பாஞ்சால மாகாணத்தில் நடக்கும் சம்பவங்கள் வெளி யிடங்களுக்கு எட்டவில்லை; எட்டாதபடி ராணுவ அதிகாரி கள் வேலி போட்டு விட்டார்கள். என்றாலும் அக்கோர சம்பவங்களின் விஷயம் மெதுவாகச் சிறிது சிறிது வெளிப் படலாயிற்று. உடனே இந்தியருக்கு மிகவும் ஆத்திரம் உதித்து விட்டது. இங்கிலாந்துக்கும் பரபரப்பு உண்டா யிற்று. அதனால் லார்டு ஹண்டர் என்பவரைத் தலைமையாகக் கொண்ட ஒரு கமிட்டியை கவர்ன்மெண்டார் நியமித்தனர். அப் பஞ்சாயத்தாரும் அச் சம்பவங்களைப்பற்றி விசாரிக்கத் தொடங்கினர். உடனே காங்கிரஸ் மகா சபையும் ஒரு பஞ்சாயத்தை நியமித்து, விசாரிக்கச் செய்தது. அமிர்தஸ ரஸிலே ஜனங்களை வதை செய்த அதிகாரிகளைத் தண்டிக்க வேண்டுமென்று கவர்ன்மெண்டார் கருதியிருக்கலாம். எனி னும், அதிகாரிகளைத் தண்டிக்க வேண்டுமென்று மகாத்மா காந்தி கேட்கவில்லை. யாவரும் கண்டு போற்றத் தகுந்த பொறுமைக்குணமே காந்தியிடம் நிரம்பி யிருந்தது. ஆதலால், ஜெனரல் டயர் என்பவரையோ, குற்றவாளிகளான இதர அதிகாரிகளையோ, தண்டியுங்கள் என அவர் சொல்லவில்லை. பழி வாங்கும் சுபாவம் அவருக்குக் கிடையாது. டயரை வேலையிலிருந்து போகச் சொல்லி விட வேண்டுமென்று தான் அவர் கேட்டார். ஆயினும் என்ன? பஞ்சாயத்தின் விசாரணை முடியு முன்பே, தொடரா மொழிச் சட்டமொன்றை கவர்ன் மெண்டார் செய்து விட்டனர். அதனால், அதிகாரிகளின் மீது யாரும் சட்டப்படி நடவடிக்கை நடத்த இடமில்லாது போய் விட்டது. இப்படி அதிகாரிகளை அவர்கள் காப்பாற்றி விட்ட னர். குற்றவாளிகளான அதிகாரிகளை வேலையிலிருந்து தள்ள வில்லை; அந்த அதிகாரிகளுக்கு வெகுமதிகளும் அளிக்கப் பட்டன.

கிலாபாத் விஷயம் :—மேலே சொல்லிய துன்பத்திற்கு இந்தியர் ஆளாகிக் கிடந்த பொழுது, மற்றொரு சம்பவம் நேர்ந்தது. இது முந்தியதைக் காட்டிலும் மகத்தானது. அதாவது, பிரிட்டிஷ் கவர்ன்மெண்டின் பிரதம மந்திரி தாம் தந்த வாக்குறுதியை அலட்சியஞ் செய்து காரியம் நடத்தியதாகும். இதனால், ஐரோப்பியரிடம் இந்தியர் கொண்டிருந்த சிறிதளவு நம்பிக்கையும் காற்றில் பறந்து போய் விடலாயிற்று.

ஐரோப்பிய மகா யுத்தங் காரணமாக இந்திய முகம்மதியரின் நிலைமை பரம தர்ம சங்கடத்துக்கு இடமாகி விட்டது. எவ்வாறெனில், இங்கிலாந்துக்கும் துருக்கிக்கும் சண்டை ஏற்பட்டதல்லவா? அப்பொழுது, முகம்மதியரோ பிரிட்டிஷ் பிரஜைகள் என்ற முறையில் இங்கிலாந்தினிடம் ராஜ விசுவாசம் காட்ட வேண்டும்; மற்றொரு புறத்திலோ பிரதம மதாச் சாரியரான துருக்கி சுல்தானிடம் பக்தி விசுவாசம் கொண்டிருக்க வேண்டும். மத பீடங் காரணமாக அச்சுல்தானுக்குக் கலிபா என்று பெயர். மதாச்சாரியரான சுல்தானும் அரசை நடத்தும் ஆங்கிலேயரும், பகைத்து நிற்கையில், யாரிடம் விசுவாசம் காட்டுவது, யாரிடம் காட்டாமலிருப்பது? இப்படி இந்திய முகம்மதியர் தத்தளித்தனர். அங்நிலையில், துருக்கியின் பிரதேசங்களுக்கும், கலிபாவின் மேன்மைக்கும் பாதகம் நேராது; முகம்மதிய புண்ணிய க்ஷேத்திரங்களுக்குப் பங்கம் வராது என்று ஆங்கில அதிகாரிகள் இந்திய முகம்மதியருக்கு வாக்குத்தத்தஞ் செய்து கொடுத்தார்கள். அதன் மேல், முகம்மதியர் இங்கிலாந்தின் சார்பாக யுத்தத்தில் இறங்கினர். முகம்மதிய புண்ணிய க்ஷேத்திரங்களுடன், அரேபியா, மெஸபடோமியா, ஸிரியா, பாலஸ்தீனம் முதலிய இடங்களும் முன் போலவே சுல்தானுடைய ஆதிக்கத்துக்கு உட்பட்டிருக்க வேண்டுமென முகம்மதியர் கேட்டனர். அப்படியே காரியம் நடக்குமென லாயிட் ஜார்ஜும் ராஜப்பிரதிநிதியும் வாக்களித்தார்கள்.

1919-ம் வருஷத்தில் ஏற்பட்ட சமாதான உடன்படிக்கையின் ஷரத்துக்கள் துருக்கிக்குப் பரம கேடாக இருந்

தன. அந்த க்ஷாத்துக்கள் அருக்கியை நசுக்கிப் போட்டு விடும் பான்மையும் கொண்டிருந்தன. அது கண்டு இந்திய முகம்மதியர் முணுமுணுக்கலாயினர். இது காரணமான கிலாபத் கிளர்ச்சி சாந்தமான முறையில் தான் கிளம்பியது. ஆனல் பிரமாதமான ஆரவாரத்துடன் 1918-ம் வருஷம் அக்டோபர் மாதம் 17-ந் தேதி கிளம்பலாயிற்று. அதற்கப்பால், ஒரு மாத காலமானதும் டில்லி நகரிலே கிலாபத் மகாநாடொன்று கூடியது. அதில் மகாத்மா காந்தியே சபைத் தலைமை வகித்தார். அப்பொழுது, கிலாபத் விஷயத்தை ஆதாரமாகக் கொண்டு, ஹிந்து முகம்மதிய ஒற்றுமையை நிலைநாட்ட வேண்டுமென அவர் தீர்மானித்தார்.

ஹிந்து முகம்மதிய ஒற்றுமையை நிலைநாட்டுவதென்பது சாமானியமான காரியமன்று. ஹிந்துக்கள், முகம்மதியர் ஆகிய இரு வகுப்பினருக்கும் இயற்கையாகவே விரோதம் உண்டு. அவ்விரோதத்தை ஆங்கில கவர்ன்மெண்டார் மூட்டிக் கொண்டேயிருந்தனர். மேலும், அதனை அக்கவர்ன்மெண்டே பெரிதும் வளர்த்து வந்ததென மகாத்மா காந்தி குற்றஞ் சாட்டுகிறார். இது எப்படியாயினும், அவ்விரோதத்தைத் தணிக்க அக்கவர்ன்மெண்டார் எதுவும் செய்யவில்லை. அவ்விருமதத்தினரும் சிற்சில சமயங்களிலே முரண்டிக் கொள்வதுண்டு. மசூதிகளின் முன்னே மேள தாளம், பாட்டு முதலியன கூடா; ஹிந்துக்கள் அங்கே மேள தாளத்துடன் போவார்; பசுக்களைக் கொன்று ஹிந்துக்களின் மனத்தைக் கொதிக்கப் பண்ணுவதில் முகம்மதியரும் தவறுவதில்லை. இதனல் அடிக்கடி சண்டை சச்சரவுகள் நேர்வதுண்டு; விரோதமோ ஆழ்ந்து பரவும்; அவ்விருவகுப்பினரும் ஒரு மனதாகக் கலந்து கொள்ளுவதில்லை. இருவருக்கும் இடையே பந்தி போஜனமும், விவாகமும் கிடையா. அச்சண்டை நீடித்து நடந்தே வரும். இருவரும் ஒரு மனங்கொண்டு முயல்வதென்பது ஏற்படாது என்று இந்தியா கவர்ன்மெண்டார் எண்ணிக் கொண்டு அசட்டையாக இருந்து விட்டனர். கிலாபத் மகாநாட்டில் தலைமை வகித்த மகாத்மா காந்தியோ,

அவ்விரு பெரிய வகுப்பினரும் ஒத்துப் போகவேண்டுமென்று வற்புறுத்தினர். உடனே அவ்விதம் நடப்பதாக இருவகுப்பினரும் விழித்தெழுந்தனர்; கிலாபத் விஷயமாக முகம்மதியருடன் ஹிந்துக்கள் ஒத்துழைக்க வேண்டுமென அவர் போதித்தார்.

"நாம் ஹிந்துக்களாயினும் சரி, பார்ஸியராயினும் சரி, கிறிஸ்தவராயினும் சரி, யூதராயினும் சரி, நாம் அனைவரும் ஒரே தேசத்தினர் என்ற கட்டுப்பாடு கொண்டு வாழ்ந்து வர வேண்டும். அப்படியானால், ஒரு வகுப்பினருக்கு நேரும் சுகதுக்கம் மற்ற வகுப்பினருக்கும் நேர்ந்தது போலாகும். தவிர நாம் முக்கியமாக கவனிக்க வேண்டியது நியாயம் கிடைக்கவேண்டுமென்பதே" என்பது மகாத்மா காந்தியின் வார்த்தை. அமிருதஸரஸ் நகரிலே படுகொலை நடந்ததில் முகம்மதியரிலும் சிலர் கொல்லப்பட்டுப் போயிருந்தனர். அது முதலே, ஹிந்து முகம்மதிய ஒற்றுமை தலை தூக்கலாயிற்றெனலாம். இந்திய ஜனங்களிலே முகம்மதியர் மிகவும் உறுதியுள்ளவர்கள். ஆதலின், கவர்ன்மெண்டுடன் ஒத்துழைப்பதில்லை யென்னும் தத்துவத்தை முதலில் அவர்களே மேற்கொள்ளலாயினர். மகாத்மா காந்தியும் அதனை ஒப்புக்கொண்டார். ஆனால் சாந்த சுபாவமுள்ள நிதானியல்லவா? ஆதலால், "ஆங்கில சாமான்களைப் பகிஷ்கரிப்பதென்பது கூடாது. அது பிரிட்டிஷாரிடம் நாம் துவேஷங்காட்டுவது போலாகும். பழி வாங்கப் பார்க்கிறோமென்றும் பொருள்படும். நமது சக்திக் குறைவையும் காட்டும்" என்று அவர் சொன்னார்.

1919-ம் வருஷக் கடைசியிலே மீண்டுமொரு முறை அமிருதஸரஸ் நகரில் கிலாபத் மகா நாடு கூடியது. கிலாபத் விஷயமாக ஐரோப்பாவுக்கு ஒரு தூது அனுப்புவதென்றும், இந்தியரின் விருப்பத்தை மதியாமல் சமாதான உடன்படிக்கையின் ஷரத்துக்களை வரையின், பிரமாதமான நெருக்கடி நேருமென ராஜப் பிரதிநிதிக்கு இறுதிக் கடிதம் அனுப்புவதென்றும் தீர்மானமாயிற்று. 1920-ம் வருஷம் பிப்ர

வரி மாதம் பம்பாயிலே மூன்றாவது மகாநாடு நடந்தது. அதன் முடிவாக, ஆங்கில ராஜீயப் போக்கைக் கண்டித்தும், பிரமாதமான கொதிப்பு கிளம்பி விடுமென வற்புறுத்தியும், அம் மகா நாட்டார் ஓர் அறிக்கை வெளியிட்டனர்.

பலாபலன் :—எனவே, மகா ஜனக் கொதிப்பு கிளம்பப் போகிறதென்று காந்தி கண்டு கொண்டார். கொதிப்புக் கிளம்பிப் பரவ வேண்டு மென்பது அவர் கருத்தன்று. அதனைத் தணிக்க வேண்டுமென்றே அவர் பாடுபடலானார். ஜனக் கொதிப்பு கிளம்புகிறதென இங்கிலாந்திலுள்ள அதிகாரிகள் அறிந்து கொண்டனர். அறிந்து கொண்டதும், அல்ப சகாயங்கள் செய்து கொடுத்து, கொதிப்பைச் சமாளித்துவிட அவர்கள் பார்த்தனர். அதற்காக இந்திய அரசியல் திருத்தச் சட்டமொன்று செய்தனர்; அதனை அங்கிகரிப்பதாக அரசர் பெருமானும் சொல்லி. அதிகாரிகளும் ஜனங்களும் ஒத்துழைக்க வேண்டு மென்றார்; ராஜீயச் சிறையாளரை மன்னித்து விடவும் ராஜப்பிரதிநிதிக்கு அறிவித்தார்.

இத்தகைய காரியங்களைக் கண்டால், காந்தியின் மனம் இளகி விடும்; இது அவருடைய சுபாவம். சீர்திருத்தம் வேண்டுமளவு கிடைக்க வில்லை யென்று அவருக்குத் தெரியும். என்றாலும், இன்னும் அதிகமான சீர்திருத்தம் வழங்குவதற்கு ஆதாரமாகவே இப்போது கொஞ்சம் கொடுத்திருப்பதை எல்லாரும் ஒப்புக் கொள்ள வேண்டு மென்று காந்தி சொன்னார். இதைப்பற்றி இந்தியருக்குள்ளே மிகவும் பலமாக விவாதம் நடக்கலாயிற்று. முடிவில், காங்கிரஸ் மகாசபை அச் சீர்திருத்தத்தை ஒப்புக் கொண்டது.

ஆயினும் என்ன? ராஜீயச் சிறையாளரை ராஜப்பிரதிநிதி மன்னிக்கவில்லை; ஆனால் அவர்களிலே சில பலர் தூக்கி விடப்பட்டனர். அது கண்டு இந்தியா வெங்கும் கொதிப்புண்டாயிற்று. தவிர, விரிவான சீர்திருத்தம் கிடைக்கு மென்பதும் மாயமெனப் புலப்பட்டு விட்டது.

இந்நிலை தோன்றிய 1920 வருஷம் மே மாதம் 14-ந் தேதி யன்று, துருக்கி உடன்படிக்கை ஏற்பட்டது. அதன் ஷரத்துக்களோ படுமோசமாக இருந்தன. அத்தகைய சமாதானம் முகம்மதியருக்கு மனப்புண் உண்டுபண்ணுமாயினும், அதனை விதியின்றிப் பொறுமையுடன் அவர்கள் ஒப்புக் கொள்ள வேண்டுமென ராஜப் பிரதிநிதி ஓர் அறிக்கை யிட்டார்.

அதே சமயத்தில், பாஞ்சாலப் படுகொலை விசாரணையின் ரிபோர்ட்டும் பிரசுரமாயிற்று. இதைக் கண்டவுடனே இந்தியர் அனைவரும் பொங்கி யெழும்படி இருந்ததே யொழிய வேறில்லை.

இவ்வகையான பல காரணங்களாலும், சம்பவங்களாலும், அரசாங்கத்தினிடம் இந்தியருக்கு இருந்து வந்த சிறிது பிடிப்பும் பறந்து விட்டது. 1920-ம் வருஷம் மே மாதம் 28-ந் தேதியன்று கூடிய கிலாபத் மகா நாடானது காந்தியின் ஒத்துழையாத் தத்துவத்தை ஒப்புக் கொள்ளலாயிற்று. அதே வருஷம் ஜூன் மாதம் 20-ந் தேதி அலகபாத் நகரில் கூடிய ஹிந்து முகம்மதிய ஐக்கிய மகா நாடும் அந்த ஒத்துழையாமையை ஒப்புக் கொண்டது.

அதன் மேல் ராஜப் பிரதிநிதிக்கு எச்சரிக்கை கொடுக்கும் இறுதிக் கடிதத்தை காந்தியே எழுதி, அதில் ஒத்துழையாமை ஏற்பட்டதற்குக் காரணத்தையும் விளங்க வுரைத்தார். அவர் சொல்லியுள்ள காரணங்கள் குறிப்பிடத் தக்கன. இவ்வளவு ஏமாற்றமும் தீமையும் நேர்ந்த போதிலும், இங்கிலாந்தை விட்டுப் பிரிந்து போய்விட விரும்புவதாக அவர் சொல்லவில்லை. தன் பிழையை உணர்ந்து வருந்தி, இங்கிலாந்து சீர்திருந்த வேண்டுமென்று தாம் இன்னும் விரும்புவதாக அவர் சொல்லி யிருக்கிறார். உதாரணமாக,

“என்னைப்போன்ற ஒருவனுக்கு இனி ஒரே வழி தான் உளது. அது யாதெனில், பிரிட்டிஷ் ஆட்சியில் யாதொரு

சம்பந்தமும் கொள்ளாமல் விலகிப் போய் விடுவதே யாம். அல்லது, பிரிட்டிஷ் அரசியல் அமைப்பின் விசேஷத்தில் எனக்கு இன்னும் நம்பிக்கை யிருக்குமாயின், அந்த அரசி லுள்ள தப்பிதத்தைப் போக்கவும், அவ்வாறு போக்கி அதில் நம்பிக்கை ஊட்டவும், கூடிய வழிகளை மெற்கொள்ள வேண் டும். பிரிட்டிஷ் அரசியல் அமைப்பில் விசேஷம் உண்டென இப்பொழுதும் நம்புகிறேன். ஆதலினால் தான், அவ்வரசின் சட்டங்களை மீறி நடந்து அந்த அரசியலைத் திருத்த முடியுமா வென்று பார்க்கும் வண்ணம், என் ஜனங்களுக்கு யோசனை சொல்லி யிருக்கிறேன்."

என்று இறுதிக் கடிதத்தில் சொல்லியிருக்கிறார். எனவே, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் வீண் கர்வம் காட்டி, மகா புருஷ ணகிய காந்தியின் மனத்தைப் புண்ணாக்கி விட்டதென்பது வெளிப்படை யல்லவா?

---

## அதிகாரம் 5

---

### ஒத்துழையா இயக்கம்

"ஒத்துழையா இயக்கம் 1920-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் முதல் தேதி ஆரம்ப மாகும். அதற்கு முன் தினம் அனைவரும் கடைகளை மூடி, வேலை நிறுத்தஞ் செய்து, உண்ணு நோன்பு கொண்டு, கடவுளைத் தொழுது தயாராக வேண்டும்" என்று ஜூலை மாதம் 28-ந் தேதி யன்று காந்தி அறிவித்தார். அந்த இயக்கத்தைத் தொடங்குவதனால் கவர்ன் மெண்டின் கோபம் வந்து சேருமே என அவர் சிறிதும் சிந் திக்கவில்லை. ஜனங்கள் பொங்கி யெழுந்து வரம்பு கடந்து விடுவரோ என்று தான் அவர் அஞ்சினர். அதற்காக ஜனங்க ளுக்குள்ளே ஒழுங்குப் (அமைதியும் நிலை நிற்பதற்கான பாது காப்புக்களெல்லாம் தேடி வைத்தார். அவர் சொல்லிய வண்ணம்.)

"ஒத்துழையாமை திறமையாக நடக்க வேண்டுமாயின், பரிபூரணமான ஒழுங்கும், ஏற்பாடும், அமைதியும் வேண்டும். கோபம் தலை காட்டினால் தான் அதிலிருந்து ஒழுங்கீனம் உதிக்கும். மூர்க்கம் என்பது சிறிதுகூட இருக்கக் கூடாது. மூர்க்கங் காட்டினால், நமது முன்னேற்றம் தடைப்படும்; தவிர நிரபராதிகளான பலர் வீணே உயிரிழக்கவும் நேரும். ஆதலின் எல்லாவற்றிற்கும் மேலாக, நம் தேச மெங்கும் ஒழுங்கும், அமைதியுமே நிலை நிற்குமாக."

**திட்ட விவரம்** :—அதற்கு முன் இரண்டு மாத காலமாகவே ஒத்துழையாத் திட்டம் வரையப்பட்டு வந்தது. வரைந்தவர்கள் காந்தியும் அதற்கென ஏற்பட்ட ஒரு பஞ்சாயத்தாருமே. அத் திட்ட விவரம் என்னவென்றால் :—

1. கவர்ன்மெண்டால் கொடுக்கப்பட்ட பட்டங்களையும், பதவிகளையும், விருதுகளையும் விட்டுவிட வேண்டும்.

2. கவர்ன்மெண்டார் கடன் வாங்குவதில் யாரும் உதவி புரியக் கூடாது.

3. வக்கீல்கள் தமது தொழிலை விட்டுவிட வேண்டும். தாவாக்களை மத்தியஸ்தர்களின் மூலம் தீர்த்துக் கொள்ள வேண்டும்.

4. கவர்ன்மெண்டின் கல்விச்சாலைகளுக்குப் பிள்ளைகளை அனுப்பாமல் நிறுத்திக் கொள்ள வேண்டும்.

5. சீர்திருத்தச் சட்ட சபைகளுக்கு யாரும் போகக் கூடாது.

6. கவர்ன்மெண்டார் நடத்தும் விருந்துக் கச்சேரிகளுக்கும், பிற காரியங்களுக்கும் போகக் கூடாது.

7. கவர்ன்மெண்டிலே எவ்வித உத்தியோகமும் வகிக்கக் கூடாது.

8. சுதேசியத்தைப் பரப்ப வேண்டும்.

சுதேசியம் என்ருல், பொருளாதார விஷயத்தில் சுதந்திரம் அடைவதென்று ஒத்துழையாக்காரர் கருதி யிருக்கின்றனர். ஆனல் காந்தியின் சிடர்களோ அதில் சமூக முன்னேற்றத்திற்கான போதனை அடங்கி யுளதெனக் கருதி யிருக்கிருர்கள். இது பற்றி அப்பால் விரிவாகப் பேசுவோம்.

மேலே காட்டியது தான் ஒத்துழையாத் திட்டத்தின் முதல்படி. இந்த இயக்கத்தை நடத்தும் புருஷன் மகா புத்திமான். இந்தியரின் கொதிப்பை ஒர் ஒழுங்குபடுத்தி நடத்தி வரும் அம் மகானுடைய வழிகளைக் கண்டு ஐரோப்பிய புரட்சிக்காரருக்குக் கட்டாயம் ஆச்சரியம் உண்டாகும். மேற்சொல்லியதிலே "சட்ட மறுப்பு" என்பதில்லை.

சட்ட மறுப்பின் பான்மையை காந்தி நன்கு அறிந்து கொண்டவர். ஒத்துழையாமை வேறு, சட்ட மறுப்பு வேறு என்று அவர் சுட்டிக் காட்டி யுள்ளார். சட்ட மறுப்பென்பது சட்டத்துக்குக் கீழ்ப்படியாமல் மட்டும் இருப்பதன்று. திடமாக சட்டங்களை நிராகரித்துப் போடுவதேயாம். அதாவது சட்டங்களை முறித்தெறிந்து போடுவதே. பொறுக்கியெடுத்த சிலர்தாம் சட்டமறுப்புச் செய்ய முடியும். ஒத்துழையாமையோ மகா ஜனங்கள் அனைவராலும் ஒருமித்துச் செய்யப்படும் இயக்கமாகும்.

சட்ட மறுப்புக்கு இந்திய மகா ஜனங்களைத் தயாராக்க வேண்டுமென்பதே காந்தியின் விருப்பம். ஆனல் அது படிப்படியாகத்தான் ஆகவேண்டும். ஒத்துழையா இயக்கம் ஆரம்பமான காலையிலே அதற்கு இந்தியர் அவ்வளவு தயாராக இல்லை. இது அவருக்குத் தெரியும். ஆதலால் சரியான தன்னடக்கம் ஜனங்களுக்கு ஏற்படும் வரையில், இஷ்டப்படி அவர்களை விட்டுவிட அவர் விரும்பவில்லை. ஒத்துழையாமைத் திட்டத்தின் முதல் படியிலே, வரி கொடாமை என்பதும் இல்லவே யில்லை. அவ் வரிகொடா இயக்கத்தைக் கிளப்ப காந்தி காலங் கருதி யிருந்தார்.

**இயக்கத்தின் விசேஷம் :**—ஆகஸ்டு மாதம் முதல் தேதி ஒத்துழையா இயக்கம் ஆரம்பமாயிற்று. அதற்கு அடையாள மாக அவர் ராஜப் பிரதிநிதிக்கு ஒரு கடிதமெழுதி யனுப்பினர். அக்கடிதம் மிகவும் விசேஷமானது. தமக்குக் கிடைத்திருந்த கௌரவ விருதுகளையும், பட்டத்தையும் அக்கடிதத்துடன் அவர் அனுப்பி விட்டார். அக் கடிதத்தின் சாரம் பின் வருமாறு :—

"தென்னுப்பிரிக்காவிலே ஜீவகாருண்யமான வேலை செய்ததற்காக எனக்கு ஒரு தங்கப் பதக்கம் பரிசளிக்கப்பட்டது. இந்திய வைத்தியப் படையின் ஓர் அங்கத்தினன் என்ற முறையில் எனக்கு யுத்தப் பதக்கம் ஒன்று கிடைத்தது. போயர் யுத்த சமயத்திலும் ஒரு பதக்கம் எனக்களித்தனர்." "அவை இனி எனக்கு வேண்டாம். அவைகளை நான் இத்துடன் அனுப்பியுள்ளேன். அவைகளை யனுப்பியதில் எனக்கு வருத்தந்தான். ஆயினும் என்ன? பஞ்சாப் படுகொலையையும், கிலாபத் சம்பவத்தையும் பார்த்த பின்பு, கவர்ன்மெண்டினிடம் மதிப்போ, பிரியமோ எனக்கு இருக்க முடியாது. அதர்மமும், அநீதமும் கொண்டு மாசுபட்டுப் போன கவர்ன் மெண்டினிடம் எப்படி மதிப்புக் காட்ட முடியும்?"

இப்படி அவர் சொல்லிவிட்டு, மகா ஜனங்களுடன் கலந்து கொண்டு, பழைய குற்றங்களுக்கு ராஜப் பிரதிநிதி பரிகாரஞ் செய்ய வேண்டுமென்றும் கூறினர்.

காந்தி அவ்விதம் விருதுகளைத் திருப்பி யனுப்பிய வுடனே, பலரும் அவரைப் பின்பற்றலாயினர். நூற்றுக் கணக்கான வக்கீல்களும், நீதிபரிபாலன அதிகாரிகளும் தங்கள் பதவிகளை ராஜினமா செய்தனர்; ஆயிரக் கணக்கான மாண வர் கலாசாலையை விட்டு வந்தனர்; அதனல் பள்ளிக்கூடங் களிலே பையன்கள் இல்லாமல் போயினர். கோர்ட்டுகள் பகிஷ்கரிக்கப்பட்டன. பின்னர், கல்கத்தாவில் கூடிய காங் கிரஸ் மகா சபையும் காந்தியின் தீர்மானங்களை ஒப்புக்கொண் டது. காந்தியும் அவரது நண்பரான ஷௌகத் அலியும்

தேசமெங்கும் சுற்றுப் பிரயாணஞ் செய்து, ஒத்துழையா இயக்கத்தைப் பரப்பி வந்தனர். அப்பொழுது எங்கு போனு லும் அவர்களுக்கு உற்சாகமான வரவேற்பு நடந்தது. ஒத் துழையா இயக்க ஆரம்ப காலத்தில் தான், தாம் ஜனத் நலை மைக்குத் தகுதி யுள்ளவ ரென்பதை காந்தி உலகறியச் செய்தார்.

ஜனங்களின் மூர்க்கச் செயலை அடக்கி வைக்க வேண் டியதாயிற்று. ஜனங்களின் அராஜகச் செயல் என்ருல், அவர் நடுநடுங்குவார். ஜனங்கள் கும்பு கூடி கண் மூடித்தனமாக நடப்பது கூடவே கூடாதென அவர் பலமாகக் கண்டித்தார். ஏனெனில் அதுவே இந்தியாவுக்குப் பரம தீங்கு விளைவிக்கும் என்று அவருக்குத் தெரியும். யுத்தம் என்ருல், அவருக்குச் சிறிதும் பிடிக்காது. என்ருலும், ஜனத்திரள் கட்டுக்கடங்கா மல் கிளம்பி கண் மூடித்தனமாகக் காரியஞ் செய்வதானல், யுத்தம் புரிதலே மேலென அவர் கருதுவார். உதாரணமாக, "மூர்க்கச் செயலைக் கையாண்டு இந்தியர் சுதந்திரம் பெறுவ தானுல், அம் மூர்க்கச் செயல் ஒழுங்காகவும், கௌரவமாகவும் நடக்க வேண்டும். என்ன நேர்ந்த போதிலும் சரி, ஜனங்கள் கும்பு கூடிக் கட்டுக்கடங்காமல் காரியஞ் செய்வதென்பது கூடாது" என்று சொல்லி யிருக்கிருர்.

ஜனங்கள் கும்பு கூடி ஆனந்த ஆரவாரஞ் செய்வதென் பதும் கூடாதென்பதே அவர் கருத்து. ஏனெனில் சந்தோஷ ஆரவாரத்தினுல் ஜனங்களின் மதி கலங்கி விடுமோ என அவ ருக்கு அச்சம் உண்டு. மிகவும் ஆழ்ந்து பரந்த நோக்கும், மகத்தான உலக ஞானமும் வாய்ந்து, தெய்வத் தன்மை பொருந்திய அம் மகா புருஷன் எந்த ஐரோப்பிய மகா புருஷ ருக்கும், மதாச்சாரியர்களான மகான்களுக்கும் எவ்விதத்தி லும் குறையாதவர். ஜனத் திரள்களின் செயல்களை நேர் வழி யில் திருப்புவதற்கு அவர் சொல்லியுள்ள விதிகள் போற்றத் தக்கன.

அவர் சொல்லி யிருக்கும் வண்ணம், ஜனத்திரள்கள்

கூடும் மகா நாடுகளிலே சங்கீதம் மிகவும் அவசியம். சங்கீதத்தினுல் ஒழுங்கும், கிரமமும் ஓங்கி வளரும். பெரிய கூட்டங்கள் நடக்கும் காலங்களிலே, பயிற்சி யில்லாத தொண்டர்களைச் சேர்த்துக்கொள்ளக் கூடாது. மிகவும் அனுபவமுள்ள தொண்டரே கூட்டத்தின் ஒழுங்கைக் கவனிக்கத் திட்டமாக வேண்டும். ஜனக் கூட்டஞ் செல்லுங்காலையில், பொது ரஸ்தாக்களில் இதரர்கள் போக்கு வரத்துக்கு இடைஞ்சல் இருக்கக் கூடாது. ரெயில்வே ஸ்டேஷன்களில் அத்தகைய கூட்டங்கள் நடைபெறக் கூடா.

இந்தியரிலே சிலருக்கு காந்தி தத்துவத்தின் உண்மை புலப்படவில்லை ; அத் தத்துவத்தினுல் உண்டாகக் கூடிய ராஜீய விசேஷத்தையும் அச் சிலர் உணர்ந்து கொள்ளவில்லை. அதனுல் மூர்க்கச் செயலில் இறங்கி முயல வேண்டுமென அத்தகையோர் சொல்லலாயினர். மூர்க்க வழிகளை எதிர்த்துப் பேசக் கூடாதெனவும் காந்திக்குக் கடிதம் வந்தது. "எதிரிகளை மயக்கி விடவே அஹிம்சை வேண்டுமென்று சொல்லுகிறீர்கள். உண்மையில் மூர்க்கத்தில் தான் உங்களுக்கு நம்பிக்கை. ஆதலால் மூர்க்கத்தில் இறங்கி விடலாமென உத்தர விடுங்கள்" எனவும் இரண்டொருவர் அவருக்குக் கடிதமெழுதினர்.

அவ்விதம் எழுதியவர்களின் துணிவு வெகு நன்று ! அக் கடிதங்களுக்கு அவர் மிகவும் சரியான பதில் கொடுத்தார். ஆயுத பலத்தைக் கையாளக் கூடாதென்று சுட்டிக் காட்டி, அவர் எழுதிய மூன்று வியாசங்கள் மெச்சத் தக்கன. அவர் கூறும் வண்ணம் ஹிந்துக்களின் வேத நூல்களிலும் சரி, குர்-ஆனிலும் சரி, மூர்க்கச் செயலில் இறங்க விதியில்லை. மூர்க்கச் செயலைக் கையாளலா மென்பதாக ஒரு மதமும் போதிக்காது ; போதிக்கவுமில்லை ; பகவத் கீதையிலும் வாள் வலி சரியெனச் சொல்லப்படவில்லை. ஆனுல் தனது உயிரைப் பலிகொடுத்தாகிலும், கடமையைச் செய்து முடிக்க வேண்டுமென்று தான் சொல்லப்பட்டிருக்கிறது. கீதையை இப்படித் தான் காந்தி அர்த்தம் பண்ணுகிறுர்.

சிருஷ்டிக்கும்படியான சக்தி மனிதனுக்குக் கிடையாது. அப்படி யிருக்கையில், சிருஷ்டியை அழிக்கும்படியான உரிமை அவனுக்கு எப்படி யுண்டு? நாம் நமது விரோதிகளிடமும் அன்பு கொள்ள வேண்டும். இதனுல் தீமையைக் கண்டு சகித்திருக்க வேண்டுமென அர்த்தமில்லை. ஜெனரல் டயர் நோய் கண்டு கிடந்தால், அவனுக்கு உதவி புரிய அவர் விரைந்து செல்வார். ஆனுல் அவருடைய பிள்ளை மானக்கேடான வாழ்வு வாழ்ந்து வந்தால், அப்பிள்ளை இறந்து போவதா யிருந்தாலும் அவர் உதவி புரியப் போகார். "தீமையை மூர்க்க பலங் கொண்டு ஜெயிக்க நமக்கு உரிமை கிடையாது. ஆகனுல் அத் தீமைக்கும் நமக்கும் சம்பந்தம் இல்லாமல், நாம் விலகி நின்று அதனை எதிர்க்க வேண்டும். தான் இழைத்த தீமையைக் குறித்து எதிரியானவன் பச்சாத்தாபப் படுவானுயின், உடனே அவனை அன்பினுல் தழுவிக் கொள்ள வேண்டும். எதிரியைத் தாக்குவதாயின், நேர் நின்று தாக்க வேண்டும். அதில் அன்பிருக்க வேண்டு மென்பது அவசியம்."

ஆங்கிலேயரின் மனத்தையும், யுக்தியையும் தமது பக்கம் திருப்பிக்கொள்ளப் பார்க்க வேண்டு மென்பது காந்தியின் கருத்து. ஆங்கிலேயரைப் பற்றிப் பேசும்பொழுது, அவர்களை "எனது பிரிய நண்பர்களே" என அவர் அழைக்கிறுர். அவர்களுடன் முப்பது வருஷ காலம் மனப்பூர்வமான நட்புக் கொண்டிருந்ததாகவும் அவர் கூறுகிறுர். தங்களுடைய அரசாங்கம் படுமோசமான காரியங்கள் செய்திருப்பதற்கு அவர்கள் பரிகாரந் தேடவேண்டு மெனவும் அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறுர்.

"கவர்ன்மெண்டார் துரோகஞ் செய்து விட்டனர். ஆகவே, அவர்களிடம் எனக்கிருந்த நம்பிக்கை போய்விடலாயிற்று. பிரிட்டிஷாருக்கு தீரத்தனம் உண்டென இன்னும் நான் நம்பி யிருக்கிறேன். இப்போது இந்தியர்கள் சன்மார்க்கமான தீரந்தான் காட்ட முடியும். ஒத்துழையாமை என்பது தன்னலப் பரித்தியாகமே. ஆங்கிலேயராகிய உங்

களை எனது கஷ்ட நஷ்டத்தினால் ஜெயித்துவிட நான் விரும்புகிறேன்" என்றே அவர் சொல்லுகிறார்.

சுதேசியம் :—ஒத்துழையா இயக்கத்தினால் ராஜாங்கத்தைப் படுக்க வைக்க வேண்டும் என்பது மட்டுமே கருத்தன்று; எதற்கும் பிறரை எதிர்பார்த்திராமல், தன் கையே தனக்கு உதவி என இந்தியாவை ஆக்கிவிட வேண்டுமென்பதும் காந்தியின் கருத்தாகும். அப்படி இந்தியாவை ஓர் புதிய இந்தியாவாக ஆக்கி விட அவர் முயன்று வந்திருக்கிறார். அந்நிலைமை அடைவதற்கு முதல் படி என்னவென்றால், பொருளாதார விஷயத்தில் சுதந்திரம் அடைய வேண்டியதாகும். இதைத் தான் காந்தி சுதேசியம் என்கிறார். சுதேசியம் என்பதற்குப் பல அர்த்தங்கள் உள. அவற்றில் பொருளாதார சுதந்திரம் பெறுதல் என்பது ஒன்று. அதை முதலில் அவசியமாகப் பார்க்க வேண்டும்.

அனாவசியமான சரீர சுகங்களையும், போஷணைகளையும் இந்தியர் அவசியம் கைவிட வேண்டும். அவ்விதம் கைவிடுவதென்றால், தியாகஞ் செய்ய வேண்டியதுதான். வாழ்வு மிக ஒழுங்காகவும், சுகவழிக்கு ஏற்றதாகவும், இருக்க வேண்டுமல்லவா? சரீர ஆரோக்கியமும், தர்ம வழியும் இருந்தால் தான், நன்மை உண்டாகும். அதற்கு முதன் முதலாக, மது பான வழக்கத்தை விட்டொழிக்க வேண்டுமென்று காந்தி வற்புறுத்தினார். மது விலக்குச் சபைகள் ஏற்பட வேண்டுமென்று சொன்னார்; ஐரோப்பிய மது பானங்களைப் பகிஷ்கரிக்கச் சொன்னார். மது பான வகை விற்போரையும் வேண்டிக் கொண்டார்.

பம்பாய் நகரிலே பார்ஸியர்கள் தாம் பெரிய மது பான வியாபாரிகள். அவர்களுக்கு அவர் கடிதமெழுதி வேண்டிக் கொண்டதின் மேல், பலர் வழிக்கு வந்தனர். தமது ராஜீய வழியை ஒப்புக்கொள்ளாத மிதவாதிகளையும் மது பான விஷயத்தில் தம்முடன் ஒத்துழைக்கலாமென அவர் கோரிக் கொண்டார். கஞ்சா, அபினி முதலியனவும்

கூடவே கூடாவென அவர் வற்புறுத்தி யிருக்கிறார். இப்படி யெல்லாம் அவர் சொல்லியது மிகவும் நலமென இந்தியர் உணர்ந்து கொண்டனர். உடனே அம் மகாத்மாவின் சொல்படியும் நடக்கலாயினர். அதனால், மதுவிலக்குக் கிளர்ச்சியும், உணர்ச்சியும் தேசமெங்கும் ஓங்கிப் பரவலாயின. சில இடங்களிலே மதுபானக் கடைகளை பலவந்தமாக மூடிவிட ஜனக்கும்பல் முயன்றது. அப்பொழுது காந்தி குறுக்கிட்டு, பலவந்தம் வேண்டாமென்றார். பலவந்தங் கொண்டு ஒருவனைப் பரிசுத்தமாக்குதல் சரியன்று என்பது அவர் கருத்து.

குடிப் பழக்கத் தீமைகளைப் போக்குதல் எளிதான காரியமா யிருந்தது. ஆனால், பொருளாதார விஷயத்திலே பிறரை எதிர்பார்த்திரா வண்ணம் இந்தியாவை ஆக்கிவிடுதல் அவ்வளவு சுலபமாயில்லை. ஐரோப்பிய சாமான்களைப் புறக்கணித்து விடும் பொழுது, தங்களுக்குரிய ஆடைகளுக்காக இந்தியர் என்ன செய்வது? இதற்கு காந்தி சொல்லும் வழி மிகவும் சுலபம். ஆதியிலே இந்தியாவின் குடிசைத் தொழில் அல்லது வீட்டுத் தொழிலாக இருந்தது நூல் நூற்றலே. ஆகலால் கை ராட்டினத்தைக் கொண்டு, அனைவரும் நூல் நூற்க வேண்டுமென அவர் சொல்லலானார்.

உடனே நூல் நூற்ற ஆகப்போகிறது என்று பலர் கேலி செய்யலாயினர்; அவ்வாறு பலர் கேலி செய்வரென அவருக்குத் தெரியும். என்றாலும், தற்காலத்திலும் அதனால் பலனும் நன்மையும் உண்டு; அதனை மேற்கொள்ளுதல் மிக அவசியமாகும்; அதனால், பசியால் வாடும் லட்சக் கணக்கான பேர்களுக்கு உணவு கிடைக்கும் என்று அவர் வற்புறுத்தி வரத் தவறவில்லை. இந்தியாவின் விசித்திரமான நிலையைக் கவனிக்கையில், கைராட்டினத்தால் பலன் ஏற்படுமென்பது நிச்சயம். பரம ஏழைகளுக்குத் தான் நூல் நூற்றலால் பயன் கிட்டும்; நூல் நூற்றல் பிழைப்புக்கான முக்கிய வழியாகி விடாது என்பதை அவர் அறிந்தவரே. விவசாய வேலை

ஒய்ந்திருக்கும் காலங்களில், நூல் நூற்றலை ஓர் உப தொழிலாகக் கொள்ள வேண்டும்.

இந்திய மகா ஜனங்களிலே நூற்றுக்கு 80 பெயர் விவசாயிகள்; வருஷத்திலே நான்கு மாத காலம் அவர்களுக்கு வேலை இருப்பதில்லை. இந்தியாவின் ஜனத் தொகையிலே நூற்றுக்கு 10 பெயர் பஞ்சத்தால் வாடுகின்றனர். மத்திய நிலையிலுள்ள வகுப்பினருக்கோ வயிறு நிரம்பச் சாப்பிட வகையில்லை; இந்த நிலையைப் போக்கி உதவி புரிய இங்கிலாந்து எதுவும் செய்யவில்லை. ஆனால் அந்நிலையை இன்னும் கேவலமாக ஆக்கியிருக்கிறது. ஆங்கில வர்த்தகசாலைகளோ இந்தியத் தொழில்களைப் பாழாக்கி விட்டன; இந்தியாவின் சாரத்தை உறிஞ்சி வற்றச் செய்து விட்டன; வருஷா வருஷம் துணிகளை விற்று 60 கோடி ரூபாயை இந்தியாவிலிருந்து வாரி வடிக் கட்டிக் கொண்டும் போகின்றன.

இந்தியாவிலோ ஏராளமாகப் பஞ்சு விளைகிறது. விளைந்தும், அது ஜப்பானுக்கும், இங்கிலாந்துக்கும் போய்விடுகிறது; அப்பால் அப்பஞ்சனைத்தும் துணி ரூபமாக இந்தியாவுக்குத் திரும்பி வருகிறது. இப்படி அன்னியர் கொள்ளை கொள்வதை இந்தியர் தடுத்துக் கொள்ள வேண்டும். தவிர, எல்லாருக்கும் உண்ண உணவும், உடுக்க உடையும் தேசத்திலேயே கிடைக்கும்படி இந்தியர் முயல வேண்டும். இதற்குச் சிறந்த, சுலபமான, லாபமுள்ள வழி, முன்போல் நூல் நூற்று நெய்து கொள்ளுதலேயாம். வேலையில்லாமல் திண்டாடுவோரும், காவாலிகளும், ஸ்திரீகளும், குழந்தைகளும் அத்தொழிலை மேற்கொள்ள வேண்டும்; மேற்கொண்டால் மிக்க நலமுண்டு. தவிர இந்தியரனைவரும் தங்களது ஒய்வு நேரங்களில் அவ்வேலையைச் செய்யலாம். அக்காரியம் கைகூட அவர் சொல்லியுள்ள உபாயங்கள் மூன்று. அவை யாவன ;—

1. அன்னிய தேச ஆடைகளைப் பகிஷ்கரித்தல்.

2. நூல் நூற்கும் தொழிலைப் பரப்பல்.

3. சொந்த தேசத்தில் தயாராகும் ஆடைகளையே தரிப்பதென்று சபதஞ் செய்து கொள்ளுதல்.

சிறிதும் தளியாத சிரத்தை கொண்டு காந்தி அவ் வேலையில் இறங்கினர். அவர் சொல்லுகிற வண்ணம், நூல் நூற்றலை ஒரு கடமையாக இந்தியர் கொள்ள வேண்டும்; பள்ளிக்கூடங்களில் அதனைப் போதிக்க வேண்டும்; பள்ளிக்கூடச் சம்பளங் கொடுக்க வகையில்லாத பிள்ளைகள் சம்பளஞ் செலுத்துவதற்குப் பதிலாக நூல் நூற்றுத் தர வேண்டும்; இந்தியரில் ஆண் பெண் அடங்கலும் தங்கள் ஒய்வு நேரத்தில் ஒரு மணியாவது நூல் நூற்க வேண்டும்.

இது விஷயமாக அவர் மிகவும் நுணுக்கமான விவரங்களையும் எடுத்துச் சொல்லி யிருக்கிறார்; பருத்தி, நூல், நெய்தல் முதலியவற்றைப் பற்றி எல்லா விவரங்களையும் தெளிவாகக் கூறியிருக்கிறார். நெசவுகாரர், பெற்றோர், மாணவர் முதலிய பலருக்கும் அவர் அனுபவ பூர்வமான வழிகளைக் காட்டியிருக்கிறார். ஓர் உபாத்தியாயர் சொற்ப முதல் கொண்டு, கதர் ஜவுளிக் கடை வைத்து நூற்றுக்குப் பத்து வீதம் லாப மடையலாம் என்று காட்டி யிருக்கிறார். கை ராட்டினம் சுழலுங்காலையில் உண்டாகும் கானத்தைக் கேட்டால், அவர் பரமானந்தம் அடைவார். கபீர் தாஸர் எனப்படும் பக்திமான் நெய்தல் தொழிலை மேற்கொண்டவர்; பிரசித்தி பெற்ற மொகலாய சக்கரவர்த்தியான அவுரங்கசிப் தமது கையினாலேயே குல்லாய்கள் செய்து வந்தார். இவ்வாறெல்லாம் சொல்லி, ஜனங்களின் உற்சாகத்தை நன்கு கிளப்பி விட்டிருக்கிறார். உதாரணமாக, பம்பாயிலே பணக்கார குடும்பத்தைச் சேர்ந்த ஸ்திரீகளிற் பலர் நூல் நூற்று வருகிறார்கள்; கத்தர் ஆடையே தரிப்போமென ஹிந்துக்களும், முகம்மதியரும் சபதம் செய்து கொண்டிருக்கிறார்கள். வங்காள கவியான ரவீந்திர நாதரும் அதிலுள்ள நன்னயத்தை உணர்ந்து கொண் டிருக்கிறார். பெலுச்சிஸ்தானம், ஏடன் முதலிய இடங்களிலிருந்தும் கத்தர் வேண்டுமெனப் பலர் கேட்டு விட்டனர்.

அவ்விதம் ஏற்பட்ட உற்சாகம் சிறிது வரம்புகடந்து விடலாயிற்று. எப்படி யென்றால், அன்னிய தேச ஆடைகளைப் பகிஷ்கரிக்க வேண்டும் என்று ஏற்பட்டபொழுது காந்தியும் தமது பரம நிதானத்திலிருந்து தவறி, அன்னிய தேச ஆடைகளைக் கொளுத்தச் சொன்னார். அந்த ஆடை அடிமைத்தனத்திற்கு அடையாளமாம். 1921-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் பம்பாயிலே பிரம்மாண்டமாக அவ்வாடைகள் குவிக்கப்பட்டு கொளுத்தப்பட்டன.

இந்தியாவிலுள்ள பெருந்தன்மையான ஆங்கிலேயரில் ஆண்டிரூஸ் என்பவர் ஒருவர். இவர் ரவீந்திரநாத தாக்கூரின் நண்பர்; காந்திக்கும் மிக்க நேசராவார். இவரே "இப்படியா ஆடைகளைத் தீக்கிடுவது? ஏழைகளுக்குக் கொடுக்கக்கூடாதா? அன்னிய ஆடைகளைத் தீக்கிரையாக்குவதைக் கண்டால், ஜனங்களுக்குள்ள விபரீத நாச சிந்தை வளருமே," என்று மனங்கரைந்து காந்திக்குக் கடிதமெழுதினார். அவ்விதம் துணியைக் கொளுத்தி, தேசிய உணர்ச்சியை வளர்த்தல் மூர்க்கச் செயலின் புதிய வழி யென்றும் கண்டித்தார். ஏனெனில் உழைப்பின் பலனாகிய ஆடையை நாசப்படுத்தல் குற்றமாகும்.

காந்தி கூறிய வண்ணம் கத்தர் ஆடை தரிக்க விரும்பிய ஆண்டிரூஸுக்குச் சுதேசிய விஷயத்தில் சந்தேகம் ஏற்படலாயிற்று. என்றாலும், அவருடைய கடிதத்தை காந்தி பகிரங்கமாகப் பிரசுரித்து, ஆண்டிரூவின் மனக்கசிவைப் பாராட்டிய போதிலும், தாம் துணியைக் கொளுத்தியது தப்பன்று என்றே பதில் எழுதினார். எந்த ஜாதியிடமும் காந்திக்கு விரோதம் கிடையாது. அன்னிய தேச சாமான்கள் எல்லாவற்றையும் நாசஞ்செய்து விடவேண்டு மெனவும் அவர் விரும்பவில்லை. ஆனால் நிச்சயமாகத் தீமை விளைவிக்கும் அன்னிய சாமான்களைத் தொலைத்து விடத்தான் வேண்டுமாம்.

ஏனெனில், லட்சோப லட்சக் கணக்கான இந்தியர்

ஆங்கிலத் தொழிற்சாலைகளினால் நாசமாகிப் போய்விட்டனர். பல இந்தியரோ, கேவலம் கூலியாளராக ஆகிவிட்டனர். அவர்களுடைய ஸ்திரீகளோ மானக் கேடாக வாழ்ந்து வரும்படி ஆகிவிட்டது. இத்தகைய பாபங்களைக் கொண்ட அன்னிய ஆடைகளை அணியலாமா? அணியின் பாபம் வந்து ஒட்டிக்கொள்ளாதா? இது வரையில் இந்தியர் ஆங்கிலேய வியாபாரக் கொள்ளைக்காரரிடம் விரோதங் காட்டும் சுபாவத்துடன் இருந்தனர். ஆதலால் மனிதரிடம் விரோதங்கொள்வதைத் தவிர்த்து, அவர்களின் சரக்குகளின் மீது விரோதத்தை மாற்றி வைக்கவே காந்தி முயன்றார். பாபச் செயலானது அத்துணிகளை விற்கும் ஆங்கிலேயரின் மீது மட்டுமல்லாமல், அவைகளை வாங்கித் தரிக்கும் இந்தியரையும் சேரும். விரோதங் காரணமாக அத்துணிகள் கொளுத்தப் படவில்லை; பச்சாத்தாபப் படுவதற்கு அடையாளமாகவே கொளுத்தப்பட்டன. புண்ணை அறுத்து விட்டு ஆற்றுவது போல், அவ்விதம் கொளுத்த வேண்டியிருந்தது. எனவே பாபம் படிந்த அத்துணிகளை ஏழைகளுக்குக் கொடுத்தல் அழகன்று, கௌரவமுமன்று; ஏழைகள் என்றால் அவர்களுக்கும் கௌரவம் கிடையாதோ?

**தேசீயக் கல்வி**:—இந்தியரின் சரீரவாழ்வும், ஆத்மப் போக்கும் அன்னியருக்கு அடிமைப்பட்டுக் கிடக்கின்றன. சரீர வாழ்வை மட்டும் அந்த அடிமைத் தனத்திலிருந்து நீக்கினால் போதாது. ஆத்மப் போக்கையும் அவ்விதமே விடுவிக்கவேண்டும். ஐரோப்பியக் கல்வி முறையில் இந்தியா கட்டுப்பட்டுக் கிடக்கிறது. அதனைப் போக்க வேண்டுமென்பது காந்தியின் விருப்பம். எனவே உண்மையில் இந்தியக் கல்வி போதிக்கப் படுவதற்கான வழியை அவர் தேடலானார்.

இந்தியாவிலுள்ள சர்வகலாசாலைகளும், கலாசாலைகளும் ஆங்கிலேயரின் ஆதிக்கமான போதனைக்கு உட்பட்டுக் கிடப்பவை. ஆனால் அவற்றில் சில மட்டும் புராதன இந்தியக்கல்வியின் விசேஷத்தைச் சிறிதளவு கொண்டுள. சென்ற 45 வருஷ காலமாக அலிகார் நகரம் இஸ்லாமியக்

கல்வியின் நடுநாயகமாக இருந்து வந்திருக்கிறது. பாஞ்சாலத்திலுள்ள கால்ஸா கலாசாலை ஸீக்கியக் கல்விக்கு உறைவிடமாகும். ஹிந்துக்களுக்கோ காசி நகரில் ஒரு சர்வ கலாசாலையுளது. ஆயினும் அக்கலாசாலைகள் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டின் அதிகாரத்துக்கு உட்பட்டவை. எப்படியெனில், அவை அக்கவர்ன்மெண்டிலிருந்து பணவுதவி பெற்று வருகின்றன. அக்கலாசாலைகளை எடுத்து விட்டு அவற்றிற்குப் பதிலாக புதிய, பரிசுத்தமான கலாசாலைகளை ஏற்படுத்த அவருக்கு இஷ்டந் தான்.

1920-ம் வருஷம் நவம்பர் மாதத்திலே அவர் ஆமதாபாத் நகரில் தேசிய சர்வகலாசாலை யொன்று ஏற்படுத்தினர். இந்தியர் அனைவரும் ஒரு மனங்கொள்ள வேண்டு மென்ற லட்சியங் கொண்டே அச்சர்வ கலாசாலை தோன்றலாயிற்று. ஹிந்து தர்மமும், இஸ்லாமிய தர்மமும் அதன் இரு தூண்கள். இந்திய பாஷைகளை அழியாமல் காக்கவேண்டு மென்பதும், அப்பாஷைகளின் மூலம் இந்தியாவுக்குப் புத்துயிர் அளிக்கவேண்டு மென்பதும், அதன் நோக்கம். கல்வி விஷயமாகக் காந்தி சொல்லுவது சரியே. அவருடைய வார்த்தைகளிலிருந்து நாமும் பயனடையலாம்: "மேனாட்டு சாஸ்திரங்களை அறிந்து கொள்வதனால் மட்டும், பரிபூரணமான கல்வியை அடைந்து விட முடியாது. ஆசியா தேசத்துக்குரிய ஞான முதிர்ச்சி முறைகளையும் நாம் அவசியம் கற்றுணர வேண்டும். ஸம்ஸ்கிருதம், அரபி, பாரசீகம், பாளி, மாகதி முதலிய பாஷைகளில் எண்ணிறந்த விசேஷமான விஷயங்கள் உள. அவ்விசேஷ விஷயங்களை உணர்ந்து கொண்டால் தான், தேசிய வன்மைக்குரிய ரகசியம் புலப்படும். ஆனால் நமது கல்வி முறையோ புராதனமான கல்வி முறையை அப்படியே மேற்கொள்வதாக இருக்கக் கூடாது. சென்ற பல நூற்றாண்டுகளாக நாம் எவ்வளவோ அனுபவம் அடைந்துள்ளோம். அந்த அனுபவத்தைக் கொண்டு பழைய கல்வி முறையை நாம் சீர்திருத்தி யமைத்துக் கொள்ளவேண்டும். பல விதமான நாகரீகங்கள் இந்தியாவிலே தோன்றி நிலை

பெற்றிருக்கின்றன. இவற்றிலுள்ள விசேஷங்களை யெல்லாம் நாம் சேகரித்துக்கொண்டு, புதிதாக ஞான முதிர்ச்சி முறை யொன்றை வரையறுத்துக் கொள்ள வேண்டும். இப்புதிய ஞான முதிர்ச்சி அமெரிக்கரின் முறையைப் போல் இருந்து விடக் கூடாது. அமெரிக்கரின் முறையோ பிற முறைகளை யழித்து விடுவதாக இருக்கிறது. நமது கல்வி முறையில் பல தேச முறைக்கும் இடமிருக்கும். எல்லாவிதமான முறை யும் சமரஸப்பட்டு நமது முறையில் கலந்திருக்க வேண்டு மென்பதே நமது நோக்கம்."

ஆமதாபாத் தேசீய சர்வகலாசாலை மாணவர்கள் இந்தியாவிலுள்ள எல்லா மதங்களையும் படித்தறிய வேண்டும். ஹிந்துக்கள் குர்-ஆனைப் படித்தறிந்து பழக்கங் கொள்ள வேண்டும். அதே மாதிரி முகம்மதியர் ஹிந்து சாஸ்திரங் களைப் படித்துணரவேண்டும். விசேஷமான எதையும் தேசிய சர்வ கலாசாலை விட்டு விடாது. மனித கோடிகளிலே தீண்டா தார் என ஒரு பிரிவினர் இருக்கக் கூடாது. ஹிந்துஸ்தானி பாஷை கட்டாய பாடமாகும். ஏனெனில், அது ஸமஸ் கிருதம், ஹிந்தி, உருது முதலிய பால பாஷைகளையும் கொண்டது. ஆங்கிலமும் சரி, இதர ஐரோப்பிய பாஷை களும் சரி, விலக்கி விடப்படவில்லை; பள்ளிக்கூடங்களில் படித்து மாணவர்கள் வெளிக்கிளம்பிய பின்பே, ஐரோப்பிய பாஷைகள் படித்துணரப்படும். சர்வ கலாசாலைப் படிப்புக ளெல்லாம் தேச பாஷையில் தான். உலகிலுள்ள பலவிதமான மாறுபாடுகளெல்லாம் சமரஸப்பட வேண்டுமென்பதே காந்தி யின் உத்தேசம். பலவும் தனித்தனியாகப் பிரிந்து நில்லா மல், ஒரு வைரக்கல்லிலிருந்து உதிக்கும் பலவகைக் கிரணங் கள் போலிருக்க வேண்டும்.

அத்தேசிய சர்வகலாசாலையிலே, அறிவாளிகளான வகுப் பினருக்குத் தொழில் முறையில் பயிற்சி யூட்டப்படும்; பிறருக்கோ காவியக்கல்வி கற்றுக்கொடுக்கப்படும். இவ்விதம் கல்வியை யூட்டி, வகுப்பு வித்தியாசத்தைப் போக்க வழி தேடப்படும். புத்தகக் கல்வி மூலமாக மட்டுமல்லாமல், பிற

வழிகளிலும் சுதந்திர உணர்ச்சி நிரம்பி நிற்கும்படியான வசதிகள் இருக்கும். ஐரோப்பியக் கல்வி முறையிலே, சரீர மூளைக்கே பயிற்சி கொடுக்கப்படுகிறது. புதிய இந்தியக் கல்வி முறை, காந்தி சொல்லும் வண்ணம், அப்படியிராது ; ஆரம்ப வகுப்பிலிருந்து எல்லா மாணவருக்கும் சரீர உழைப்பில் பயிற்சி யிருக்கும். மாணவர்கள் நூல் நூற்று அதைக் கொண்டு பள்ளிக்கூடச் சம்பளம் கொடுக்க வேண்டும். இப் படியானல், அவர்களுக்கு ஜீவனோபாய முறையொன்று தெரிந்து விடுகிறது. பிறருடைய கையை எதிர்பார்த்திராமல், சுதந்திரமாக வாழ்ந்து வர இடமுண்டாகும். தவிர, அறிவை வளர்த்து ஒழுங்குபடுத்துவதற்கான வழியனைத்தும் நேர்மையாக அமைக்கப்படும்.

இந்த நோக்கத்தைக் கொண்டு உயர்தரமான கலாசாலை ஏற்படும். அக் கலாசாலைகளே இந்தியக் கல்வி முறையின் சிகரங்களாக விளங்கும். தவிர, அவைகள் சாதாரணமான கல்விச் சாலைகளைப் போலிரா ; இந்தியருக்குரிய விசேஷமும், மேன்மையும் வெளிப்படும்படியான ஆசிரமங்கள் போலவே யிருக்கும். அப்பால் அந்த ஆசிரமங்களிலிருந்து அவ்விசேஷங்கள் உலகெங்கும் பரப்பப்படும்.

**சத்தியாக்கிரக ஆசிரமம்:**—ஆமதாபாத் நகரிலே காந்தி ஏற்படுத்திய சத்யாக்கிரக ஆசிரமம் உளது. அது அவருடைய பிரியமான கல்விச் சாலை. அதற்கு ஏற்பட்டுள்ள விதிகள் பெரும்பாலும் உபாத்தியாயர்களுக்கே. உபாத்தியாயர்கள் சந்நியாசிகளைப்போல் வாழவேண்டு மென்பதே அச்சாலை விதிகளின் கருத்து. அந்த ஆசிரம ஆசிரியருக்குரிய விதிகளாவன :

1 சத்திய விரதம்:—சாதாரணமாக ஒருவன் பொய் பேசுவதில்லை என்றிருந்தால் மட்டும் போதாது. தேசத்தின் நன்மையை மதித்து வஞ்சகமாகப் பேசவும், நடக்கவும் கூடாது. பெற்றோருக்கும், பெரியோருக்கும் எதிர் நேர்வ

நாயினும், மெய்யே பேசவேண்டும், இதற்குப் பிரகலாதனே சாட்சி.

2. அஹிம்ஸா தர்மம்:— ஜீவப்பிராணிகளைக் கொல்வதில்லை யென்று இருந்தால் மட்டும் போதாது. அஹிம்ஸா தர்மத்தை மேற்கொள்ளுவோன் அதர்மவான்களுக்கும் தொந்தரவு செய்யக் கூடாது ; அவர்களிடம் கோபமுங் கொள்ளக் கூடாது. ஆனால் அவர்களிடம் அன்பு காட்ட வேண்டும். பெற்றோராயினும், கவர்ன்மெண்டாயினும், பிறராயினும் அவர்களுடைய கொடுமையை அவன் எதிர்க்க வேண்டும். ஆனால் அவர்களுக்கு அவன் துன்பம் செய்யக் கூடாது. சத்தியத்தையும், அஹிம்ஸையையும் மேற் கொண்டு நடப்பவன் கொடுங் கோலனுடைய மனத்தைக் கவர்ந்து ஜயம் பெறுவான். கொடுங்கோலை ஜெயிக்கும் வரையில், அவனால் நேரும் கஷ்டங்களைச் சாகுமளவும் சகித்திருக்கவும் வேண்டும்.

3. பிரம்மச்சரிய விரதம் :—பிரமச்சரிய விரதத்தை ஒருவன் மேற் கொண்டால் தான், முன் சொன்ன இரண்டு தர்மங்களையும் சுலபமாக அனுஷ்டிக்க முடியும். பிரமச்சரிய விரதத்தை மேற் கொள்ளுவோன் ஆசை நோக்கத்துடன் பிற மாதரைப் பார்ப்பதில்லை என்றிருந்தால் மட்டும் போதாது. சிந்தையிலும் கெட்ட எண்ணம் உதிக்காதபடி, தன்னை அவன் அடக்கிக் கொள்ள வேண்டும். அவன் விவாகம் செய்து கொண்டவனு யிருந்தால் சிற்றின்பத்தை யனுபவிக்க மனைவி யிருக்கிறாள் என்று அவன் எண்ணக் கூடாது. மனைவியைத் தனது உயிர்த் தோழியாக மட்டும் கருதி, அவளுடன் பரிசுத்தவானாக இருக்க வேண்டும்.

4. நாவடக்கம் :—நாவின் உருசியை ஒருவன் அடக்கிக் கொண்டாலன்றி, முன் சொல்லிய விரதங்களை—அதிலும் சிறப்பாக பிரமச்சரிய விரதத்தை—அனுஷ்டிக்க முடியாது. ஆதலின் நாவடக்கம் ஒரு தனி விரதமாகும். தேச நன்மைக்காக உழைக்க விரும்பும் ஒருவன் உடலைக்

காக்கவே உணவு அவசியம் என்று கொள்ள வேண்டும். ஆதலால் அவனுடைய ஆகாரம் பரிசுத்தமானதாக இருக்க வேண்டும். மிருகத் தன்மையான மனோவிகாரத்தை யூட்டக்கூடிய உணவையும், அனாவசியமான உணவையும் அவன் ஒரே யடியிலோ, படிப் படியாகவோ விட்டுவிட வேண்டும்.

5. திருடாமை :—பிறருடைய சொத்து என்கிறார்களே அதைத் திருடாமல் மட்டு மிருந்தால் போதாது. நமக்கு அவசியமா யில்லாத சாமான்களை உபயோகிப்பதும் திருட்டேயாம்.

6. வறுமை விரதம் :—ஏராளமாகப் பொருளை வைத்திருக்கவில்லை யென்றிருந்தால் மட்டும் போதாது. நமது சுகத்துக்கு மிகவும் அவசியமாயுள்ள பொருள் தான் நம்மிடம் இருக்க வேண்டும். அதியவசிய மில்லாத எதுவும் இருக்கக் கூடாது. நாற்காலி யில்லாமல் ஒருவன் இருக்க முடியுமானால், அப்படியே அவன் இருக்க வேண்டும். எனவே இவ் விரதத்தை மேற் கொள்ளுவோன் தனது வாழ்வை வர வர, மிகவும் சாதாரணமாக்கிக் கொள்வான். மேலே சொல்லிய விரதங்களை ஆராய்ந்து பார்த்தால், அவைகளுக்கு அடுத்தபடியான இரண்டு விரதங்களை மேற் கொள்ளும்படி யாகும். அவற்றில் ஒன்று,

சுதேசியம் :—சத்திய விரதன் வஞ்சக சம்பந்தமுள்ள ஆடையை அணியக் கூடாது. எனவே மாஞ்செஸ்டர், ஜெர்மனி, இந்தியா ஆகிய இடங்களிலுள்ள யந்திர சாலைகளில் நெய்யப்படும் துணிகளை அவன் எப்படி உபயோகிக்கலாம்? ஏனெனில் அவைகளில் வஞ்சகம் அல்லது மோசம் இல்லை யென எப்படி அவனுக்குத் தெரியும்? யந்திர சாலையிலே தொழிலாளர் மிகவும் வருந்துகின்றனர். யந்திர சாலைகளிலே பிரமாதமான தீ ஏற்படுவதால், எவ்வளவோ ஜீவராசிகள் அத் தீயினால் மாளுகின்றன. தொழிலாளரும் அகால மரணம் அடைகின்றனர். ஆதலால், அன்னிய தேச ஆடைகளையும், சிக்கலான யந்திரங்களால் செய்யப்

படும் ஆடைகளையும், அஹிம்ஸா விரதங் கொண்டோன் அணிய முடியாது. மேலும், அழகு அழகு என்று சொல்லி, சுதேச கைத்தறி ஆடைகளை விடுத்துப் பரதேச ஆடைகளை நாம் அணிவது சரியே யன்று. உடலைச் செயற்கை முறையில் அழகு படுத்திக் கொள்ளுதல் பிரம்மச்சரிய விரதத்திற்கு இடைஞ்சலாகும். ஆதலால் சாமானியமான உடையைத் தவிர வேறு எதையும் பிரம்மச்சாரி உபயோகிக்கக் கூடாது. சுதேசிய விரதம் என்றால், மிகவும் சாதாரணமான உடையையே தரிக்க வேண்டும். சட்டைக்குப் பொத்தான் வைப்பதும் கூடாது; அன்னிய தேசத்தினர் தரிக்கும் சட்டையைப் போல் நமது சட்டையை வெட்டி அழகு படுத்தவும் கூடாது; வாழ்வின் ஒவ்வோர் அம்சத்திலும் சுதேசியம் இருக்க வேண்டும்.

அஞ்சாமை :—அச்சத்திற்கு ஆளாபவன் சத்தியத்தையும், அஹிம்ஸையையும் எப்படி மேற்கொள்ள முடியும்? அரசர், ஜனங்கள், ஜாதிக் கட்டுப்பாடு, குடும்பத்தார், கள்ளர், திருடர், துஷ்ட மிருகங்கள் முதலிய பல வகைகளால் உண்டாகக் கூடிய அச்சத்தை லட்சியஞ் செய்யாமல், பயத்திலிருந்து விலகி நிற்க வேண்டும். உண்மையில் அஞ்சாதிருப்போன் தனது சத்திய வன்மையினாலும், ஆத்தும சக்தியினாலும், பிறரை எதிர்த்துத் தன்னைக் காத்துக் கொள்வான். மேலே கண்டவாறு போதித்து, ஆசிரியர்களின் குணங்களை ஒழுங்கு படுத்த காந்தி விரும்புகிறார். தவிர உபாத்தியாயர்கள் தங்களது நடத்தையினால் பிள்ளைகளுக்கு வழி காட்ட வேண்டியதே முக்கிய மென்பதும் அவருடைய கருத்து. இந்தியாவின் முக்கியமான பாஷைகளையெல்லாம் அவர்கள் கற்றுக் கொள்ள வேண்டு மென்றும் காந்தி சொல்லுகிறார்.

குழந்தைகளைப் பற்றி காந்தி சொல்லி யிருப்பதும் விசேஷமே. ஸத்தியாக்கிரக ஆசிரமத்திலே குழந்தைகள் நாலாவது வயதில் சேர்த்துக் கொள்ளப்படுவர். ஆசிரமத்தில் சேர்ந்ததும், அதனை விட்டுப் போகும் காலம் வரை

யில், அக் குழந்தைகளும் சில விதிகளுக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும். குழந்தைகளின் பயிற்சிக் காலம் பத்து வருஷம். அப் பத்து வருஷ காலம் வரையில் குழந்தைகளின் மேற் பார்வை ஆசிரம ஆசிரியர்களுக்கு உட்பட்டதே. அவர்கள் சாதாரணமான உடையே தரிப்பர். சாமானியமான ஆகாரந் தான் கொள்வர்; உணவனைத்தும் சாக பதார்த்தமே. அவர்களுக்கு ரஜா என்பது கிடையாது. ஆனல் வாரத்திலே ஒன்றரை நாள் சரீர உழைப்புக்காக ரஜா உண்டு. இந்தியாவிலே கால் நடையாகப் பிரயாணஞ் செய்ய வருஷத்திலே மூன்று மாதம் அவர்களுக்கு ஒய்வு கிடைக்கும். ஹிந்தி பாஷையும், திராவிட பாஷைகளும் கட்டாய பாடமாகும். ஆங்கிலம் உப பாடமே; உருது வங்காளம், தெலுங்கு, தேவநாகரம் ஆகிய பாஷைகளின் எழுத்துக்களை அவர்கள் கற்றுக் கொள்ள வேண்டும்.

தேச சரித்திரம், பூகோளம், கணிதம், பொருளாதார சாஸ்திரம், ஸம்ஸ்கிருதம் முதலியன எல்லாம் குழந்தைகளின் தேச பாஷையிலேயே போதிக்கப்படும். அதோடு, விவசாயம், நூல் நூற்றல் ஆகிய இரண்டிலும் அவர்கள் பயிற்சி பெறுவர்.

குழந்தைகளின் படிப்புக் காலம் தீர்ந்த பின்பு, ஆசிரம ஆசிரியர்களைப் போல் விரதங் கொள்வதா? அல்லது ஆசிரமத்தை விட்டுப் போய் விடுவதா என்று அவர்கள் தமது இஷ்டப்படி தீர்மானித்துக் கொள்ளலாம். ஆசிரமத்திலே அப் பத்து வருஷ காலமும் படிப்பு இனமாகவே சொல்லித் தரப்படுகிறது.

காந்தியின் இயக்கத்தில் உயர்ந்த மத உணர்ச்சியே நிரம்பியுளது; அவரது லட்சியங்களே கல்வி முறையின் அடிப்படை. இதனை விளக்கிக் காட்டவே இவ்வளவு தூரம் விரிவாக எழுதி யுள்ளேன். இந்தியாவுக்குப் புத்துயிர் அளிக்க வேண்டு மானல், இந்தியரின் நடையும், போக்கும் சித்தமும், ஹிருதயமும் பரிசுத்தமாக இருக்க வேண்டுமல்

லவா? அதற்காகவே காந்தி மிகவும் உயர்ந்த போதனைகள் சொல்லி வருகிறார். ஐரோப்பிய புரட்சிக்காரர்களைப் போல் வெறுமனே சட்டங்களையும், விதிகளையும் மட்டும் செய்து விடும் சுபாவம் காந்தியிட மில்லை. மனித கோடிகளைத் திருத்திப் புதிய சிருஷ்டி யுண்டு பண்ணுவது போலவே அவர் முயலுகிறார்.

---

## அதிகாரம் 6

## காந்தியின் ஜனத் தலைமை

இந்தியாவிலே ஒத்துழையா இயக்கம் பிரமாதமாகத் தோன்றிப் பரவி வரலாயிற்று. அந்த இயக்கத்தை மிகவும் நேர்மையாக காந்தி நடத்தி வந்தார். இப்படி அந்த இயக்கம் நடந்து வருவதிலுள்ள விசேஷத்தை ஆங்கில கவர்ன்மெண்டார் உணர்ந்து கொள்ளவில்லை. எல்லா கவர்ன் மெண்டுகளும் அப்படித் தான். ஆங்கில கவர்ன்மெண் டாரோ, தாங்களே எதிலும் மேலானவர்கள் என்ற உணர்ச்சி கொண்டு கிடந்தனர். அதனால் அந்த இயக்கத்தைக் கண்டு மிக்க வெறுப்பும், அலட்சியமும் காட்டிப் பேசலாயினர்.

உதாரணமாக 1920-ம் வருஷம் ஆகஸ்டு மாதத்திலே ராஜப் பிரதிநிதியான லார்டு செம்ஸ்போர்டு என்பவர் "பல விதமான பைத்தியக் காரியங்களிலே, இப் புதிய இயக்கம் மகா பைத்தியமானது" என்று சொல்லலானார். அவ்விதம் இயக்கத்தைக் கண்டு அவர்கள் அசட்டையும், அவமதிப்பும் காட்டிப் பேசிய போதிலும், அப்பால் சற்றே இறங்கிப் பேசும்படி ஆயிற்று. இயக்கத்தினால் மகத்தான நிலைமை நேரும் என்று அவர்களுக்குத் தோன்றிற்று. ஆயினும் இயக்கத்தின் வேகத்தைக் கண்டு அவர்கள் இன்னும் நிச்சய புத்தி கொள்ளாம லிருந்தனர். 1920-ம் வருஷம் நவம்பர் மாதம் 6-ந்தேதி அவர்கள் ஓர் அறிக்கை வெளியிட்டு, அதில்

"இபக்கத்தை நடத்துவோர் மூர்க்கச் செயல் கூடா தெனவே கூறி வருகின்றனர். ஆதலின் அவர்களின் மீது கிரிமினல் நடவடிக்கை எடுத்துக்கொள்ள கவர்ன்மெண்டுக்கு இஷ்டம் வரவில்லை. என்றாலும், கிரமமான வரம்பை மீறி நடப்போர் மீதும், மூர்க்கச் செயலில் இறங்குவோர் மீதும், கட்டாயம் நடிவடிக்கை எடுத்துக் கொள்ளப்படும்" என்று குறிப்பிட்டனர்.

ராஜாங்கத்தின் போக்கு :—கிரமமான வரம்பை மீறி நடக்கக் கூடாதென்று சொல்லியவர்கள் கவன்மெண்டாரே. ஆனால் சிக்கிரத்திலே வரம்பை மீறி நடந்தவர்கள் ஜனங்களா ? அன்று ; கவர்ன்மெண்டே ! இயக்கமோ பிரமாதமாக வலுத்து விடலாயிற்று. ஒத்துழையா இயக்கத்தைக் காங்கிரஸ் மகா சபை ஒத்துக் கொள்ளாதென்று கவர்ன்மெண்டார் நம்பி யிருந்தனர். நாகபுரியிலே 1920-ம் வருஷம் டிசம்பர் மாதத்தில் காங்கிரஸ் மகா சபை கூடிற்று. அப்பொழுது, எல்லா விதமான சாந்த வழிகளையும் மேற்கொண்டு சுயராஜ்யம் அடைந்தே தீருவதென அம் மகாசபை தீர்மானித்தது. இன்னும் ஒத்துழையா இயக்கத்தையும், லட்சியத்தையும், திட்டத்தையும் ஒப்புக் கொண்டது. மேலும் எல்லா ஜனங்களும்—அதிலும் முக்கியமாக ஹிந்துக்களும், முகம்மதியரும்—உயர்ந்த வகுப்பினரும் தாழ்ந்த வகுப்பினர் என்போரும், ஒரு மனதாக ஒத்துப் போகவேண்டு மென்றும் வற்புறுத்தியது ; அவ்விதம் காரியத்தை நடத்துவதற்காகப் பல வகையான ஜாதிப் பிரதிநிதிகளுமடங்கிய காரியக் கமிட்டியொன்றையும் ஏற்படுத்தியது.

"கவர்ன்மெண்டுடன் பூராவும் ஒத்துழையாதிருக்க முயலுவோம் ; வரி கொடாமல் இருந்து விடவும் ஏற்பாடு செய்வோம். வரி கொடா இயக்கம் பின்னால் ஆரம்பிக்கப் படுமாயினும், அதற்கு வேண்டிய ஆரம்ப வேலைகள் செய்யப் படும். இதற்கிடையிலே, அன்னிய ஆடை பகிஷ்காரம், சுதேசியம், முதலியவற்றை வற்புறுத்திப் பிரபலமாக்க ஏற்பாடு செய்யப்படும். பெற்றோரும், பிள்ளைகளும், வக்கீல்களும்

நீதியதிகாரிகளும் கவர்ன்மென்டின் சம்பந்தத்தை விட்டுவிட வற்புறுத்துவோம்'' என்றும் அம் மகா சபை தீர்மானிக்கலாயிற்று. அப்படியே காரியங்களும் ஏற்பாடாக நடந்து வரலாயின.

அதனால், இந்தியாவிலே ஒரு பக்கம் ஆங்கில அரசாங்கம் இருந்து வந்தாலும், மற்றொரு பக்கத்திலே காங்கிரஸ் குடியரசு நடந்து வரலாயிற்று. இங்கிலேயில், ஆங்கில ராஜாங்கம் மௌனமாக இருக்க முடியுமோ? ஒன்று, அக் காங்கிரஸ் அரசுடன் சண்டை போட வேண்டும்! அல்லது சமரஸமாகப் போக வேண்டும். கவர்ன்மென்டார் சமரஸப்பான்மை காட்டினால், அதில் ஈடுபட ஜனங்களும் தயாராக இருந்தனர். எபபடி யென்றால், "இங்கிலாந்துடன் ஒத்துழைத்து சுயராஜ்ய சித்திபெற வேண்டுமென்று விரும்புகிறோம். இதற்கு இங்கிலாந்து இடங் கொடுக்காமல் போனால், இங்கிலாந்துடன் ஒத்துழையாமல் காரிய சித்தி பெறவும் தயாராக இருக்கிறோம்'' என்று காங்கிரஸ் மகா சபை பகிரங்கமாகச் சொல்லிற்று. எனினும் இதர ஐரோப்பிய அரசுகளைப் போல், ஆங்கில அரசும் தனது மூர்க்க சுபாவத்தினால் மதிமயங்கிக் காரியம் செய்யத் தொடங்கி விட்டது. மூர்க்க பலங்கொண்டு காரியம் நடத்துவதற்கான புகார்களை ஆங்கிலவரசு எதிர்நோக்கி யிருக்கையில், அப் புகார்கள் கிடைக்காமலில்லை.

மூர்க்க பல அமுல் :—அஹிம்ஸா தர்மமே நிரம்பி நிலை நிற்க வேண்டுமென்று காந்தியும் காங்கிரஸ் மகா சபையாரும் வற்புறுத்திச் சொல்லி வந்தனர். என்றாலும் இந்தியாவின் சில பாகங்களிலே கலவரங்கள் நேர்ந்தன. அக் கலவரங்களுக்கும், ஒத்துழையா இயக்கத்துக்கும் சம்பந்தமே கிடையாது. ஐக்கிய மாகாணத்திலே மிராசுதாரர்களின் மிடுக்கைக் கண்டு விவசாயிகள் கொதித்தெழுந்தனர். அதில் போலீஸார் பலவந்தமாகத் தலை யிடும்படி ஆயிற்று; அப்பால் ஸீக்கிய அகாலியரின் இயக்கம் ஏற்பட்டது. ஆதியில் அது மத சம்பந்தமான பான்மையே கொண்டதாகும். அந்த அகாலியரின் இயக்கத்தை நடத்துவோரும் ஒத்துழையா முறைகளைக் கைப்

பற்றி நடக்கலாயினர். அதிலே 1921-ம் வருஷம் பிப்ரவரி மாதம் இருநூறு லீக்கியர் படுகொலை செய்யப்பட்டார்கள். இவை காந்தியின் இயக்கத்தினால் நடந்தவை யென யாரும் சொல்ல முடியாது.

என்றாலும், அத்தகைய சமயத்தையே எதிர் பார்த்திருந்த கவர்ன்மெண்டுக்கு நல்ல சமயம் வாய்த்தது. 1921-ம் வருஷம் மார்ச்சு மாதம் கவர்ன்மெண்டார் அடக்கு முறைகளைக் கையாளலாயினர். அந்த வருஷம் முழுவதிலும் அந்த அடக்குமுறை நாளுக்கு நாள் மிடுக்காகவே வளர்ந்து வந்தது. கள்ளுக் கடை மறியலை ஒரு வியாஜமாக வைத்துக் கொண்டு, கவர்ன்மெண்டார் காரியஞ் செய்யத் தொடங்கினர். தொண்டர் கூட்டங்கள் கூடாவென்று சொல்லித் தடுத்தனர்; மாகாண கவர்ன்மெண்டுகள் தமது இஷ்டப்படி காரியம் நடத்த அனுமதி பெற்றன; ஒத்துழையா இயக்கத்தை அராஜகமானதென்று சொல்லி, அதனை அடக்கும்படி போலீஸாருக்கும் உத்தரவு பிறந்தது.

இதனால் பல்லாயிரக் கணக்கான இந்தியர் கைதி செய்யப்பட்டனர். மிகவும் கௌரவமுள்ள மனிதர்களையும் நேர்மையாக நடத்தவில்லை. இந்த அடக்கு முறைகளால் கலகங்கள் ஏற்படுதல் இயற்கையே. இங்குமங்கும் போலீஸாருக்கும், ஜனங்களுக்கும் சச்சரவு ஏற்பட்டது. கொலைகளும் தீ வைத்தலும் நேர்ந்தன. இப்படி யிருக்கையில், காங்கிரஸ் மகா சபையின் நிர்வாக கமிட்டியார் பெஜவாடா நகரில் கூடி, சட்ட மறுப்பைக் குறித்து ஆலோசனை செய்தனர்.

"இரு பக்கமும் கருக்கமைந்தது போலுள்ள சட்ட மறுப்பு என்னும் இயக்கத்தை ஆரம்பிக்கக் கூடாது. ஏனெனில் அதற்கு வேண்டுமளவு இந்தியர் பக்குவம் பெறவில்லை; ஒழுங்கும் பெறவில்லை. ஆதலால் அந்த இயக்கத்தைப்பற்றி அப்பால் பேசிக் கொள்வோம்" என்று அக்கமிட்டியார் தீர்மானித்தனர். இதற்கு இடையிலே, பண விஷயத்திலும், இதர விஷயங்களிலும் ஒழுங்கான ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்று தீர்மானம் செய்யப்பட்டது.

ஒற்றுமை யுணர்ச்சி :—ராஜீய விஷயம், மத விஷயம், சமூக விஷயம் ஆகிய அதிலும் இந்தியர், ஒரு மனங்கொள்ள வேண்டுமென்று மிகவும் உற்சாகத்துடன் காந்தி முயன்று வரலானர். பணந் திரட்டிச் செல்வத்தைக் குவிப்பதிலேயே கருத்துடைய பார்ஸிய பணக்காரர்கள் தேசிய விஷயத்தில் ஈடுபட வேண்டுமென அவர் வேண்டிக் கொண்டார். புராதனமான அருமைகளாலும், பரஸ்பர பயத்தினுலும் ஹிந்து முகம்மதிய ஒற்றுமைக்குப் பங்கம் நேர்ந்து வந்ததைக் கண்டு அவர் வாளா விருக்கவில்லை. பரஸ்பரம் நல்லெண்ணமும், நல்ல சிந்தையுங் கொண்டு, இரு வகுப்பினரும் ஒத்துப் போக வேண்டுமென்பதில் அவர் மகத்தான முயற்சி செய்தார்.

முகம்மதியரான முகம்மது அலிக்கும் தமக்கு முள்ள நேசத்தைப் பற்றி காந்தி சொல்லி யிருப்பது குறிப்பிடத் தக்கது. அவர் சொல்லியிருப்பதாவது :—"நானும் முகம்மதலியும் பிரியா நேசர்களே. நான் எனது குமாரியை அலி சகோதரர்களின் பிள்ளைக்குக் கலியாணஞ் செய்து கொடுக்கப் பிரியப்படாமலும் இருக்கலாம். அவர்களுடன் சம பந்தி போஜனஞ் செய்யவும் இஷ்டப்படா திருக்கலாம். என்றுலும், எங்களுக்குள்ள அன்புக்கும், மதிப்புக்கும் குறைவிராது. ஹிந்து முகம்மதியருக்குள் கலப்பு விவாகம் ஏற்படுவதை நான் கண்டிக்க மாட்டேன். என்றுலும் அக் கலப்பு விவாகம் வேண்டுமென்றுல், அதனை இப்போது ஜனங்கள் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். ஒப்புக் கொள்ள இன்னும் கொஞ்ச காலம் போக வேண்டும்."

எனவே, அனுபவத்தில் எது நடக்கும் என்பதை அவர் நன்கு கண்டு கொண்டவர். ஹிந்து முகம்மதிய ஒற்றுமையை வலுப்படுத்துவதுடன், ஒடுக்கப்பட்ட ஜாதியாரைக் கை தூக்கி விடவும் அவர் பெரிதும் பாடுபடலானர். பறையர் என்போரின் உரிமைகளை அவர் வற்புறுத்திச் சொல்வது இவ்வளவு அவ்வளவு அன்று. அவர்களின் பரிதாபமான நிலைமையைக் கண்டு அவர் கண்ணீர் விட்டுப் புலம்புவதும்

சொல்லுந் தரமல்ல. இந்த ஒரு விஷயத்தைக் கொண்டே அவரது பெயர் உலகில் என்றும் அழியாதிருக்கும்.

சிறு வயது முதற்கொண்டே பறையரிடம் அவருக்கு அபிமானம் இருந்து வந்திருந்தது. அவர் சின்னப் பையனாக இருந்த பொழுது, பறையனொருவன் அவர் வீட்டுக்கு வேலை செய்ய வந்தான். அவனைத் தொட்டுக் கொள்ளக் கூடாதென வீட்டார் சொல்லினர். அது கேட்டு அவர் சமாதான மடைய வில்லை. ஏன் அவனைத் தொட்டுக் கொள்ளக் கூடாது என்று அவர் தமது பெற்றோருடன் தர்க்கஞ் செய்தார். பள்ளிக் கூடத்தில் படித்து வந்தபொழுது, தீண்டாத வகுப்பினருடன் சேர்ந்தே உட்காருவார்; அவர்களுடன் நெருங்கிப் பழகுவார். பறையறை ஒதுக்கி வைத்தல் பாபமென்று பன்னிரண்டாவது வயதிலேயே அவருக்கு உறுதி ஏற்பட்டது.

ஆதலால், அப் பாபத்தைப் போக்குவதாக அன்றே அவர் தீர்மானஞ் செய்து கொண்டார். தீண்டாத வகுப்பினரின் பக்கமாகப் பரிந்து பேசும் பொழுது தான், அவருக்கு உற்சாகமும், ஊக்கமும் அதிகம். தீண்டாமை என்பது மதத்தின் முக்கிய கோட்பாடாயின், அத்தகைய மதத்தை விட்டு விடவும் அவர் தயார். மேற்சொல்லிய பாபத்திற்கு இந்தியர் நெடுநாளாக ஆளாகி விட்டதால், அன்னியரிடம் இந்தியர் வருந்துவது கிரமந்தான் என அவர் சொல்லுகிறார். உதாரணமாக,

“ஹிந்துக்களாகிய நாம் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திலே பறையர்கள் போலிருப்பின், அது நமக்குக் கடவுளிட்ட சரியான தண்டனையே. தங்களிடமுள்ள குற்றத்தை முதலில் ஹிந்துக்கள் போக்கிக் கொள்ள வேண்டும். அப்பால் தான், பிறர் குற்றத்தைப் போக்கலாம். தீண்டாமை என்னும் வழக்கம் இந்தியாவுக்கு மானக் கேடாகும். பறையர் என ஒரு வகுப்பார் இந்தியாவில் இருக்கும் வரையில், நமக்குச் சுயராஜ்யம் ஏற்படாது. இவ்விஷயத்தில் இந்தியா குற்றவாளியே. நமது குற்றத்தை விட மோசமான குற்றமெதுவும்

இங்கிலாந்து செய்து விடவில்லை. நாம் முதலாவதாக ஏழை எளியோரைக் காக்க வேண்டும். மனிதரின் மனத்தைப் புண் படுத்தக் கூடாது. தீண்டாமை என்னும் பாபம் நம்மிடம் இருக்கும் வரையில், நாம் மிருகப் பிராயமே. சுயராஜ்யம் என்றால், தேசமெங்கும் நியாயமே பரிமளிக்க வேண்டும்" என்று எழுதி யிருக்கிறார்.

உயர் வகுப்பினர் என்போர் பறையனின் நிலைமையை உயர்த்த முன் வரட்டும் என்று காந்தி காத்திருக்கவில்லை. சுருங்கச் சொன்னால், அவரே முதலில் முன் சென்று, பறையர்களின் தலைவரானார். அவர்களுக்குள் ஒரு கட்டுப்பாடு செய்து வைத்தார். அவர்கள் மேற்கொள்ள வேண்டிய வழி முறைகளை அபிமானத்துடன் ஆராய்ந்து பார்த்து வழி காட்டினார். தங்களுடைய நிலையை உயர்த்திக் கொள்ள கவர்ன் மெண்டை அவர்கள் நாடுவதென்றால், அது இன்னொருவரிடம் அடிமைப் படுவதாகும். ஹிந்து மதத்தை விட்டு, கிறிஸ்தவ முகம்மதிய மதங்களைத் தழுவலாமா? தீண்டாமை என்பது ஹிந்து மதக் கோட்பாடன்று. கோட்பாடாயின், பிற மதங் களை அப்பறையர் தழுவலாம் என அவர் சொல்லி விடுவார். தங்களுடைய நிலையை உயர்த்திக் கொள்ள அவர்கள் ஒழுங் கான ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும். அதற்காக, இதர ஹிந்துக்களுடன் கலந்து கொள்ளாமல் ஒத்துழையாமையை மேற்கொள்ள வேண்டுமென அவர் சொல்லத் தயங்கவில்லை. என்னே ஒரு ஹிந்து தேசாபிமானியின் திரம்!

பறையர்களின் முன்னேற்றத்தைக் கருதி, முன்னின்று நடத்தத் தலைவர்கள் இல்லை யாதலின், பறையர் அனைவரும் ஒத்துழையா இயக்கத்தில் கலந்து கொள்ளலாம் என்று அவர் சொல்லலானார். எல்லா வகுப்பினரும் ஒரு மனங் கொள்ள வேண்டு மென்பதே ஒத்துழையாமையின் முதல் தர்மம்; தவிர, ஒத்துழையாமை பரிசுத்தம் பெறுவதற்கான இயக்கமுமாகும். பறையர்களை விலக்கி வைக்கும் எவரும் ஒத்துழையா இயக்கத்தில் சேர முடியாது. இம்மாதிரி காந்தி

ஏற்பாடு செய்து, மதவிஷயம், தேசகாரியம், ஜீவகாருண்யம் ஆகிய மூன்றையும் சமரஸப்படுத்தினர்.

1921-ம் வருஷம் ஏப்ரல், 13, 14-ந் தேதிகளிலே தீண்டாதாரின் மகாநாடு நடந்தது. அதில் காந்தியே தலைமை வகித்து, மிகவும் அழகாகப் பேசினர். வகுப்பு பேதம் போக வேண்டுமென்று அவர் சொன்னதோடு, புதிய இந்தியாவிலே பறையரால் பிரமாதமான காரியங்கள் ஆகவேண்டுமென்றும் வற்புறுத்தினர். இந்திய சமூகம் என்னும் குடும்பத்தில் ஐந்து மாதத்துக் குள்ளாகப் பறையர்களுக்கு நல்ல நிலைமை கிடைக்கவேண்டு மென்றும் சொன்னர். அவருடைய வார்த்தையைக் கேட்ட இந்தியர் அனைவரும் அப்படியே செய்யத் தலைப்பட்டனர். பல இடங்களிலே வெகுபேர் அவர் சொல்லிய வண்ணம் நடக்கலாயினர். 1921-ம் வருஷம் ஏப்ரல் மாதத்திலிருந்து தீண்டாமையின் மிடுக்கு பெரிதும் தணிந்து விட்டது. பல கிராமங்களிலே இதர ஹிந்துக்களுடன் சேர்ந்து வசிக்கவும் பறையர் தலைப்பட்டனர். சென்னை மாகாணத்தில் தான் நிலைமை இன்னும் மாருதுளது.

காந்தியைக் கைதிசெய்யப் போகிருர்கள் என்ற வதந்தியிருந்த காலத்திலும், பறையரின் விஷயத்தில் அவர் சிரத்தை காட்டி வந்தார். பிராமணர்களும் அவ்வரிய லட்சியத்தில் ஈடுபட்டார்கள். உயர் தர வகுப்பினர் என்போரில் பலர் பச்சாத் தாபங்கொண்டு பறையரிடம் பேரபிமானங் காட்டினர்.

ஸ்திரீகளின் நிலைமை :— பெருந்தன்மையுடன் பறையருக்காகப் பாடுபட்டது போலவே, ஸ்திரீகளின் விஷயத்திலும் அவர் பாடுபட்டிருக்கிருர். இந்தியாவிலே ஸ்திரீகளின் நிலைமை திருப்திகரமாயில்லை. பால்ய விவாகத்தினல் தேசஜனங்களின் சரீரசக்தியும், மனேசக்தியும் குன்றி விடுகின்றன. சிற்றின்பம் மனிதரைக் குன்றிப் போகச் செய்கின்றது. அது பற்றி ஸ்திரீகளின் கௌரவம் தாழ்வாகவே இருந்து வரலாயிற்று.

ஸ்திரீகளின் துயரத்தையும், கேவல நிலைமையும் காந்தி

உலகறியச் செய்தார். தீண்டாமையைப் போலவே, இது வும் ஒரு பெரிய தீமையென அவர் எடுத்துக் காட்டினர். தங்களுடைய நிலையை உயர்த்திக் கொள்ளப் பறையர் தாங் களாகவே முயலவேண்டு மென்பதுபோல், ஸ்திரீகளும் முயல வேண்டு மென்பது அவர் கருத்து. மனிதனுடைய மனோ விகார ஆசையைப் பூர்த்தி செய்து கொடுக்கவா ஸ்திரீகள் இருக்கின்றனர்? இதற்கு இடங்கொடாதிருந்து, தங்களுக்குத் தாங்களே மரியாதை தேடிக் கொள்ள வேண்டுமென அவர் ஸ்திரீகளுக்குப் போதித்தார்.

ராஜீய விஷயங்களிலே ஸ்திரீகள் தாராளமாகக் கலந்து கொள்ள வேண்டும்; அதில் ஆபத்தும், சங்கடமும் நேர்ந் தாலும், அதனை அனுபவிக்க வேண்டும். அன்னிய ஆடை களையும், ஆடம்பரத்தையும் அவர்கள் விட்டு விட வேண்டும். ஆண் மக்களுக்குள்ள துக்கங்களையும் அவர்கள் பங்கிட்டுக் கொள்ள வேண்டும்.” இதன்படியே கல்கத்தாவிலே உயர் வகுப்பு ஸ்திரீகளிற் சிலர் ராஜீய விஷயங்களில் கலந்து கொண்டனர். அதனால் அவர்கள் கைதி செய்யப்பட்டனர். எவ்விதத்திலும் ஆண் மக்களைவிடப் பெண் மக்கள் பெருமை பெறலாம். ஆனால் அச்சம், அச்சம் என்று அவர்கள் நடுங்கக் கூடாது. மிகவும் பலமற்ற ஸ்திரீயும் தனது கற்பையும், கௌர வத்தையும் காத்துக் கொள்ள முடியும். சாகத் தெரிந்து கொண்டால் போதும். இவ்வாறே காந்தி சொல்லுகிறார்.

தாசிகளாகக் காலங் கழிக்கும் ஸ்திரீகளையும் அவர் மற ந்துவிட வில்லை. தாழ்வடைந்த சகோதரிகளே என்று அவர் களை யழைத்து, அவர் அபிமானங் காட்டிப் பேசுவார். ஆந்திர தேசத்திலும், பாரிஸால் நகரிலும் நூற்றுக் கணக்கான தாசி களை அவர் சந்தித்துப் பேசி, அபிமானங் காட்டி யிருத்தல் மெச்சத் தக்கது. அவருடைய பேச்சையும், பெருந்தன்மை யையும் கண்டு, அவர்கள் அவரிடத்தில் உள்ள நிலையை உள்ள வாறு உணர்த்தி வருந்தினர்கள். தாசித் தொழிலை விட்டு, கௌரவமான கைராட்டினத் தொழிலை மேற்கொள்ள வேண்டு மென்று அவர் சொன்ன புத்திமதி பின்வருமாறு:—

“ நமது முன்னேற்ற இயக்கத்தில் தாசித்தொழில் என்ற பாபம் இருக்கவே கூடாது. யாரையும் நமது சகோதர சகோதரியைப் போல் கருதுவது தான் சுயராஜ்யத்துக்கு அழகாகும். பெண்களைச் சக்தியற்ற வகுப்பினர் என யாரும் நினைக்க வேண்டாம். ஆண், பெண், ஆகிய இருவகுப்பிலும் பெண்வகுப்பே மிகவும் பெருமையுள்ளது. பல சமயங் களிலே பெண்களின் முன்யோசனை சிறந்ததாக இருந்திருக் கிறது.”

இந்தியாவிலே ஸ்திரீகள் தங்களது ஆண்மக்களுக்குப் பலவிதத்திலும் புத்திசாலித்தனமாக உதவி புரிவரென்பது அவருடைய நம்பிக்கை. அவரது மனைவி அவ்வாறே உதவி யாக இருந்து வருகிறாள்.

**காந்தியின் பெரும் பதவி:**—1921-ம் வருஷத்தில் காந்தி யின் காரியங்கள் உச்ச ஸ்தானம் அடைந்தன. அபிரிமித மான மனோபலம் அவருக்கு உண்டு. அவர் விரும்பாதிருந்த பொழுதே, ராஜீய விஷயத்தில் அவரையே மகாஜனங்கள் ஸர்வாதிகார புருஷராக்கினர். அவரை ஆத்மஞானியென்றே அனைவரும் கருதினர்; கடவுளைப்போல் அவரைக் கும்பிட்டும் வணங்கினர். 1921-ம் வருஷம், டிசம்பர் மாதத்திலே காங் கிரஸ் மகா சபை கூடிற்று. அப்பொழுது, அவருடைய சொற்படியே எல்லாரும் நடக்க வேண்டுமென்றும், அவரை அதிகாரிகள் கைதி செய்து விட்டால், அவரே தமக்குப் பதிலாக ஒருவரை நியமிக்க வேண்டுமென்றும், அம்மகா சபையினர் தீர்மானித்தனர். எனவே இந்திய மகாஜனங்களு க்கு அவரே பிரதம தலைவராக விளங்கினர். அப்பொழுது தமது இஷ்டப்படி எது வேண்டுமானாலும் செய்யலாம் அல்லவா? ராஜீயப் புரட்சியையும் அவர் பரப்பி விடலாம்; அல்லது மதசம்பந்தமாக மகத்தான சீர்திருத்தமும் செய்து விடலாம்.

காந்திக்கு விசேஷமான சக்தி யிருந்தபோதிலும், அச்

சக்தியைக் கையாளுவதில் உண்டாகக் கூடிய ஆபத்தும் விசேஷமா யிருக்கும்.

காந்தியின் பொது நல உழைப்புக்கள் பெருகியவுடனே, ஜனத்திரள்களின் உற்சாகமும் அமோகமாகப் பெருகி விட்டது. காரியத்தைச் செய்து முடித்து சித்தியடைய வேண்டு மென ஜனங்களுக்கிருந்த மனோ வேகம் மிக மிக அதிகம். எனவே இயக்கத்தை ஒரு கட்டுக்குள் அடக்கிவைத்தல் வர வரக் கஷ்டமாயிற்று. தவிர, தம்மை ஒரு நிதான நிலையில் வைத்துக் கொள்வதும் அவருக்குச் சிரமமாக இருந்திருக்கும். கட்டில்லாத ஜனத்திரள் ஒருபுறமிருக்க, தமது தீர்க்கதரிசனம் மற்றொரு புறமிருக்க, அவற்றுடன் மனோ வேகமும் மற்றொருபுற மிருக்கையில், அம்மூன்றையும் சமரஸப் படுத்திக் கொண்டு போதல் சாமானியமான காரியமன்று. அவர் சாந்தமும் பக்தி சிரத்தையும் கொண்டவ ராதலால், "ஈசா! என் தலையில் பெரும்பாரம் சுமத்தப்பட்டுள்ளது. அதனைத் தாங்கி நடத்த எனக்கு அறிவாற்றல்களை யளிக்க வேண்டும்" என்று அவர் கடவுளைத் தொழுது வந்தார்.

அத்தகைய உன்னத நிலையை யடையும் எந்த மனிதனும் கர்வங்கொண்டு விடுவான். என்றாலும், அவரை எவ்வளவு தூக்கிவைத்துப் புகழ்ந்த போதிலும், அவருடைய மதி கலங்காது. அவரை உயர்த்தி வைக்க வைக்க, அவருடைய பணிவும், சாந்தமும் வளர்ந்து கொண்டே வந்தன. எல்லாரும் தம்மை உயர்த்திப் பேசுவது பற்றி அவருக்கு வருத்தமே யொழிய வேறில்லை.

இத்தகைய காந்திக்கு நிகராக எந்த தத்துவ ஞானியை யும், தீர்க்கதரிசியையும் சொல்ல முடியாது. வெற்றி பெற்று விட்டோம் என்ற மலர்ச்சி அவரது முகத்தில் தோன்றாது; தற்பெருமை யென்பது அவரது உள்ளத்தில் உதிக்காது. எல்லாரையும் போலவே தானும் ஒரு மனிதன் என்பது தான் அவருடைய எண்ணம். அப்படித் தான் அவர் இருந்தும் நடந்தும் வருகிறார். பரம ஞானியென்று தம்மை நோக்கிப்

பிறர் சொல்வதை அவர் விரும்புவதில்லை. இவ்வளவு பணிவு உள்ளதனாலேயே அவர் பரம ஞானியாகிறார். அவர் சொல்லியிருப்பதாவது:—

“நல்ல ஹிந்துவைப் போலவே நானும் கடவுளைத் தொழுது வருகிறேன். நாம் அனைவரும் கடவுளின் தூதராக இருக்க முடியும். எனக்கு மட்டும் விசேஷமாகக் கடவுள் எதையும் சுட்டிக் காட்டி விடவில்லை. ஒவ்வொரு மனிதனுக்கும் கடவுளின் தரிசனம் கிடைக்கும். ஆனால் நாமோ அதற்கு லாயக்காவதில்லை. நான் சாதாரணமான தொழிலாளி; இந்தியரின் பரம ஊழியன்; மனித கோடிகளுக்கு உழைக்கும் வேலையாள்; சத்தியம் என்று எனக்குத் தோன்றும் வண்ணம் நடக்க விரும்புகிறேன். புராதனமாக உள்ள சத்திய வசனங்களையே நான் விளக்கிக் காட்டினேன். இவ்வளவு தான் என்னிடமுள்ள விசேஷம். இப்படியிருக்கையில் மகாத்மா, ஞானி, என என்னை எதற்காக அழைக்கிறீர்கள்? அவ்விதம் அழைக்கக் கூடாது.”

இன்னும் “ஜனங்களை கவர்ன்மெண்டார் அடிமை கொண்டிருக்கின்றன ரென்றால், அதனைப் போக்கி, அந்த ஜனங்களை ஒத்துழையாக்காரர் அடிமைகளாகக் கொள்ளக் கூடாது. என்னைப் பற்றின மட்டில், தேசாபிமானம் என்றால், அது இந்தியாவுக்கு மட்டுமன்று; எல்லாப் பூமிகளிடத்தும் நான் அபிமானம் உள்ளவன். மனித கோடிகளெல்லாம் சுகமே வாழவேண்டு மென்பது தான் எனது விருப்பம். இந்தியா மட்டும் சுகப்பட்டால் போதுமென்பது என் கருத்தன்று. இந்தியாவுக்கு நன்மை செய்ய வேண்டுமென்று கருதி இங்கிலாந்துக்கோ, ஜெர்மனிக்கோ, யான் தீங்கிழையேன். ஒரு தேசத்தாரிடம் மட்டும் அபிமானங் கொண்டிருப்பின், அது அவ்வளவு விசேஷமான தேசாபிமானம் அன்று” என்றும் அவர் சொல்லியுள்ளார்.

---

# அதிகாரம் 8

## ராஜீயக் கொந்தளிப்பு

ராஜீய முயற்சிகள் 1921-ம் வருஷத்திலே வெகு பலமாயிருந்தன. அதனால், என்ன நேருமோ, யாது விளையுமோ என அனைவரும் சிந்தித்திருந்தனர். ராஜீய நிலைமை இப்படியும் அப்படியுமாகத் தத்தளிப்பாகவே இருந்தது. அதன் அதிர்ச்சியினால் காந்தி கூட நிம்மதியாக இருக்க முடியவில்லை.

ஜனக் கொதிப்பான இயக்கம் முற்றி வந்தது. அப்பொழுது கவர்ன்மெண்டாரின் அடக்கு முறைக் காரியங்கள் மிருகத் தனமாக இருந்தன. இதனால் இயக்கத்தின் சீர்மை பரவி வரலாயிற்று. பம்பாய் மாகாணத்தைச் சேர்ந்த மலிகான் என்னுமிடத்தில் கொடிய கலகம் ஏற்பட்டது. பீஹார் மாகாணத்தைச் சேர்ந்த கிரிதம் என்னு மிடத்திலும் கலவரங்கள் நிகழ்ந்தன. 1921-ம் வருஷம் மே மாதம் அஸ்ஸாம் மாகாணத்திலே இன்னும் பிரமாதமான தொல்லைகள் நேர்ந்தன. அங்கே தேயிலைத் தோட்டங்களில் வேலை செய்து வந்த பன்னிரண்டு ஆயிரம் கூலிகள் வேலையை விட்டு விட்டார்கள். அவர்களைக் கூர்க்கத் துருப்புகள் தாக்கலாயினர். கிழக்கு வங்காளத்திலுள்ள ரயில்வே கம்பெனியிலும் வேலை பார்த்து வந்த தொழிலாளர் அக் கொடுமையைக் கண்டு சகியாமல், இரண்டு மாதம் வேலை நிறுத்தஞ் செய்தனர்.

மீண்டும் சமரஸத்தை யுண்டு பண்ண காந்தி முயன்றார். ராஜப் பிரதிநிதியான லார்டு ரீடிங் என்பவருடன் மே மாதம் அவர் நீண்ட நேரம் பேசியிருந்தார். மூர்க்கச் செயல்களை மூட்டி விடும் பான்மை யுள்ள பிரசங்கம் புரிந்ததாக அலி சகோதரர்களின் மீது குற்றஞ் சாட்டப்பட்டது. அவர்களுடன் கலந்து பேசி, சமரஸம் உண்டு பண்ண முயலுவதாக ராஜப் பிரதிநிதிக்கு அவர் அறிவித்தார். அதன்படியே, இனிமேல் மூர்க்கச் செயலுக்கு இடங் கொடுக்கும்படி பேசுவ

தில்லை யென அலி சகோதரரிடம் வாக்குறுதி வாங்கிக் கொடுத் தார்.

என்றாலும், ஒத்துழையா இயக்கமோ எவ்விதத்திலும் தளர்ச்சி யடையவில்லை ; இயக்க விஷயமாக இன்னும் மிக்க தீரமான வழியை மேற் கொள்ளவே இந்திய முகம்மதியர் முயன்று வந்தனர். ஜூலை மாதம் 8-ந் தேதி யன்று கராச்சி நகரத்திலே கிலாபத் மகா நாடு நடை பெற்றது. அதில் முகம்மதியரின் கண்டிப்பான கோரிக்கைகள் மீண்டும் வற் புறுத்திச் சொல்லப்பட்டன. மேலும், " ராணுவத்தில் வேலை பார்ப்பதும் சரி, ராணுவத்திற்கு ஆள் சேர்த்துக் கொடுப்பதும் சரி, எந்த முகம்மதியனுக்கும் தகாத காரியம். அங்கோரா கவர்ன்மெண்டுக்கு விரோதமாக ஆங்கில கவர்ன் மெண்டு போர் புரியுமானால், இந்தியாவிலுள்ள முகம்மதியர் சட்ட மறுப்பில் முனைந்து விடுவர். இந்தியக் குடியரசை ஏற்படுத்தவும் முயல்வர்" என்று அச்சங் காட்டியும் அம் மகா நாட்டில் தீர்மானங்கள் செய்யப்பட்டன.

ஜூலை மாதம் 28-ந் தேதி யன்று அகில இந்திய காங்கி ரஸ் கமிட்டியார் பம்பாயில் கூடினர். அப்பொழுது, "வேல்ஸ் இளவரசருக்கு கவர்ன்மெண்டார் செய்யும் வரவேற்பு வைப வத்தில் ஜனங்கள் கலந்து கொள்ளவே கூடாது. ஸெப்டம்பர் 30-ந் தேதிக்குள் அன்னிய தேச ஆடைகளை விலக்கிவிடவேண் டும் ; கத்தரை அபிவிருத்தி செய்ய வேண்டும். கை ராட்டி னத்தில் நூல் நூற்றலையும், கைத்தறி நெசவையும் பிரபலஞ் செய்ய வேண்டும் ; கள்ளுக்கடைகளில் குடிக்கச் செல்வோரை கவர்ன்மெண்டார் ஆதரித்த போதிலும், மதுவிலக்கு முயற்சி யை மும்முரமாகச் செய்ய வேண்டும்" என்று அக் கமிட்டி யார் தீர்மானங்கள் செய்தனர். தவிர, கிலாபத் முகம் மதியரைப் போலல்லாமல், தற்போது சட்ட மறுப்புக் கூடா தெனவும், அஹிம்ஸா தர்மத்தைப் பரப்ப வேண்டு மெனவும், தீர்மானித்தனர்.

சட்ட மறுப்பு :—ஆகஸ்டு மாதத்திலே மலையாள மாப்

பிள்ளைமார்கள் மூர்க்கமாகக் கிளம்பிக் கலகஞ் செய்தனர். அக்கலகம் பல மாத காலம் நீடித்திருந்தது. அவர்களை யடக்கிச் சாந்தப் படுத்த மௌலானா முகம்மதலியுடன் மலையாளஞ் செல்ல வேண்டுமென்று காந்தி விரும்பினார். ஆனால் கவர்ன்மெண்டோ அதற்கு அனுமதி கொடுக்கவில்லை. இது போதாமல், ராஜத் துவேஷமான தீர்மானஞ் செய்தார்களென்று முகம்மது அலியையும், ஷௌகத் அலியையும், இன்னும் பல முகம்மதியத் தலைவர்களையும் கைது செய்து போட்டது. அது கண்டு மத்திய கிலாபத் கமிட்டியாரும், பிறரும் சும்மா இருக்கவில்லை. ராஜத் துவேஷமான தீர்மானம் எனப்பட்டதை அக்கமிட்டியாரும் ஆதரித்து நிற்கலாயினர். இந்தியாவின் பல இடங்களிலே நூற்றுக் கணக்கான மகா நாடுகளை இந்தியர் கூட்டி, அதே தீர்மானங்களை ஆதரித்து வற்புறுத்தினர். காங்கிரஸ் மகா சபையில் கௌரவம் வாய்ந்த ஐம்பது இந்தியருடன் சேர்ந்து, காந்தி பகிரங்க விளம்பரமொன்று விடுத்தார். அதன் சாரம் என்னவென்றால் :—

"கவர்ன்மெண்டுடன் கலந்து கொள்ள இஷ்டமில்லையென்று தமது அபிப்பிராயத்தை வெளியிட ஒவ்வொருவருக்கும் உரிமை யுண்டு. ராஜீய விஷயம், பண விஷயம், சன்மார்க்கம் ஆகிய எவ்விதத்திலும் இந்தியாவை இக் கவர்ன்மெண்டார் இழிவாக்கி விட்டனர். அத்தகைய கவர்ன்மெண்டிலே எத்துறையிலும் இந்தியர் உத்தியோகஞ் செய்யக் கூடாது. தவிர, கவர்ன்மெண்டுடன் எந்த இந்தியனும் எவ்வித சம்பந்தமும் வைத்துக்கொள்ளக் கூடாது. இதுவே இந்தியரின் கடமை."

பின்பு, அலி சகோதரர்களுக்கு இரண்டு வருஷம் கடுங் காவல் தண்டனை விதிக்கப்பட்டது. ஆனாலும் அது கண்டு இந்தியர் பயந்து விடவில்லை; ராஜீய முயற்சிகளை முன்னையிலும் இரு மடங்கு மும்மரமாகச் செய்து வந்தனர். காங்கிரஸ் மகா சபையின் நிர்வாகக் கமிட்டியார் இன்னும் திடமான வழியை மேற் கொள்ளலாயினர். அதாவது, ஒவ்வொரு மாகாணத்தினரும் தங்களது பொறுப்பில், சட்ட மறுப்

பென்னும் இயக்கத்தை ஆரம்பிக்க வேண்டும். வரி கொடாமலிருக்கத் தொடங்க வேண்டும் என்பதே. மேலும் அவ் விதம் நடக்க முன் வருவோர் ஒத்துழையாமையை மேற்கொள்வதாகவும், சுதேசியத்தைப் பூராவாகப் பூர்த்தி செய்வதாகவும், விரத மெடுத்துக் கொள்ள வேண்டும். நூல் நூற்பதாக ஒப்புக் கொண்டு, அஹிம்ஸா தர்மத்தையே கைக்கொள்வதாகவும் சபதஞ் செய்து கொடுக்க வேண்டும் என்று உத்தர விட்டனர்.

எனவே, காந்தியின் யோசனைப்படி, ஜனக் கொதிப்பை ஒழுங்கு படுத்தி அதனைத் தியாக வழியில் திருப்பி விடவே அக்கமிட்டியார் முயன்றனர். தியாக புத்தி எல்லாருக்கும் இருக்கவேண்டு மென்பதற்காக அவர்கள் ஒரு நிபந்தனையும் செய்தனர். அதாவது, சட்ட மறுப்பில் இறங்கிக் காரியஞ் செய்வோர் தாங்கள் கைது செய்யப்பட்டு விட்டாலும், தங்கள் குடும்ப சம்ரட்சணைக்காக காங்கிரஸ் மகா சபையிலிருந்து திரவிய சகாயத்தை எதிர் பார்க்கக் கூடாது என்பதே.

இயக்கத்தின் வேகம் :—1921-ம் வருஷம், நவம்பர் மாதம் 17-ந் தேதி யன்று வேல்ஸ் இளவரசர் பம்பாயில் வந்திறங்கினர். அப்பொழுது, சட்ட மறுப்பியக்கம் பிரமாதமாக ஆரம்பமாயிற்று. பம்பாய் வாசிகளிலே ஏழைகளும், மத்திய வகுப்பினரும் அவரது வரவேற்பு வைபவத்தில் கலந்து கொள்ள வில்லை. ஆனல் பணக்காரரும், பாரசிகரும் அதிகாரிகளுமே அவ்வைபவத்தில் கலந்து கொண்டார்கள். ஜனக் கூட்டம் அவர்களைத் தடுக்கலாயிற்று. ஸ்திரீகளையும் அக்கூட்டம் விடவில்லை. கலகம் நெடுகப் பரவியது. வீடுகள் கொள்ளை யிடப்பட்டன; பலர் கொல்லப்பட்டும், காயமடைந்தும் போயினர்.

வேல்ஸ் இளவரசர் பம்பாயில் வந்திறங்கும் தினத்திலே இந்தியாவெங்கும் கடைகளை மூடி, வேலை நிறுத்தஞ் செய்து, துக்கங் கொள்ள வேண்டுமென்று முன்னமேயே காங்கிரஸ் மகா சபை கட்டளை யிட்டிருந்தது. அதன்படி இந்தியாவெங்

கும் வெகு நேர்மையாக நடந்தது. வேறு எந்த இடத்திலும் கலவரம் என்பதேயில்லை. பம்பாயில் மட்டுந் தான் மேலே சொல்லிய வண்ணம் மூர்க்கச் செயல் நிகழ்ந்தது. இது கேட்ட காந்தியோ அம்பினால் தாம் பிளக்கப்பட்டது போல பெரிதும் வருந்தினர்.

ஒழுங்கீனம் உண்டாய் விட்டது என்று கேட்ட வுடனே, அவர் அவ்விடத்திற்கு விரைந்து போனார். அவரைக் கண்டதும் ஜனத்திரள் சந்தோஷ ஆரவாரஞ் செய்தது. மூர்க்கமும் காட்டி விட்டுச் சந்தோஷப்படுகின்ற னரே யென்று காந்திக்கு வெட்கமும், துயரமும் அதிகரித் தன. ஜனத்திரளை அவர் கண்டித்துப் பேசி, உடனே கலைந்து விடுங்கள் என்று சொன்னார். இஷ்டமிருந்தால், இளவரசை வரவேற்கப் பாரசிகருக்கு உரிமையுண்டு, அங் ஙனமிருக்கையில், மூர்க்கச் செயல் புரிந்து அவர்களைத் துன் புறுத்த ஜனத்திரளுக்கு உரிமையில்லை யெனவும் அவர் சுட்டிச் சொன்னார்.

இது கேட்ட ஜனங்கள் வெட்கி வாய் பேசாது போயினர். ஆனால் வேறிடங்களிலே கலவரங்கள் நேர்ந்தன. கொதித்துக் கிளம்பி விட்ட இருபதாயிரம் ஜனங்களை ஒரே முறையில் திடீரென எப்படி சாந்தப்படுத்த முடியும்? என்றாலும் கலவரம் ஓரளவுக்கு உட்பட்டதாகவே இருந்தது. மேனாட்டுக் கலகங்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், இதனை அவ்வளவாகக் கலகமெனல் கூடாது; மேனாட்டுக்கலகங்களில் எவ்வளவோ உயிர்ச் சேதமும், பொருள் சேதமும் நேரும். பம்பாய் வாசிகளும் ஒத்துழையாக்காரரும் சாந்தமே நிரம்பி யிருக்க முயலவேண்டு மென்று காந்தி வேண்டிக்கொண்டார். இத்தகைய கலவரம் நேரின் சட்ட மறுப்பியக்கத்தைப் பெருவாரியாகச் செய்யமுடியாதென்று சொல்லி, அந்த இயக் கத்தை நிறுத்தி விட்டார். பிறருடைய குற்றத்திற்காக அவர் தமக்குத்தாமே தண்டனை விதித்துக் கொண்டார்; அதாவது ஒவ்வொரு வாரமும் இருபத்து நான்கு மணி நேரம் உண்ணா நோன்பு கொண்டார்.

இந்தியாவிலுள்ள ஐரோப்பியருக்கோ பம்பாயில் நடந்த கலவரத்தைக் கண்டு அவ்வளவாக அச்சம் ஏற்படவில்லை. தேசமெங்கும மிகவும் அமைதியாகக் கடையடைப்பும், வேலை நிறுத்தமும் ஏற்பட்டதைக் கண்டே அவர்கள் கலங்கினர்கள். ஆதலின், உடனே மிடுக்கான சட்டங்கள் செய்ய வேண்டு மென்று ராஜப் பிரதிநிதியை அவர்கள் வற்புறுத்தினர்கள். அவ்வளவு தான் தாமதம். சட்ட சம்மத மில்லாத பல மூர்க்க மான முறைகளை மாகாண கவர்ன்மெண்டுகள் கையாளத் தொடங்கி விட்டன.

அராஜகக்காரர், ரகசிய சங்கத்தினர், ஆகிய இவர்களைப் பற்றி 1908-ம் வருஷம் ஏற்பட்ட பழைய சட்டமொன்றை அதிகாரிகள் புதுப்பித்து, காங்கிரஸ் தொண்டர்களை அடக்கி ஒடுக்கலாயினர். அது கண்டு இந்தியர் பயந்துவிடவில்லை. ஆயிரக் கணக்காக இந்தியர் முன் வந்து, அத்தொண்டர் படையில் சேர்ந்து கொண்டனர். உடனே மாகாண காங்கிரஸ் சபைகள் அத்தொண்டர்களைப் பதிவு செய்து கொண்டு, அவர்களுக்குள் கண்டிப்பான ஒழுங்கை நிலைநாட்ட முயன்றன. டிசம்பர் மாதம் 24-ந்தேதி வேல்ஸ் இளவரசர் கல்கத்தாவுக்கு விஜயம் செய்தார். அவர் அந்நகரிலே பவனி வந்த காலத்தில், தெருக்களிலே ஈ, குருவி, காக்காய் கூட இல்லை, அலங்காரம் எதுவுமில்லை; துக்க மயமாகவே தெருக்கள் தோன்றி நின்றன.

அந்நாளிலே ஒத்துழையா இயக்கம் இன்னும் வர வர வலுத்துக் கொண்டே வந்தது. ஆமதாபாத் நகரிலே காங்கிரஸ் மகாசபை கூடிற்று. அக்கூட்டத்தின் தன்மையை என்னென்று பக்தியுடன் புகழ்வது! அம்மகா சபையின் தலைவராக அக்கிராசனம் வகிக்க வேண்டிய சித்தரஞ்சன தாஸர் அச்சமயம் சிறையிலிருந்தார். மகா சபையில் நீண்ட பிரசங்கங்கள் நடக்கவில்லை; எல்லாம் சுருக்கமாகவே யிருந்தன. முந்திய மகா சபைகளில் செய்யப்பட்ட தீர்மானங்கள் மீண்டும் வற்புறுத்தப்பட்டன. அதோடு, இந்திய ராஜீய இயக்கத்திற்கு காந்தியே ஸர்வாதிகாரி; அவருடைய சொற்படியே

அனைவரும் நடக்க வேண்டும், அவரைக் கைதி செய்து விட்டால், தமக்குப் பதிலாக ஒருவரை ஸர்வாதிகாரியாக நியமிக்க அவருக்கே உரிமையுண்டு என்றும் ஒரு தீர்மானம் செய்யப்பட்டது. அதற்கப்பால் இந்தியா வெங்கும் ஒத்துழையா இயக்கத்தின் மதப்பற்றுன உற்சாகம் பிரமாதமாக நிரம்பிப் பாவி யிருந்தது. அச்காலத்திலே 25-ஆயிரம் மனிதர்களும், ஸ்திரீகளும் அகமும், முகமும் மலர்ந்து கைதிகளாகச் சிறைக் கூடம் புகுந்தனர்.

சட்ட மறுப்பு இயக்கத்தைப் பெருவாரியாகச் செய்ய மீண்டும் காந்தி ஏற்பாடு செய்யலானர். வரி கொடாச் சட்ட மறுப்பியக்கம் முதன் முதலாக பார்டோலி என்னும் ஜில்லாவில் ஆரம்பமாவதாக ஏற்பாடாயிற்று. அது பம்பாய் மாகாணத்திலுள்ளது; 140 கிராமங்கள் கொண்டது, அதன் ஜனத் தொகை 87 ஆயிரம். அவ்விடத்தில் தான் காந்தியின் கருத்துக்கள் பலமாக வேரூன்றி யிருந்தன.

வரிகொடா இயக்கம் ஆரம்பமாகும் தேதியைக் குறிப்பிட்டு, மிகவும் மரியாதையாக ராஜப்பிரதிநிதிக்கு காந்தி ஒரு கடிதமெழுதினர். ராஜப்பிரதிநிதி தமது அரசின் கொள்கையையும், போக்கையும் திருத்திக் கொள்வதானல், ஏழு தினங்களுக்குள் தகவல் தெரியவேண்டு மென்றும் காந்தி குறிப்பிட்டார். ஏழு தினங்களுக்குள் சரியான பதில் கிடைக்காது போனல், வரி கொடா இயக்கம் ஆரம்பமாகி விடுமெனவும், என்ன நேர்ந்தபோதிலும் சரி, இயக்கம் நடந்தே திருமென வும், அவர் சொல்லி யிருந்தார்.

**காந்தியின் நோன்பு** :—சட்ட மறுப்பியக்க விஷயமாக ராஜப்பிரதிநிதிக்கு காந்தி இறுதிக் கடிதம் அனுப்பியதும், மிகக் கொடிய சம்பவ மொன்று நடந்தது. அது நேர்ந்த இடம் ஐக்கிய மாகாணத்திலுள்ள சௌரி சௌரா என்பதாகும். அங்கே ஓர் ஊர்வலம் நடந்தது. அந்த ஊர்வலத்திலிருந்த ஜனத்திரளைப் போலீஸார் தாக்கினர். உடனே ஜனங்களும் தாக்கலாயினர். அது கண்ட போலீஸார் ஜனங்களின் மீது

சுட்டு, ஸ்டேஷனுக்குள் பதுங்கிக் கொண்டனர். ஜனங்களுக்கோ கோபம் பொங்கி விட்டது. ஆதலால், அவர்கள் அந்த ஸ்டேஷனைக் கொளுத்தி, ஆங்கிருந்த போலீஸாரையும் கொன்று போட்டார்கள்.

அதிலே, ஒத்துழையா இயக்கத்தைச் சேர்ந்த தொண்டர் எவரும் கலந்து கொள்ளவில்லை. ஆதலின், அச் சம்பவத்திற்கும் நமக்கும் சம்பந்தமில்லை யென்று காந்தி சொல்லலாம். அவ்விதம் சொல்லின், அது சரியே யாகும். ஆனால், அவரோ இந்தியரின் ஸர்வாதிகார புருஷன் ; இந்தியரின் காரியங்களுக் கெல்லாம் தாமே பாத்தியப்பட்டவ ரென்பதும் அவர் கொள்கை. எந்த இந்தியன் குற்றமிழைத்த போதிலும், அவருக்கு மனம் புண்ணாகும்.

ஆதலால், தமது தேசத்தினர் செய்த பாபத்தை அவர் தம் மீது போட்டுக் கொள்ளலானார். அவருக்கு உண்டான ஏமாற்றமும், துயரும் சொல்லுந் தரமல்ல. எனவே, சட்ட மறுப்பியக்கத்தை இரண்டாவது முறையும் அவர் நிறுத்திவிட்டார். பம்பாயில் நேர்ந்த கலகங்களை விட இக் கலகம் அவரைப் பெரிதும் மனமொடிந்து போகச் செய்து விட்டது. ராஜப்பிரதிநிதிக்கு இறுதிக் கடிதம் அனுப்பி விட்டு, இயக்கத்தை நிறுத்தினால், கேலிக்கு இடமாகு மல்லவா ? சனியனைப் போலுள்ள கர்வம் என்பது அவரிடம் தலைகாட்டப் பார்த்தது. உடனே, "சாத்தானாகிய கர்வம் தலைகாட்டப் பார்ப்பதா ? இயக்கத்தை நிறுத்தி விட இதுவும் ஒரு காரணமே" என்று அவர் மதித்து, இயக்கத்தை நிறுத்தி விட்டார்.

அது சம்பந்தமாக 1922-ம் வருஷம், பிப்ரவரி மாதம் யௌவன இந்தியா பத்திரிகையில் அவர் ஒரு வியாஸம் எழுதி வெளியிட்டார். அது அவருடைய வாழ்வின் தன்மையைக் காட்டும் மிக விசேஷமான வியாஸம். அதனை என்னென்று புகழ்வது ! அவர் எழுதி யிருப்பதாவது :—

" கடவுளுக்கு என்னிடம் மிகுந்த பட்சமுளது. சத்திய

மான அஹிம்ஸா தர்மம் இன்னும் நன்கு பரவி விடவில்லை யென மூன்றாவது முறையும் அவர் எனக்கு எச்சரிக்கை செய்திருக்கிறார். அஹிம்ஸா தர்மம் பரவி யிருந்தாலல்லவா பெருவாரியாக ஜனத் திரளைக் கொண்டு, சட்ட மறுப்பை நடத்தலாம்?"

"1919-ம் வருஷம் ரௌலட் சட்டக் கிளர்ச்சி தோன்றிய காலையிலே, முதல் தடவை அக் கடவுள் எனக்கு எச்சரிக்கை கொடுத்தார். அப்போது ஆமதாபாத், வீரமகம், அமிருதஸரஸ் முதலிய இடங்களிலுள்ள ஜனங்கள் தவறிப் போயினர். உடனே நான் பின் வாங்கிக் கொண்டேன்; ஆண்டவனையும், மனிதரையும் முன்னிட்டுப் பணியலானேன்; ஜனத்திரள் சேர்ந்து நடத்த வேண்டிய இயக்கத்தை நிறுத்திக் கொண்டேன். நான் மட்டும் செய்வதாக இருந்த சட்ட மறுப்பையும் விட்டு விடலானேன்."

"அடுத்த தடவையிலே, பம்பாய்க் கலகங்களின் மூலமாக ஆண்டவன் எனக்குப் பயங்கரமான எச்சரிக்கை யிட்டார். பம்பாயிலே ஜனங்கள் செய்த மூர்க்கச் செயலை என் கண்ணால் பார்த்தேன். ஒத்துழையா இயக்கத்தின் நன்மையைக் கருதியே, ஜனத்திரள் அவ்விதம் செய்ததாம். உடனே பெருவாரியான இயக்கம் வேண்டாமென்று சொல்லி அதனை விட்டு விட்டேன். 1919-ம் வருஷத்தில் ஏற்பட்ட மானக் கேட்டைவிட, பம்பாயில் ஏற்பட்ட அவமானம் மிகப் பெரியது. இதனால் எனக்கு நன்மையே கிடைத்தது."

"அவ்விதம் இயக்கத்தை நிறுத்தியதனால் தான், சத்தியம், அஹிம்சை ஆகிய இரண்டையும் நிலை நிறுத்தவே இந்தியா கருதுவதாக உலகினர் அறியலாயினர். மிகவும் கொடுமையான அவமானம் இப்போது நேர்ந்துளது. சௌரி சௌரா சம்பவத்தின் மூலம் கடவுள் எனக்கு அறிவு புகட்டினர். அஹிம்ஸா தர்மத்தை மேற்கொண்டு, சுதந்திர சிம்மாசனத்தில் ஏறி யமர இந்தியா முனைந்து நிற்கும்போது, பிறர் கோபமூட்டினரே யென்று கருதி, ஜனங்கள் மூர்க்கத்தில் இறங்கலாகுமோ?

அவ்விதம் இறங்குதல் கெட்ட சகுனமே. இந்தியாவிலுள்ள காவாலிகளை வசப்படுத்தி நல்வழிக்குக் கொண்டுவந்தால் தான், அஹிம்ஸா தர்மத்தை மேற்கொண்டுள்ள ஒத்துழையாக்காரர் வெற்றி மாலை சூடலாம்.''

பிப்ரவரி மாதம் 11-ந் தேதியன்று பார்டோலியிலே காங்கிரஸ் மகாசபையின் காரியக் கமிட்டியார் கூடினர். சௌரி சௌரா சம்பவமும், காந்தியின் தீர்மானமும், அப்போது ஆலோசிக்கப்பட்டன. காந்தியின் சகாக்களிலே பலர் அவருடைய தீர்மானத்தை ஒப்புக்கொள்ளவில்லை ; சட்டமறுப்பை நிறுத்தக் கூடாதென்று வாதித்தனர். என்றாலும், காந்தியின் வேண்டுகோளுக்கு இணங்கி அவருடைய இஷ்டம்போல் காரியம் நடக்கட்டும் என்றனர். அவரைப் போலவே அவர்களிற் பலரும் ஜனத்திரளின் மீது சந்தேகங் கொண்டனர். அதனாலேயே, இயக்கத்தை நிறுத்தி வைக்க ஒருவாறு இசைந்தனர். தம்மிடம் அவர்கள் அவ்வளவு தூரம் அன்பு காட்டியது தெய்வ சகாயமே யென்று காந்தி சொல்லி யிருக்கிறார். முடிவில், பரிபூரணமாக அஹிம்ஸா தர்மம் பரவுவதற்கான முயற்சி செய்யும்படி அக் கமிட்டியார் கட்டளை யிட்டனர்.

அந்த இயக்கத்தை நிறுத்தினது பற்றி இன்னும் காந்தி சொல்லி யிருப்பதாவது :—

“ இராஜீய விஷயமாகப் பார்த்தால், இயக்கத்தை நான் நிறுத்திவிட்டது பலமற்ற செய்கையாகக் காணப்படும். நமது மதத்தை யொட்டிப் பார்ப்பின், அது சரியென்றே புலப்படும். தவறு நேர்ந்து விட்டதென நாம் ஒப்புக் கொள்ளுதல் எவ்வளவோ மேலானது. இதிலிருந்து, நம் தேசத்தினருக்கு ஒரு படிப்பினை ஏற்படும். சத்தியமும், அஹிம்ஸா தர்மமுமே நான் விரும்பும் குணங்கள். தெய்வ சக்தி வேண்டுமென நான் விரும்பவில்லை. எல்லாரையும் போலவே நானும் சாமானியமான மனிதன். ஆதலால் யாரையும் போல் யானும் தவறக் கூடும். நான் செய்யக்கூடிய தேச ஊழியத்துக்கும் ஓர் அளவுண்டு. என்னிடம் குறைகளிருந்தும், இதுவரையில் என் ஊழியங்களுக்கு ஆண்டவன் சகாயமே செய்திருக்கிறார்.''

"தவறி விட்டோமென ஒப்புக் கொள்ளுதல் மிகவும் மேலானது. அப்படியானால் நம்மிடமுள்ள அசுத்தங்களும், பாபங்களும் போய்விடும். இயக்கத்தி லிருந்து நாம் தற்சமயம் பின்வாங்கி யிருப்பதனால், நமது கட்சி இன்னும் வலுக்கும். நேரான வழியிலிருந்து விலகி நடப்பின், தான் போகவேண்டிய இடத்தை ஒருவன் அடைய முடியாதல்லவா ? சௌரி சௌரா சம்பவம் வந்து, பார்டோலியில் நடக்க வேண்டிய காரியத்தைப் பாதிக்காது என்று சிலர் சொல்லுகின்றனர். அச் சம்பவத்தைக் கேட்டு, பார்டோலி வாசிகள் மதிமயங்கி மூர்க்கத்தில் இறங்கினாலல்லவா நமக்கு ஆபத்துண்டாகும் என்றும் சிலர் வாதிக்கின்றனர்."

பார்டோலி வாசிகள் மிகவும் அமைதியுள்ளவர்களே. இதில் எனக்குச் சந்தேகமில்லை. இந்தியாவின் இதர பாகங்கள் அனைத்தும் பரிபூரணமாக நம்முடன் ஒத்துழைத்தால் தான், பார்டோலி வாசிகளின் முயற்சி பலன் தரும். கலப் பாலிலே ஒரு துளி விஷம் பட்டால், பாலனைத்தும் கெட்டுப் போகுமல்லவா ? அவ்விதமே, சௌரி சௌராவில் நேர்ந்த கலகமென்னும் விஷத்தினால் பார்டோலியின் அமைதி கெட்டு விடும். சட்ட மறுப்பு இயக்கம் நடப்பதானால், பரபரப்பான மனவெழுச்சி யிருக்கக் கூடாது. மௌனமாகக் கஷ்டங்களைச் சகித்திருப்பதற்கு சட்ட மறுப்பு ஒரு சாதகமாகும். சாந்தமாகவும், பிறரறியா வண்ணமும் நாம் கஷ்டங்களைச் சகித்திருப்பின், அதனால் உண்டாகும் பலன் வெகு பிரமாதமாக இருக்கும்."

அஹிம்ஸா தர்மத்தை மேற்கொள்ளுவது காரணமாக ஹிம்ஸையை நாம் போக்கிவிட வேண்டும். இல்லையேல் பின் வாங்கத்தான் வேண்டும். பின்வாங்கி, சமாதானத்தை எங்கும் நிலைநாட்ட வேண்டும் ; நமது வேலைத் திட்டத்தையும் மாற்றியமைத்துக் கொள்ள வேண்டும். கவர்ன்மெண்டார் நமக்குக் கோபத்தை மூட்டிய போதிலும் சரி, பெருவாரியான சட்டமறுப்பு நடக்குங் காலத்திலே, எங்கும் சமாதானம் நிலைத்திருக்குமென்ற நம்பிக்கை ஏற்பட்டால் தான், நாம்

நமது இயக்கத்தைத் தங்கு தடையின்றி ஆரம்பித்து நடத்த முடியும். நாம் அவமானம் அடைந்துவிட்டோ மென்றா வது, தோற்றுப் போய்விட்டோ மென்றாவது, நமது எதிரி கள் கும்மாளம் போடட்டும். சத்தியத்தை மீறி நடந்து விட்டோ மெனவும், பாபச் செயல் புரிந்துவிட்டோ மென வும், நாம் குற்றஞ் சுமத்தப்படுவதை விட, கோழைகளாக வும், பலமற்றவர்களாகவும் இருந்து விட்டோமெனப்படுதல் மேலாகும்.''

இவ்விதம் காந்தி சொல்லிய பின், பிறரிழைத்த பாபத் திற்காகத் தாம் பரிகாரந் தேடிக்கொண்டார்.

சௌரி சௌரா சம்பவத்திற்காகத் தாம் ஐந்து தினம் பட்டினி கிடப்பதாக விரதங் கொண்டார். வேறு யாரும் அவ் விதம் செய்யக்கூடா தென்பது அவருடைய கருத்து! என்ன பெருந்தன்மை! தாம் மட்டும் தண்டனை யடைய வேண்டு மென அவர் விரும்பினர். அவர் சொல்லியிருக்கும் வண்ணம், ஒன்று அவர் இயக்கத்தை விட்டு விலகிவிட வேண்டும், அல் லது திடமான அனுபவம் கொள்ள வேண்டும். தமக்கு மட்டு மல்லாமல், சௌரி சௌராவில் தம் பெயரை உச்சரித்துக் கொண்டு பாப மிழைத்தவர்களுக்காகவும், அப் பட்டினி ஒரு வித தண்டனை யென்பது அவர் கருத்து.

அங்கே பாபஞ் செய்தவர்கள் கவர்ன்மெண்டினிடம் சரண்புகுந்து, தங்களது குற்றத்தை ஒப்புக்கொள்ள வேண்டு மென அவர் புத்தி சொன்னர். ஒத்துழையா இயக்கம் மூர்க்கத்தில் முடியாதிருக்கும் பொருட்டுத் தாம் எவ்விதமான கஷ்ட நஷ்டமும், வதையும், அவமானமும், அவசியமானல் மரணமும் அடையச் சித்தமென அவர் சொல்லியிருக்கிரு ரென்றல், அவருடைய மகத்துவத்தை நாம் எப்படி விரித் துரைப்பது!

———

## அதிகாரம் 9

## காந்தி கைதியாதல்

மனித கோடிகளிலே யாருக்கும் அத்தகைய பெருமையும், பெருந்தன்மையும் பொருந்திய சித்தம் இராது. காந்தி செய்த காரியத்தினுல் உண்டாகும் சன்மார்க்க பலன் மகா விசேஷமாகும். ஆனுல் ராஜீய விஷயமாகப் பார்த்தால், அவருடைய காரியம் வருந்தத் தக்கதே. இதை அவர் உணராமலில்லை. ராஜீய விஷயத்தில் தாம் முட்டாள்தனமாகவும், அவமானமாகவும் காரியஞ் செய்துவிட்டதாகப் பலர் சொல்லக் கூடுமென அவரே கூறியிருக்கிறுர்.

உண்மையாகப் பார்த்தால், ராஜீய விஷயத்தில் மிகவும் தீரமான முயற்சி செய்ய ஆயத்தமாயிருங்கள் என அவர் ஜனங்களை அளவுகடந்து உற்சாகப்படுத்தினுர்; அவர்களுடைய உணர்ச்சியைப் பிரமாதமாகத் தட்டியெழுப்பினுர்; முயற்சியில் முனையுங்காலம் வந்துவிட்டது, தயார் என்று சொல்லவும் காத்திருந்தார். ஜனங்களும் மிக்க நம்பிக்கையுடன் துடித்துக்கொண்டு பரவசமாக நின்றுர்கள். இப்படி மூன்றுமுறை அவர்களை உற்சாகத்தின் உயர்படியில் தூக்கி வைத்து விட்டு, உடனே திடீரென்று மூன்று முறையும் அந்த உற்சாகத்தைப் பாழ்படுத்தி விடுவது சரியன்று. அப்படிச் செய்வதனுல், உற்சாகமும், நம்பிக்கையும் அடியோடு மறைந்து அழிந்து போகக் கூடும்.

1922-ம் வருஷம் பிப்ரவரி மாதம் 24-ந் தேதி யன்று, அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி டில்லியில் கூடியது. இயக்கத்தை நிறுத்தி விட்ட தீர்மானத்தைக் குறித்து அங்கே பிரமாதமான ஆட்சேப சமாதானங்கள் ஏற்பட்டன. முடிவில் ஒருவாறு அத்தீர்மானம் ஒப்புக் கொள்ளப் பட்டது. என்றுலும், ஒத்துழையாக்காரருக்குள்ளே சமய பேதம் ஏற்படாமலில்லை. இயக்கத்தில் மும்முரமாக இறங்குமுன், மிகவும் திடமான ஒழுங்கு ஏற்பாடுகளும், கண்டிப்பான கட்டுப்பாடும்

உண்டாக வேண்டுமென்று காந்தி விரும்பினர். அதற்காக நிர்மாண வேலைத் திட்டமொன்று தயாரித்தார். இப்படி மெதுவான போக்கு ஏற்படுவதைக் கண்டு பலருக்குக் கோப முண்டாயிற்று. சட்ட மறுப்பியக்கத்தை நிறுத்தி யிருக் கக் கூடாதென்று பலர் கண்டித்தனர். கொள்கையை இப் படியும், அப்படியும் மாற்றி வருவதனுல், ஜனங்களின் தீவிர உற்சாகம் ஒய்ந்து போகிற தெனவும் வருந்திக் கூறினர்.

மனக் கசிவு :—என்ருலும், ஆட்சேப சமாதானத்தின் மேல், காந்தியின் விருப்பம் அங்கிகரமாயிற்று. உள்ளூர அவருக்கு வருத்தம் அதிகம். ஏனெனில், தமது கொள் கையை ஆதரித்தவர்களும் மனப்பூர்வமாகத் தம்மை ஆதரிக்க வில்லையென அவர் கண்டுகொண்டார். மேலும், தமது பக் கமாக ஒட்டுக் கொடுத்தவர்களும் "காந்தி அதிகார புருஷ ராகி விட்டார்" என்று புறங் கூறுவ ரெனவும் அவருக்குத் தோன்றிற்று. அது பற்றி அவர் எழுதியிருப்பதாவது :—

"ராஜீய விஷயத்தில் விபத்தான தோல்வி ஏற்படும் வண்ணம், நான் பிரார்த்தித்ததாகச் சிலர் நினைக்கின்றனர். அவ்விதம் நினைத்தல் சிந்தனையில் மூர்க்கங் காட்டுவதாகும். எப்போதும் எனக்குச் சாதகமாயிருப்போர் வெகு சிலரே. தென்னுபிரிக்காவிலே, நான் ஸத்தியாக்கிரகப் போர் நடத்திய பொழுது, முதலில் அனைவரும் என்னுடன் ஒருமனங்கொண்டு நின்றனர். ஒரு சமயத்திலே 64 பேர் தான் என்னுடன் சாதக மாக நின்றனர். அப்பால் பலரும் என்னைச் சார்ந்து நிற்க லாயினர். மிகவும் கொஞ்சம்பேர் என்னுடன் இருந்தபொழுது தான் மிகவும் சிறந்த ஆணித்தரமான வேலை நடந்திருக்கிறது. என் வார்த்தைக்குப் பெரும்பாலான ஜனங்கள் கட்டுப்பட்டு நிற்கின்றன ரென்பதைக் கொண்டு தான் கவர்ன்மெண்டார் அஞ்சுகின்றனர். எதைக் கண்டு அவர்கள் பயப்படுகிருர்களோ அதைக்கண்டு தான் நானும் பயப்படுகிறேன்."

"இப்போது இருப்பதைப்போல் எனக்கு எப்பொழுதும் பயம் இருந்ததில்லை. நான் திருத்தமுடியாத கடுமை யுடைய

வன். அவ்வாறு கமிட்டியாருக்கு நான் எச்சரிக்கை செய்திருக்கிறேன். ஜனங்கள் குற்றம்புரியும் ஒவ்வொரு சமயத்திலும், ஜனங்கள் தவறி விட்டனர் என்று சொல்லியே வருவேன்."

"இன்று நான் முன்னேயிலும் புத்திகொண்டு விட்டேன். எனது உள்ளத்தின் உணர்வைக் கண்டு தான் எனக்கு அச்சம். என்னுடைய கொள்கையை ஒருவர் ஆதரித்தாலும், அந்த ஒருவரைக்கொண்டு காரியம் நடத்த எனக்குத் தீரமுண்டு. அஹிம்ஸையென நாம் சொல்லி வரினும், அது திடமாக ஏற்படவில்லை. நாம் கோபக் கொதிப்புக்கு ஆளாகிக் கிடக்கிறோம். புத்தியில்லாக் காரியங்கள் செய்து, அக்கொதிப்பை கவர்ன்மெண்டார் வளர்த்து வருகின்றனர். கொள்ளை, கொலை, சூறை முதலியன இந்நாட்டில் நிரம்பிக் கிடக்க வேண்டுமென அவர்கள் விரும்புகின்றன ரென்றே காண்கிறது."

"வேறு வகையில்லாததனால் தான், நாம் அஹிம்ஸையை மேற் கொண்டிருப்பது போல் புலப்படுகிறது. மேலும், பழிவாங்கும்படியான சக்தி வந்தவுடனே, அவ்விதம் செய்ய வேண்டு மென்ற உணர்ச்சிக்கு நாம் இடங் கொடுப்பதாகவும் புலப்படுகிறது. வகையின்றி அஹிம்ஸா தர்மத்தை மேற்கொண்டிருப்பின், சத்தியமான அஹிம்ஸா தர்மம் ஏற்பட முடியுமோ? ஜனங்களின் கோபம் பொங்கி விடுமானால், ஆண், பெண், குழந்தை அடங்கலுக்கும் அனர்த்தந் தான். அப்போது இன்னான், இன்னாள் என்னும் வேற்றுமையிராது. இத்தகைய நிலைமை நேர்ந்துவிடின், அதற்காக நான் பட்டினி கிடந்து மரிப்பினும் யாது பயன்?"

"நாம் சத்தியசந்தர்களாக இருப்போமாக; வாள் வலியோ, தோள் வலியோ கொண்டு சுயராஜ்யம் பெற விரும்பின், அஹிம்ஸா தர்மத்தை விட்டு விட்டு, அவ்வலிகொண்டு முயல்வதே மேல். அப்போது அது யோக்கியமாகவும், நேர்மையாகவும் இருக்கும். இம்முறை தலைமுறை தத்துவமாக உலகினரால் கையாளப்பட்டதே. அப்போது வெளி வேஷக்

காரரென நம்மை எவரும் குறை கூற முடியாது. இப்போது நம் தேச ஜனங்கள் அனைவரும் சட்டமறுப்பில் இறங்காமல், நிர்மாண வேலையை நிறைவேற்றவே வேண்டும். நம்முடைய அடிப்படை ஆடி விட்டது. நாம் ஜாக்கிரதையாக இல்லாது போயின், பாதாளமான கடலில் ஆழ்ந்து விடுவோம்.''

இவ்விதம் அவர் சொல்லி விட்டு, எதிர்க் கட்சியை நோக்கிச் சொல்லுவதாவது:—

" அஹிம்ஸா தர்மத்தில் உங்களுக்கு நம்பிக்கை இல்லையா? இல்லையாயின், காங்கிரஸ் மகா சபையை விட்டு விலகி, புதிய கட்சியொன்றை உண்டாக்கி, பகிரங்கமாக உங்கள் கொள்கையை வெளியிடுங்கள். அப்போது மகா ஜனங்கள், நம்மிருவர் கொள்கைகளிலே எது நயமென உணர்ந்து கொள்ள முடியும். ஒளி மறைவு, எதற்காக? மனமும், வாயும் விட்டுப் பேசி நடவுங்கள்.''

மேற்சொல்லிய வார்த்தைகளை நோக்கின், காந்தியின் துயரம் மனக் கசப்பு உள்ளதானாலும் ஆண்மை பொருந்தியதே யெனப் புலப்படும். அவ்விதம் எழுதிய காலத்திலே அவர் கைதி செய்யப்படப்போகிறார் என்ற பேச்சு நடந்து வந்தது. ஒரு சமயம் அவர் உள்ளூர, " அப்பாடா! இந்நிலையிலிருப்பதை விட, கைதி செய்யப்பட்டு விட்டால் நலம்'' எனவும் கருதி யிருக்கக் கூடும். அந்த உண்மையை அவர் தான் அறிவார்.

**கைதியாகக் காத்திருத்தல்:—** தம்மைக் கைதி செய்து விடுவார்களென்று நெடுநாளாகவே அவர் எதிர் பார்த்திருந்தார். 1920-வருஷம், நவம்பர் மாதம் 10-ந்தேதியிலிருந்தே அவர் எல்லா ஏற்பாடுகளையும் செய்து வைக்கலானார். தம்மைக் கைதி செய்து விட்டால், இன்னின்னவாறு நடந்து கொள்ள வேண்மென ஜனங்களுக்கு அவர் எச்சரிக்கையான வழி காட்டியும், கூறியும் வந்தார். கைதி செய்யப்பட்டுப்போவதாக இருந்த வதந்தி பரவியிருந்த 1922, மார்ச்சு 9-ந்தேதி யன்று, ஒரு புதிய வியாசம் எழுதி, அதில் ஜனங்களுக்குச்

சொல்ல வேண்டியதை யெல்லாம் சொன்னார். ஜனங்களின் கோபம் பொங்கி விடுமோ என்பதுதான் அவருடைய பேரச்சமாக இருந்தது. ஜனங்களுக்குக் கோபம் பிறப்பின், அதுவே தம்மை மிகவும் அவமானப் படுத்துமெனவும் அவர் அறிவித்தார். அவர் சொல்லியதாவது:—

"என்னைக் கைதி செய்யும் தினம் சந்தோஷ தினமாகும். இப்படியே ஜனங்கள் நினைக்க வேண்டும். காந்தியைக் கைதி செய்து விட்டால் இந்தியருடன் போராட வேண்டியது நின்று போமென்று கவர்ன்மெண்டார் நம்பியிருக்கின்றனர். இல்லை, அப்படியில்லை யென்று கவர்ன்மெண்டுக்கு ஜனங்கள் நன்கு புலப்படுத்த வேண்டும். ஜனங்களுடைய பலத்தை அப்போதுதான் கவர்ன்மெண்டார் நன்கு அளவிட்டு அறிந்து கொள்ள முடியும். காந்தியைக் கைதி செய்தால், ஜனங்கள் கலகமாகக் கிளம்புவரே, கொடிய சம்பவங்கள் நிகழுமே, என்று கவர்ன்மெண்டார் பயந்து, என்னைக் கைதி செய்யாதிருந்தால், அது எனக்கு அவமானம்; எனவே ஜனங்கள் சாந்தமும், பொறுமையும் கொண்டிருக்கவேண்டும். நிர்மாண வேலையை நிறுத்தி விடக் கூடாது;

"மகாத்மாவைக் கைது செய்து விட்டார்களேயென்று கண்டிக்கக் கூட்டங் கூடக் கூடாது. கோர்ட்டுகளைக் கண்டு வெறுத்து விலகி விட வேண்டும். கவர்ன்மெண்டில் ஊழியம் பார்ப்பதைவிட்டு அகலவேண்டும், அதிகாரிகளின் பார்வைக்கு உட்பட்ட கலாசாலைகளைக் காலியாக்கிவிட வேண்டும், ஒழுங்கும், ஏற்பாடும் காட்டி நிர்மாண வேலையை நிறைவேற்றி வைக்க வேண்டும். இப்படி இந்திய ஜனங்கள் நடந்து கொண்டால், ஜெய காலம் நெருங்கி விடும்; இல்லையேல் அழிந்து போக நேரும்" இதுவே அவர் கருத்து.

எல்லாம் தயாராகிய பின், தமது ஆசிரமத்திற்கு அவர் போயமர்ந்தார்; தம்மைக் கைதி செய்ய வரப்போகும் அதிகாரிகளை வரவேற்கவும் காத்திருந்தார். சந்தோஷமாகவே அவர் சிறை புகுந்தார். தாம் இல்லாத சமயத்திலே, இங்

நியாவின் நம்பிக்கையும், உறுதியும் நன்கு புலப்படுமென்று அவர் கருதினர்; முடிவாகத் தமக்கு அவசியமான ஒய்வு வேண்டுமென்றும் அவர் எதிர்பாராமலில்லை.

சிறைபடல் :— மார்ச்சு மாதம் 10-ந் தேதி மாலையில், போலீஸ் அதிகாரிகள் ஸபர்மதி ஆசிரமத்துக்குப் போயினர். உடனே, காந்தியைக் கைதி செய்ய அவர்கள் வந்திருக்கும் செய்தி ஆசிரமமெங்கும் பரவிற்று. அது தெரிந்தவுடனே, காந்தி தாமே வந்து போலீஸாரிடம் சிறைபட்டார். இச் செய்தி பிரபலமாயிற்று. வெகு தூரத்திலிருந்த மௌலானு ஹஸரத் மோகனி அது கேட்டு ஒடி வந்து, அவரைத் தழுவிக் கொண்டார். யௌவன இந்தியா பத்திரிகையை வெளியிடுபவரான பாங்கரும் காந்தியுடன் சிறைபட்டவர். இருவரும் சிறைக் கூடம் நோக்கிப் போனர்கள். சிறைச்சாலை வாயில் வரையில் உடன்வர, காந்தியின் பத்தினிக்கு அனுமதி கிடைத்தது.

மார்ச்சு மாதம் 18-ந் தேதி யன்று மகத்தான விசாரணை ஆரம்பமாயிற்று. விசாரணை நடத்தியவர் ஆமதாபாத் ஜில்லா ஜட்ஜி. அவ்விசாரணை மிக்க மரியாதையும், நேர்மையுமாகவே நடை பெற்றது. கைதியும் சரி, ஜட்ஜியும் சரி, பரஸ்பரம் பெருந்தன்மையான மரியாதை காட்டியே நடந்து கொண்டனர். மரியாதை காட்டுவதில் ஒருவருக்கொருவர் சளைக்கவில்லை. விசாரணை சமயத்தில், ஆங்கிலேய வரசு பெருந்தன்மையும், பட்சபாதமின்மையும் காட்டியது போல், வேறு எப்போதும் காட்டியதில்லை. அதற்கு முன் கவர்ன்மெண்டார் செய்த பல பிழைகளுக்கும் அப்போது ஜட்ஜியாயிருந்த புரூம்பீல்டு என்பவர் பரிகாரஞ் செய்தாரெனலாம். அவ்விசாரணையின் விவரம் ஒரளவு ஐரோப்பிய பத்திரிகைகளில் பிரசுரமாயிற்று. அதன் எதிரொலிகள் பிரஞ்சுப் பத்திரிகைகளிலும் தென்பட்டன. அது சம்பந்தமாக உள்ள விஷயங்களை மட்டும் இங்கே திரும்பச் சொல்லுகிறேன்.

காந்தியைக் கைதி செய்ய அக் கவர்ன்மெண்டார் ஏன் தீர்மானித்தனர்? இரண்டு வருஷ காலம் அவர்கள் தயங்கிக்

கொண்டே யிருந்தார்கள். ஜனத் திரளின் கொதிப்பு மூர்க்கத்தில் முடியாதிருந்ததற்கு அவரது முக விலாசமே காரணமாயிருந்த சமயத்திலும், ஜனங்களின் ஆத்திரத்தைக் கட்டுப்படுத்த அவர் முயன்று வந்த சமயத்திலும், அவரை ஏன் கைது செய்யத் துணிந்தார்கள்? மதிமயக்கமே காரணமா? அல்லது கொள்ளையும், கொலையும், தீவைத்தலும் தேசத்திலே நிரம்பிக் கிடக்கட்டும், அப்போது தான் அடக்கு முறையின் வேகம் அனைத்தையும் காட்டலாம் என்று கவர்ன்மெண்டார் கருதியிருப்பதாகவே காண்கிறது என்பதாக அவர் சொன்னாரே, அதுவே காரணமா? உண்மையில் கவர்ன்மெண்டினுடைய நிலைமை கஷ்டமாகத் தான் இருந்தது. அவரைக் கண்டு கவர்ன்மெண்டார் மதிப்புக் கொண்டு பயந்தே கிடந்தனர். தயை காட்டி அவரை நடத்தி யிருப்பார்கள், ஆனால் அவரோ, தம்முடைய கோரிக்கைகளை அவர்கள் நிராகரிக்கும் வரையில், அவர்களிடம் தயை காட்ட மாட்டார். மூர்க்கச் செயல் கூடாதென்று மகாத்மா கண்டித்தார். ஆனால், அவருடைய அஹிம்ஸா தர்மமோ மூர்க்கத் தன்மையைவிட மிகவும் புரட்சியானது; மேலும், பிப்ரவரி 23-ந் தேதியன்று பெருவாரியான சட்டமறுப்பியக்கத்தை அவர் நிறுத்திவிட்ட போதிலும், ஆவேசமும், பயமும் ஊட்டக் கூடிய ஒரு வியாசத்தை வெளியிட்டிருந்தார்.

லார்டு பிர்கன்ஹெட் என்பவரும், மிஸ்டர் மாண்டேகுவும் இந்திய ஜனங்களின் முகத்தில் அடிப்பது போன்ற கடுகடுப்பான வார்த்தை பேசியிருந்தனர். அது தந்தி மூலம் இந்தியாவுக்கு எட்டியது. "பிரிட்டிஷ் ஏகாதிபத்தியமாவது ஒன்றுவது என இந்தியர் பேசுவராயின், இங்கிலாந்தை என்னவென்று அவர்கள் நினைத்திருக்கின்றனர்? தங்களுடைய முழு பலத்தையும் தீர்மானத்தையுங் கொண்டு ஆங்கிலேயர் சரியான பதில் கொடுப்பர்" என்பது அவ்வார்த்தையின் சாரம். இது கேட்ட காந்தி கோபங் கொண்டு, கொதிப்பான பதில் எழுதினர். அப்பதிலின் ஒரு பகுதி பின் வருமாறு:—

"பல விதத்திலும் பலமற்ற ஜாதியினரைக் கட்டுப் பாடாக உறிஞ்சி விடுவதென்ற கொள்கையே பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் அடிப்படையாக இருக்கிறது. தவிர, எப்போதும் இடைவிடாமல் மூர்க்கமான ராணுவ பலத்தைக் காட்டி வருவதென்பதும் அதன் ஆதாரமாக உளது. இப்படி யிருக்கையில், அதனுடன் நாம் எப்படி சமரஸமாக இருக்க முடியும்? உலகிலே கடவுள் நியாயம் வழங்கிவரின், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் உயிருடன் இருக்க முடியாது. 1920-ம் வருஷம் ஆரம்பமான போராட்டமோ ஒரு மாதம் அல்லது ஒரு வருஷம், அல்லது பல காலம் நீடித்திருப்பினும், கடைசி வரையில் நடந்தே தீரும். இதனை முன்னமேயே பிரிட்டிஷார் உணர்ந்து கொள்ளா திருப்பின், இப்போதாவது உணர்ந்து கொள்ளட்டும். முடிவு வரையில் அஹிம்ஸா தர்மத்தை மேற்கொண்டிருக்க இந்தியருக்குக் கடவுள் அருள் புரிவாராக. கடுகடுப்பான வார்த்தைகளைக் கேட்டு, இந்தியர் அடங்கி விடுவ ரென்பது இனிமேல் முடியாது."

விசாரணையின் விவரம் :—மேலே சொல்லிய வியாசம், இன்னும் இரண்டு வியாசங்கள், ஆகிய இவைகளைக்கொண்டே காந்தியின்மீது கவர்ன்மெண்டார் நடவடிக்கை நடத்தினர். கவர்ன்மெண்டின்மீது அப்ரியமும், விரோதமும், வெறுப்பும் உண்டாகும் வண்ணம் அவர் பிரசங்கம் செய்தாராம். அதற்கு அவர் எதிர்வாதம் ஆடவில்லை; எல்லாக் குற்றங்களையும் செய்ததாக அவர் ஒப்புக் கொண்டார்.

கவர்ன்மெண்டின் பக்கம் ஆஜராகி வாதாடியவரின் பெயர் ஸர். ஸ்டிராங் மன். இவர் அட்வொகேட் ஜெனரல் பதவி வகிப்பவர். இவர் வாதித்ததின் சாரம் பின்வருமாறு:-
"பிராதில் காணப்பட்ட மூன்று வியாஸங்கள் மட்டுமே குற்றத்திற்கு உரியன என்பதில்லை. சென்ற இரண்டு வருஷ காலமாகவே காந்தி கவர்ன்மெண்டுக்கு விரோதமாகப் பேசி வந்திருக்கிறார். எதிரியிடம் விசேஷ குணங்கள் உள. எனவே அத்தகைய வியாசங்களால் உண்டாகும் ஆபத்து மிகவும் அதிகமாகும். பம்பாயிலும் சௌரி சௌராவிலும் நடந்த

8

சம்பவங்களுக்கு அவரே காரணம். அஹிம்ஸா தர்மம், அப்பிரியம் இரண்டையும் அவர் போதித்து வந்தார். ஜனங்கள் இழைத்த கொடுஞ் செயல்களுக் கெல்லாம் அவரே ஜவாப்தாரி.''

கவர்ன்மெண்டின் வக்கில் வாதித்த பின்பு ஒரு வாக்குமூலங் கொடுக்க அவர் விரும்பினர். அவருடைய ஆன்மா அவருக்குக் கட்டுப்பட்டுக் கிடந்தது. தேசத்தில் நடந்தவற்றை யெல்லாம் அவர் ஒப்புக்கொண்டார்; இனி நடக்கப் போவதையும் ஒப்புக் கொண்டார். அவ்விதம் நடந்திருக்கக் கூடாது தான். தாம் நடத்தி வந்த பிரசாரம் குற்றமே யாயினும், அதனைச் செய்து தீர வேண்டியது தமது கடமை யென்ருர்; அட்வொகேட் ஜெனரல் சொன்ன தெல்லாம் சரிதான் என்ருர். தாமே எதற்கும் ஜவாப்தாரி யென்ருர். சென்னையில் நடந்த கலவரம், சௌரி சௌராவில் நடந்த படுமோசமான கொலை, பம்பாயில் நடந்த அக்கிரமங்கள் ஆகிய எல்லாவற்றிற்கும் தம்மீது தான் குற்றஞ் சுமத்தப்பட வேண்டு மென்று கூறினர். வாய்மொழியாக அவர் கொடுத்த வாக்குமூலத்தின் விவரம் பின்வருமாறு :—

"பொறுப்பு வாய்ந்த நான், ஓரளவு நல்ல படிப்புள்ள நான், உலக அனுபவமுள்ள நான், எனது செயல்களின் பலனை அறிந்திருக்கத்தான் வேண்டும். அட்வொகேட் ஜெனரல் சொன்னது சரியே. கொள்ளிக் கட்டை கொண்டு நான் விளையாடியிருந்தேன். இது எனக்குத் தெரியும். வருவது வரட்டும் என்றே செய்தேன். நான் கைதியாக இல்லாதிருப்பின், இப்போதும் அப்படியே செய்வேன்.

"மூர்க்கச் செயலைத் தவிர்க்கவேண்டுமென நான் விரும்பினேன். இன்னமும் அதுவே எனது விருப்பம். எனது கொள்கையின் முதல் விதி அஹிம்ஸா தர்மம்; கடைசி விதியும் அதுவே. இப்போதுள்ள ஆட்சி முறை என் தேசத்துக்கு மாருத் தீமை யிழைத்துளது. ஒன்று, நான் அந்த ஆட்சிக்கு அடங்கியிருக்க வேண்டும். அல்லது என்னுடைய ஜனங்களின் பைத்தியக்காரக் கோபத்துக்கு ஆளாகவேண்டும்.

சில சமயங்களிலே எனது தேச மக்கள் பித்தங் கொண்டு போயினர். அதற்காக நான் மிகவும் வருந்துகிறேன். மிக வும் கடுமையான தண்டனை எனக்கு விதியுங்கள். இரக்கம் காட்டுங்களென நான் கேட்கவில்லை. ஒரு பிரஜை செய்ய வேண்டிய மிகவும் மேலான கடமையைச் செய்தேன். அது குற்ற மென்று சட்டங்கள் சொல்லுகின்றன. ஆதலால் சட் டப்படி எனக்கு விதிக்கக் கூடிய கடுமையான தண்டனை விதி யுங்கள். அதனை நான் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்ளு வேன். என்னுடைய எழுத்து மூலமான வாக்கு மூலத்தில் சொல்லப் போகும் வண்ணம், ஒன்று ஜட்ஜாகிய நீங்கள் வேலையை ராஜினமா செய்துவிட்டுப் போக வேண்டும். அல் லது, ஆட்சி முறையும், பட்டமும் ஜனங்களுக்கு நன்மை தரக் கூடியன என்று நினைத்தால், மகா கடுமையான தண்டனை விதிக்க வேண்டும்."

தீரமான இவ் வாக்குமூலத்தில் ராஜீயத் தலைவரின் வீர மான நெஞ்சுறுதி காணப்படுகிறது. அந்த உறுதி அவரது மதப்பற்றுள்ள கோட்பாடுகளுக்கு ஒத்ததே. அதன் பின், எழுத்து மூலமான வாக்கு மூலமொன்று கொடுத்தார். இது இந்திய ஜனங்களையும், ஆங்கிலேயரையும் குறித்துச் சொல்லப் பட்டது. தாம் ஆதியில் மகா ராஜ விசுவாசியாக இருந்து, அப்பால் சிறிதும் தளரா ஒத்துழையாக்காரராக ஆனதற்குக் காரணத்தைச் சொல்லி யிருக்கிறார். 1893-ம் வருஷம் முதல் தாம் செய்துவந்த பொதுநல ஊழியங்களைத் திரும்பச் சொல்லி யிருக்கிறார். ஆங்கில அரசினல், ஓர் இந்தியனுகத் தாம் கஷ் டப்பட நேர்ந்ததை விவரித்திருக்கிறார். 1919-ம் வருஷம் வரையில் அவர் கவர்ன்மெண்டுடன் ஒத்துழைப்பவராகவே யிருந்து வந்தார். ஆனல் கவர்ன்மெண்டார் செய்த அக்கிர மங்களும், குற்றங்களும் வரம்பின்றிப் போய் விட்டன.

" கவர்ன்மெண்டார் தாங்களிழைத்த தவறுகளுக்குப் பரி காரந் தேடவில்லை. ஆனல், இந்தியருக்குப் பெருங்குற்ற மிழைத்த குற்றவாளிகளாள அதிகாரிகளை கௌரவப்படுத்தி பென்ஷன் கொடுத்து, உயர்த்தி யிருக்கின்றனர். இது இந்தி

யனை முகத்தில் அடித்தது போலாகும். கவர்ன்மெண்டே தனது செய்கையினால், தனக்கும், ஜனங்களுக்கும் சம்பந்தம் இல்லாது போகும்படி செய்து விட்டது. ஜனத் திரளைக் கொண்டு ஏகபோகமான பலனடைவதிலேயே கவர்ன்மெண்டார் கருதியுள்ளர்; அந் நோக்கங் கொண்டே சட்டங்கள் செய்யப்பட்டுள. ஏகபோகமாக, மாமன் காணியாக, நலத்தைக் கொள்ளை கொள்ளுவோருக்கு அனுகூலமாகவே சட்டங்கள் கையாளப்படுகின்றன. வெளிக்குப் புலப்படாத பலமான பயங்கர முறையினால் ஜனங்களின் சன்மார்க்கமும், மனோசக்தியும் அழிந்து போயின. இந்தியா நாசமாய் விட்டது; பஞ்சத்தால் வாடுகிறது. மிகவும் தாழ்வான நிலை யடைந்து விட்டது. பல தலைமுறை கழிந்த பிறகு தான் இந்தியா சுகம் பெற முடியும். இதற்கு முன் இந்தியாவை ஆண்டுவந்த எவரும் ஆங்கிலேயரைப் போல் அவ்வளவு தீமை யிழைக்கவில்லை. குற்றத்துடனும், பாபத்துடனும் கலந்து கொள்ளாமல், இந்திய மகா ஜனங்கள் ஒத்துழையாமையை மேற்கொள்வது கடமையே யாகும்.''

இதற்கு முன் மூர்க்கச்செயலே கையாளப் பட்டுவந்தது. காந்தியோ மிகவும் மேலான அஹிம்ஸா தர்ம மென்னும் கருவியை ஜனங்களுக்கு அளித்த பெரியவர்.

**தீர்ப்பின் விவரம்** :—ஜட்ஜியான புரும்பீல்டு என்பவர் சொன்ன தீர்ப்பின் முழு விவரம் பின்வருமாறு :—

"மிஸ்டர் காந்தி! என்னுடைய வேலையை நீர் சுலபமாக்கி விட்டீர். எப்படியெனில், குற்றஞ் செய்ததாக ஒப்புக்கொண்டிருக்கிறீர். என்றாலும், சரியான தண்டனை எவ்வளவு விதிப்பதென்பது கஷ்டமான காரியம். பெரிய மனிதன், சின்ன மனிதன், என்பதாகச் சட்டத்தில் வேற்றுமையில்லை. நான் இதுவரை விசாரித்து வந்தவர்கள், இனி விசாரிக்கப் போகிறவர்கள், ஆகிய யாருடனும் உம்மை ஒப்பிட முடியாது.''

"லட்சோப லட்சக் கணக்கான உமது தேச ஜனங்கள்

உம்மை மகா தேசாபிமானி யென்றும், பெருந்தலைவர் என்றும் மதித்திருக்கின்றனர். இதனை அலட்சியஞ் செய்வதற்கில்லை. உம்முடன் மாறுபட்ட அபிப்பிராயங் கொண்டவர்களும், உயர்ந்த லட்சியங் கொண்டவரென உம்மைக் கருதியுளர்; இன்னும் உம்மைப் பெருந்தன்மையான மகாத்மா என்றும் மதித்துளர்."

"நானோ, அரசாங்க பட்டத்துக்குள் அடங்கியுள்ள ஒருவர் என்றே உம்மை மதித்து, உமக்குத் தண்டனை விதிக்க வேண்டும். சட்டப்படி குற்றஞ் செய்திருப்பதாக நீரே ஒப்புக்கொண்டிருக்கிறீர். நீர் செய்தது ராஜாங்க விரோதமென்று சாமானிய மனிதனும் ஒப்புக் கொள்வான். மூர்க்கச் செயல் கூடாதென நீர் இடைவிடாது பிரசங்கம் செய்திருக்கிறீர். இதனை நான் மறக்கவில்லை. மூர்க்கத்தைத் தடுக்கவும் பல சமயங்களிலே முயன்றிருக்கிறீர்.

"ஆனால், உமது ராஜீய போதனையையும், அது யாருக்குச் சொல்லப்பட்டதென்பதையும், கவனித்துப் பார்ப்பின், அது காரணமாக மூர்க்கச் செயல் நிகழாதிருக்க முடியுமோ? நிகழாதென நீர் எப்படி நம்பி யிருந்தீர்? இது எனக்கு விளங்கவில்லை."

"உம்முடைய செய்கைகளைப் பார்த்தால், உம்மை கவர்ன்மெண்டார் சுதந்திரத்துடன் வைத்திருக்க மாட்டார்களே, ஏன் நீர் இப்படி நடக்க வேண்டும், என்று மனப்பூர்வமாக வருந்தாத ஜனங்கள் இல்லை. பால கங்காதர திலகரின் கேஸைப் போல் உமது கேஸை நான் கருதுகிறேன். அவருக்கு முடிவில் கிடைத்த தண்டனை ஆறு வருஷ வெறுங் காவல். உம்மைத் திலகருடன் சேர்த்துக் கருத வேண்டும்."

உம்மீது மூன்று குற்றங்கள் உள; ஒவ்வொன்றுக்கும் இரண்டு வருஷம் தண்டனை விதிக்கிறேன். மொத்தத்தில் ஆறு வருஷமாகிறது. இது என்னுடைய கடமை. கடைசியில் ஒரு வார்த்தை. இனி, காலக் கிரமத்தில் இந்தியாவின் போக்கை மதித்து, உமது தண்டனையைக் குறைத்து,

உம்மை விடுவிக்க கவர்ன்மெண்டுக்கு முடியுமானால், அது கண்டு என்னைப் போல் யாரும் அவ்வளவு சந்தோஷமடைய முடியாது."

"மிஸ்டர் பாங்கர்! நீர் பெரும்பாலும் உமது தலைவருக்குக் கட்டுப்பட்டிருந்தீர். உம்மீதும் மூன்று குற்றங்கள் உள; மொத்தத்தில் ஒரு வருஷமாகிறது. மூன்றாவது குற்றத்திற்கோ, ஆயிரம் ரூபாய் அபராதம். அதைச் செலுத்தத் தவறினால், அதற்காக இன்னும் ஓர் ஆறுமாதம் வெறுங்காவல் தண்டனை."

மேற்கண்டவாறு இருவருக்கும் தீர்ப்புச் சொல்லப் பட்டதன்மேல், ஜட்ஜியைப் போல் மரியாதையாகவே காந்தி பின்வருமாறு பதிலளித்தார்:—

"ஒரே ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். காலஞ் சென்ற லோகமான்ய பால கங்காதர திலகரின் விசாரணையை ஞாபகப்படுத்தினீர்கள். அவருடைய கேஸுடன் எனது கேஸை ஒப்பிட்டுச் சொல்லியது எனக்குப் பெரும்பாக்கியமாகும். தண்டனையைப் பற்றியோ வென்றால், அது இலேசான தண்டனையே. விசாரணையைக் கவனித்துப் பார்த்தால், இவ்வளவு கௌரவமாக என்னை யாரும் நடத்தியிருக்க மாட்டார்."

இவ்விதம் அம் மகத்தான விசாரணை முடிவடைந்தது. காந்தியின் நண்பரும், விசுவாசிகளுமான ஆயிரக் கணக்கான பெயர் கண்ணீர் விட்டு அவர் காலடியில் விழுந்து, தங்களது பயபக்தி விசுவாசத்தைக் காட்டினர். மகாத்மா சிரித்த முகத்துடன் அவர்களிடம் விடை பெற்றுச் சென்றார். உடனே அவர் ஸபர்மதி என்னும் சிறையில் அடைத்து வைக்கப்பட்டார்.

தனது புருஷனுக்கு நேர்ந்த தண்டனையை மதிப்பான வாசகத்தில் ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தி சொல்லி, காந்தியின் நிர்மாண வேலைத் திட்டத்தைப் பூர்த்தி செய்யப் பெருமுயற்சி

யெடுக்கவென்டுமென்று ஆண் பெண் அடங்கலையும் கேட்டுக் கொண்டார்.

காந்தியை ஸபர்மதி சிறையிலேயே நெடுக வைத்திருக்கவில்லை. எரவாடா சிறைக்கு அவரை அப்பால் மாற்றி வைத்தனர்.

---

## அதிகாரம் 10

### மகாத்மாவின் போதனை

தேவதூதரான காந்தியிடமிருந்து நமக்குக் கிடைத்துள்ள போதனை என்னவென்றால், சாந்தம், அஹிம்ஸை, தியாகம் ஆகிய மூன்றே. அப்போதனையை அனைவரும் கேட்டு அறிந்துமிருக்கின்றனர். தேசத்தின் ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலை வரையிலும் அது பரவி நிரம்பியுளது. இவ்வளவு தூரம் தேசத்திலே சாந்தமும், அமைதியும் நிலைத்திருப்பதற்கு அவருடைய தெய்வீக போதனையே காரணம். அப்போதனை இந்தியரின் உள்ளத்திலே நன்கு பதிந்து விட்டது.

ஸீக்கியரின் அபார சாந்தம்:—இந்திய மகா ஜனங்களிலே ஸீக்கியர் பரம்பரையாக விசேஷம் வாய்ந்த போர் வீரர். இது உலகப் பிரசித்தம். ஐரோப்பிய மகா யுத்த சமயத்தில் அவர்களிற் பலர் போர் முனை சென்று வீர தீரங் காட்டியுளர். முன் வருஷத்திலே, அவ் வகுப்பினருக்குள் மத சம்பந்தமாக பலமான அபிப்பிராய பேதம் ஏற்பட்டது. அந்த அபிப்பிராய பேதத்தின் காரணம் ஐரோப்பியருக்கு அற்பமாகக் காணப்படலாம். ஆயினும் அற்பமில்லை.

அவர்களுக்குள்ளே மத சம்பந்தமாகப் புதிய மன வெழுச்சி கொண்டோர் அகாலியர் எனப்படுவர். அந்த

அகாலியரின் கருத்து யாதெனில், மடங்களையும் கோயில்களை யும் பரிசுத்தமாக்க வேண்டும் என்பதே. ஏனெனில், அவை கள் யோக்கியமற்ற தர்மகர்த்தாக்களிடம் கிடந்து வரலாயின. அவைகளை விட்டு விடவேண்டுமென அத்தர்மகர்த்தாக்களை அகாலியர் கேட்டுப் பார்த்தனர். ஆனால் தர்மகர்த்தாக்கள் இணங்கவில்லை.

கவர்ன்மெண்டாரோ நீதிகாரணமெனச் சொல்லி, தர்ம கர்த்தாக்களுக்குச் சார்பாக நின்றனர். உடனே 1922-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் அகாலியரின் சத்தியப் போர் கிளம்பலாயிற்று. அத் தர்ம யுத்தம் நிகழ்ந்தவிடம் குருகபாக் என்னுமிடம். அப்போரிலே அகாலியர் அஹிம்ஸா தர் மத்தையே மேற்கொண்டனர். குருகபாக் என்னுமிடத்தை வசஞ் செய்து கொள்ள வேண்டுமென்பதே அகாலியரின் நோக்கம். அவ்விதம் வசஞ் செய்துகொள்ள அவர்களுக்கு ஆதாரம் இல்லாமலில்லை. போர் நடந்த விவரம் பின்வரு மாறு :—

குருகபாக் என்னுமிடத்தினருகே ஆயிரம் பேர் கூடி நிற்பர். அமிருதஸரஸ் நகரிலுள்ள பொன்னாலயத்தில் நாலா யிரம் பேர் திரண்டு நிற்பர். நாள்தோறும் நூறுதொண்டர் கள் அந்த ஆலயஞ்சென்று, ஆண்டவனைத் தொழுது, வாக்கி லும், செயலிலும், சிந்தையிலும் மூர்க்கம் காட்டுவதில்லை, குருகபாக் போய்ச் சேருவோம், யாரேனும் தடுப்பின் மௌனமாக முன் செல்வோம், எவ்வளவு அடி, உதை, கிடைத்தாலும் சாந்தமே கொண்டிருப்போம். அந்த அடி உதைகளினால் பிரக்ஞை யற்றுப் போகும் வரையில் குருக பாக் போய்ச் சேரும் முயற்சியில் குன்றோம்" என்று சபதஞ் செய்து கொள்ளுவர்.

அத்தொண்டர்களிற் பலரும் முன்னம் கவர்ன்மெண் டின் சேனையில் சேவித்தவர்கள். ஆயிரம் பேருள்ள கூட் டத்திலிருந்தும் 25 பெயர் அவ்விதம் விரதங் கொள்வர். குருகபாக் என்னுமிடத்தினருகே ஆங்கிலத் துருப்புகள்

காவல் புரிந்து நிற்பர். அத்துருப்புகளின் கையிலே இரும்புப் பூண் போட்ட குண்டாந்தடி இருக்கும். அந்த அகாலியரின் வரவை அத்துருப்புகள் எதிர் பார்த்து நிற்கும். கழுத்திலே சிறிய பூமாலையும், தலையிலே கறுப்பான குல்லாயும் தரித்து, அகாலியர் அந்த இடத்தை நோக்கிப் புறப்பட்டுப் போவர். போகும் பொழுது தெய்வ வணக்கமும், சாந்தமுமே அவர்களிடம் நிரம்பி யிருக்கும்.

அவர்களை அத்துருப்புகள் வழிநடுவே நிறுத்தி அடித்து வீழ்த்துவர். உடனே அடி பொறுக்கமாட்டாமல் அகாலியர்கள் சுருண்டு கீழே விழுவார்கள்; முடியுமானல் சிலர் அந்த அடியையும் சகித்துக் கொண்டு மீண்டும் எழுந்து, அவ்விடத்தை நோக்கிப் போக முயலுவர். அப்போது அவர்களுக்கு மீண்டும் முன் போல் அடி விழும். அதனல் சில சமயங்களிலே அவர்கள் பிரக்ஞையற்றும் போய் விடுவார்கள். அடிபட்டுச் சுருண்டு விழுங்காலையில் அவர்கள் அழுவதில்லை; கண்ணீரும் விடுவதில்லை; அடித்தவர்களை எதிர்க்க வேண்டுமென்ற சிந்தையும் கொள்வதில்லை.

இருபத்தைந்து பேர் அவ்விதம் துன்பத்திற்கு ஆளாவதைத் தூர நின்று பார்த்து நிற்கும் நூறு தொண்டரும் “இவர்களன்ரோ சத்தியாக்கிரகிகள்? என்ன மனே சக்தி! என்ன தியாகம்! ஆண்டவனே எல்லாம் உனது செயல்” என்றே துதிப்பர்.

இச்சம்பவங்களைக் கண்ணுல் கண்டு எழுதியிருக்கும் ஆண்ட்ரூஸ் என்னும் பெரியவர் “முற்காலத்திலே ஏசுநாதரைச் சிலுவையில் அறைந்ததாகப் படித்திருக்கிறோம். இப்போது அகாலியர் அந்த ஏசுநாதரின் மறு பிறப்பாகவே காணப்படுகின்றனர்” என்று வியந்து சொல்கிருர். இவ்விவரத்தைத் தங்களது பத்திரிகையில் பிரசுரித்த ஆங்கிலேயரோ “ஆ! இப்படியா! உலகிலே இக்காலத்தில் இவ்வாறு சாந்தமாகக் கஷ்டப்படுவோரும் உளரோ” என்று மூக்கில் விரல் வைத்து ஆச்சரியப்பட்டுளர்.

அதன் உண்மையை அந்த ஆங்கிலேயர் உணர முடியாது. என்றாலும் "அகாலியரின் அஹிம்ஸா தர்ம யுத்தம் ஒத்துழையா இயக்கத்திற்கு விசேஷமான வெற்றி தருவதேயாகும். பஞ்சாப் வாசிகளும் ஒத்துழையா தர்மத்தில் பரவசங்கொண்டு விட்டார்கள் என்று ஆங்கிலேயர் ஒப்புக்கொள்வர். ஆண்ட்ரூஸ் என்பவர் உயர்ந்த லட்சியங்கொண்டவர். இந்தியரின் உள்ளத்தையும், ஆத்ம சக்தியையும் அறிந்தவர். ஆதலால், "என்னே! கஷ்டமும், தியாகமும் கொண்ட தீரத்தன்மை பூவுலகிலே தோன்றியுளது! இது சரீர பூர்வமான போரன்று, ஆத்மாவினால் ஆத்ம சக்தி கொண்டு நடக்கும் புதிய போர்" என்று புகழ்ந்து பேசியிருக்கிறார்.

சில தலைவர்களின் நிலை:—ஜனத் தலைவரான காந்தி சிறை சென்றபின், அவருடைய கருத்தையும், போதனைகளையும் வற்புறுத்திப் பரப்புவது இதர தலைவர்களின் கடமை. ஆனால், அத்தலைவர்களைக் காட்டிலும் மிகவும் மேலாக ஜனத் திரளே மகாத்மாவின் போதனைக் கிணங்க நடந்து வந்திருக்கிறது. தலைவர்கள் அப்படி நடக்கவில்லை. காந்தி கைது செய்யப்பட்ட முன்னமேயே, ஒத்துழையாக் கொள்கையின் வழி முறைகளைக் கண்டு தலைவர்களுக்குள் அபிப்பிராய பேதம் ஏற்பட்டது. 1922ம் வருஷம் ஜூன் மாதம் 7ந் தேதி யன்று, இலட்சுமணபுரியிலே அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூடிற்று. அப்போதும் ஆட்சேப சமாதானங்கள் ஏற்படலாயின. உடனே சட்ட மறுப் பியக்கத்தை ஆரம்பிக்க வேண்டுமென்று அக்கமிட்டியாரிலே பலர் வற்புறுத்தினர். ஆதலால், அவ்வியக்கத்தைத் தொடக்கம் செய்ய, தேசம் தயாராக இருக்கிறதா என்று விசாரணை பண்ண ஒரு கமிட்டியை நியமித்தனர். இக் கமிட்டியின் யாதாஸ்து மிக்க ஏமாற்றத்தை உண்டு பண்ணி விட்டது. ஏனெனில்,

"சட்ட மறுப்பியக்கத்தைத் தொடங்கின், அது நடவாது; காந்தி சொல்லிய ஒத்துழையா வழிகளைக் கைவிட்டு விடவேண்டும். சுயராஜ்யக் கட்சியொன்று ஏற்பட்டு, சட்ட

சபையில் புகுந்து, கவர்ன்மெண்டுடன் வாதப் போர் புரிய வேண்டும்.''

என்று அக்கமிட்டியார் எழுதி வைத்தனர். எனவே காந்தியின் கொள்கை இரண்டு பக்கங்களிலிருந்தும் இடிபடலாயிற்று. எப்படி யென்றால், ஒரு பக்கம் மூர்க்கக் கொள்கையினர் இருந்துவர, மற்றொரு பக்கத்திலே நிதானவாதிகள் தோன்றி விட்டார்கள்.

நிதானக் கட்சி அவ்விதம் சொல்லியும், அதனை இந்திய ஜனங்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. அப்பால், கயா நகரில் காங்கிரஸ் மகாசபை கூடியபொழுது, காந்தியின் கொள்கையே மீண்டும் உறுதி செய்யப்பட்டது. சட்டசபையில் புகவேண்டுமென்ற யோசனைக்கு ஆதரவாக 890 பேரே ஓட் கொடுக்க, எதிரிடையாக 1740 பேர் கொடுத்தனர். ஆங்கில சாமான்களை யெல்லாம் பகிஷ்கரிக்க வேண்டும் என்ற யோசனையும் அடிபட்டுப் போயிற்று.

ஏனெனில், அப்படிச் செய்வதாயின், ஐரோப்பியத் தொழிலாளரின் அபிமானத்தை இழந்து விட நேரும். காங்கிரஸ் மகாசபையினரை விட முகம்மதிய கிலாபத் சபையினர் அதிக தீவிரம் படைத்தவர்கள். ஆதலால், இச்சபையாரே ஆங்கில சாமான்களைப் பகிஷ்கரிப்ப தென்று தீர்மானம் செய்தனர். பெரும்பாலோர் இதற்குச் சாதகமா யிருந்தனர்.

சுயராஜ்யமே பரிகாரம் :—மகாத்மாவின் கதையை இம்மட்டோடு நாம் நிறுத்த வேண்டும். என்றாலும், இயக்கத்தின் பலா பலனைப் பற்றிச் சிறிது சொல்வோம். பெருந் தலைவரும் அவரது சிறந்த சிஷ்யர்களும் இல்லாமல் போயினும், அவரில்லாத முதல் வருஷத்திலே இயக்கமோ பல மகத்தான சோதனைகளிலிருந்து சமாளித்து வெளிக் கிளம்பியது; பல ஆபத்துகளையும் தீரமுடன் தாண்டி வந்து விட்டது. இது கண்டு, பிரிட்டிஷ் பத்திரிகைகளும் அவ்வியக்க விஷயமான மதி மயக்கத்தை விட்டுவிடலாயின. எனவே இயக்கத்தினால் உண்டாகியுள்ள பலன் விசேஷமே யாகும்.

அமெரிக்காவிலுள்ள நியூ யார்க் நகரிலே "யூனிடி" என்ற பத்திரிகை பிரசுரமாகிறது. 1922ம் வருஷம், நவம்பர் மாதம் 16ந் தேதியன்று, ஒத்துழையா இயக்கத்தின் பலன் களைப் பற்றி பிளாஞ்சி வாட்ஸன் என்னும் ஒரு ஸ்திரீ அதில் எழுதியிருக்கிறார். இயக்கத்தின் பலனாக இந்தியாவின் வரி வருமானத்தில் 2250 லட்சம் ரூபாய் குறைந்து விட்டதென வும், ஒரு வருஷத்திலே துணி வியாபாரத்தில் இங்கிலாந்துக்கு 600 லட்சம் ரூபாய் நஷ்டமென்றும் அவர் சொல்லுகிறார். அவ்வருஷத்திலே சிறை சென்ற இந்தியர் முப்பதாயிரம் பேர். பிரிட்டிஷ் ஆட்சிமுறை நிலை கவிழ்ந்து விட்டது.

இவ்வாறு அவர் கூறியிருத்தல் சற்றே மிகைபடச் சொல்லி யிருத்தலாகும். அவர் அவ்விதம் அபிப்பிராயப் பட்டபோதிலும், இதரர் அப்படி அபிப்பிராயங் கொள்ள வில்லை. தியாகத்திற்கு இடமான இயக்கம் பணக்காரரையும், வியாபாரிகளையும் பாதிக்கிறதாம். ஆதியில் உத்தியோகத்தை விட்ட பலர், அப்பால் அதே உத்தியோகத்திற்குத் திரும்ப லாயினராம். இது உண்மையா யிருப்பின், நாம் ஆச்சரியப் படுவதற்கில்லை. மனிதருக்கு அது இயற்கையே. ஆனல் நாம் கவனிக்கவேண்டிய விஷயம் என்ன? இயக்கம் படுத்துப் போகாமல் பரவுகிறதா என்பதே. இது பற்றி ஓர் ஆங்கிலப் பத்திரிகை சொல்லி யிருப்பதைப் பார்ப்போம்.

இங்கிலாந்தில் பிரசுரமாகும் பத்திரிகைகளில் "மாஞ் செஸ்டர் கார்டியன்" என்பது ஒன்று. அது தாராள நோக் கங் கொண்டது. ஆயினும், அது மாஞ்செஸ்டர் வியாபாரி களின் நன்மையை ஆதரிப்பதாகும். என்றாலும், உள்ள விஷயத்தை உணர்ந்து வர, அது ஒரு பிரதிநிதியை இந்தியா வுக்கு அனுப்பியது. அவ்வாறே அவர் வந்து, இந்தியாவைச் சுற்றிப் பார்த்து, விஷயங்களை அறிந்த பின், அப்பத்திரிகைக் குப் பல வியாசங்கள் எழுதினர். ஒத்துழையா இயக்கத்தில் அவருக்கு அபிமானம் கிடையாது. இது இயற்கையே; அவருக்கு அந்த இயக்கத்தைக் கண்டு அருவை யிருப்பினும், இயக்கங் காரணமாக இந்தியாவின் நிலைமை இங்கிலாந்தைப்

பாதிக்குமென அவர் நன்கு சொல்லியிருக்கிறார். அவருடைய கடைசி வியாசத்தின் சாரத்தை இங்கே குறிப்பிடுவோம் :

" ஒத்துழையா இயக்க உணர்ச்சியானது இந்தியாவிலே நிலை நின்று விட்டது. இனிமேல் அவ்வுணர்ச்சி அழியாது. அன்னிய அரசாட்சியில் யாருக்கும் அவநம்பிக்கை யுளது. அதனைப் போக்கி விட வேண்டு மென்றும் விருப்பமுளது. படித்த வகுப்பாரிடத்திலும், பட்டண வாசிகளிடத்திலும் அந்த உணர்ச்சியே அதிகம். கிராம விவசாயி அவ்வுணர்ச்சி யில் அவ்வளவாக ஈடுபடவில்லை. ஆயினும், கொஞ்ச காலத் திற்குள்ளாக கிராமவாசிகளும் ஈடுபட்டு விடுவர் :"

" ஈடுபட்டு விடும்படியாகவே ஆட்சி நிலைமை யுளது. இந்தியச் சேனையிடம் அந்த உணர்ச்சி இல்லை. ஆனால், கிராம வாசிகளையே சேனையில் சேவிக்க, நாம் திரட்டி வரு கிறோம். ஆனதால், சேனைக்கும் காலக் கிரமத்திலே அந்த உணர்ச்சி உண்டாகி விடும். சிறந்த மனிதர்களிடத்தும், மிதவாதிகளிடத்துமே ஒத்துழையா உணர்ச்சி மிக்க பலமாக இருக்கிறது. மிதவாதிகள் மட்டுமே புரட்சி முறைகளைக் கண்டு ஆட்சேபிக்கின்றனர். ஆனால் தேச ஜனங்கள் அப்படி யில்லை. ஒத்துழையாக்காரரின் துணிவைக் கண்டு தேச ஜனங்கள் அபிமானங் காட்டுகிறார்கள்."

சிறைச்சாலையின் பயத்தைக் காட்டி,இந்தியரை அடக்கி விட முடியாது. அடக்க விரும்பின் மிகவும் கடுமையான அடக்கு முறைகளைக் கையாள வேண்டும். அப்படிக் கையாண் டால், ஆங்கிலேயரிடம் இந்தியருக்குள்ள விரோதம் வளரும்."

" ஆகலால் சாவதானமான ஒரே வழி தான் உளது. 1919-ம் வருஷத்தில் செய்தது போல், அரைகுறையான சீர் திருத்தங்கள் செய்தால் பயன்படாது. காந்தியும், அவர் சீடர் களும் உள்பட எல்லா ஜாதியினரும், மதத்தினரும், கட்சியின ரும் அடங்கிய மகா கூட்டத்தைக் கூட்டி, வைக்கவேண்டும். அரசியலில் எவ்வளவு தூரம் சீர்திருத்தம் செய்யவேண்டு மெனவும், பரிபூரணமான சுயராஜ்யம் இத்தனை காலத்திற்குள்

ஏற்படவேண்டு மெனவும், அம்மகா கூட்டமே தீர்மானிக்க வேண்டும். இப்படிச் செய்தால் தான், ஏகாதிபத்தியத்தின் அழிவைத் தடுக்க முடியும்."

மேற் கண்டவாறு அப் பிரதிநிதி சொல்லி யிருக்கிறார். இந்தியாவுக்குச் சுயராஜ்யம் கொடுத்தாலன்றி எதுவும் தீராது. காந்தியின் இயக்கம் தோன்றிய பின்பு, பிரிட்டிஷ் பத்திரிகைகளின் பான்மையும் சுமுகமாக மாறித்தான் வருகிறது. இந்தியரைக் கண்டு ஐரோப்பியர் அலட்சியஞ் செய்வதென்பது மலையேறிப் போய் விட்டது. எனவே, இந்தியா வெற்றி பெற்று விட்டது.

இனி, பிற்காலத்திலே இயக்கம் எப்படி முடியும்? தனது பழைய குற்றங்களை இங்கிலாந்து உணர்ந்துகொண்டு, இனிமேல் சரியாக நடக்குமா? இந்திய ஜனங்களின் மனவுறுதி தானாகச் சளைத்துப் போமா? ஜனங்களுக்கு ஞாபக சக்தி கம்மி தான். ஆகவே, மகாத்மாவின் போதனையை நீண்ட காலம் மறவாமலிருந்து அதன்படி இந்தியர் நடப்பரா? கைவிட்டு விடுவரா? என்ற கேள்விகள் பிறக்கும்.

காந்தி போதனையின் மகத்துவம் :—ஒருவனுடைய போதனைகள் தன் இனத்தாரின் பரம்பரைக்கும், புத்தி யுக்திக்கும் ஏற்றதாக இருப்பினும் சரி, இல்லாதிருப்பினும் சரி, தனது இயற்கையான பெருந்தன்மையினால் அவன் மகா புருஷனாகலாம். அவனுடைய போதனைகள் தன் இனத்தினரின் இயற்கையான புத்தி யுக்திக்கு ஏற்றதாக இருந்து, அது கால தேச வர்த்தமானத்துக்கும் ஒத்ததாகி, உலகினர் அனைவருக்கும் நன்மை தருவதாகவும் இருந்து விட்டால், அவனைப் போன்ற மகா புருஷன் கிடைக்க மாட்டான். அப்போது அவனால் உண்டாகும் செல்வாக்கும் பொது நல பலனும் மகா விசேஷமாகி விடும். மகாத்மா காந்தி அத்தகைய மகா புருஷரே.

இந்தியருக்கு அவருடைய அஹிம்ஸா தர்ம போதனை இன்று நேற்று ஏற்பட்ட புதிய போதனை யன்று. சென்ற

இரண்டாயிர வருஷ காலமாகவே, அது இந்திய மகா ஜனங்களின் உள்ளத்தில் படிந்து கிடந்த போதனையே யாகும். இந்தியாவின் ஆதிகால மகான்களான மகா வீரர், பௌத்தர் முதலியோர் அப் போதனையை லட்சோப லட்சக் கணக்கான ஜனங்களுக்குப் போதித்திருக்கிறார்கள். அப் போதனையின் உயர்வையும், விசேஷத்தையும் எடுத்துக் காட்டியே காந்தி நிரந்தரமாக முயன்று வந்தார்.

ஜனங்களின் உள்ளத்தில் ஒய்ந்து கிடந்த பரம்பரையான அப்போதனையைத் தட்டி யெழுப்பினர். காந்தி தோன்றி அவ்விதம் தட்டி யெழுப்பியவுடனே, இந்திய மகா ஜனங்கள் அப்போதனையைத் கடைப்பிடித்து விழித்தெழுந்தனர். கேவலம் போதனையைப் புகட்டுவதோடு மட்டும் அவர் இருந்து விட வில்லை. தாமும் அதன்படி நடந்து, வழி காட்டி யிருக்கிறார். இந்தியாவிலே ஆதியில் உதித்த மகான்களின் அவதாரமே யெனப் பலரும் கண்டு கொள்ளும்படி அவர் நடந்தும், நடத்தியும் காட்டி விட்டார்.

ஆதி காலத்திலே இந்தியாவின் ரிஷிகளும், மதாச்சாரியர்களும் உயர்ந்த போதனைகளைச் சொல்லி உலகை நல்வழிப் படுத்தினர். அப்பால், அத்தகைய போதனை உலகில் மறைந்து போய் விட்டது. உலக ஜனங்களும் அதனை மறந்து விட்டனர். எனவே அத்தகைய போதனை எப்போது மீண்டும் உதிக்கும், எப்போது மீண்டும் உதிக்கும், என்று நீண்ட காலமாக உலகினர் அண்ணாந்து நின்று வருகின்றனர். ஆதலால் அந்த உலக ஜனங்களுக்கு அப்போதனையை யூட்டி, வழிகாட்டவே இப்போது இந்தியா தலைப்படவேண்டும்; தலைப்பட்டு முளது. அப்போதனையினால் இந்தியா மட்டும் பலனடைந்தால் போதாது. உலகினர் அனைவருமே பலனடைய வேண்டும். அப்போது தான் இந்தியாவுக்குப் பெருமை. முன்னம் தர்மத்தையும், உயர்ந்த போதனையையும் நிலைநாட்ட ஏசுநாதர் சிலுவையில் அறைபடவும் சந்தோஷமாகச் சம்மதித்தார். அப்படியே இந்தியாவும் உலகினருக்கு உயர்வழி காட்டி உயர்வடையப் பரம தியாகஞ் செய்தாக

வேண்டும், ஏசுநாதரைப்போல் மகா மகா தியாக மூர்த்தியாக வும் ஆக வேண்டும்.

உலகனைத்தும் சுகப்படுவதற்காக ஒரு ஜாதியார் தம் மையே தியாகஞ் செய்ய நேருமென்பது சரித்திர உண்மை. உதாரணமாக, யூதர் என்போர் உலக ரட்சகத்தைச் செய்ய வும், உலக ரட்சகனை யடையவும், தம்மையே தியாகஞ் செய் தனர். ஆயினும் என்ன! உலக ரட்சகர் தோன்றியவுடனே, அவரை உணராது போயினர். ஆனால், இந்தியர் அப்படி யில்லை; அந்த யூதரை விடப் பாக்கியசாலிகளே. எப்படி யெனில், உலக ரட்சகனை உணர்ந்து, அவரைக் கண்டு கொண்டுவிட்டனர். அதனால் தான் தியாக புருஷராய் விளங்க முன் வந்துளர்.

உலக ரட்சகத்தின் தன்மையைச் சிலர் நன்றாக அர்த்தம் பண்ணுவதில்லை. ஒத்துழையா இயக்கத்தில் சேர்ந்துள்ள இந்தியரில் பெரும்பாலோர் தங்கள் தேசத்திற்குமட்டும் உயர் வான சுயராஜ்யம் கிடைக்க வேண்டுமென விரும்பி யிருக்கின் றனர். உலகனைத்திற்கும் அவ்விதமே கிடைக்க வேண்டு மென்று அவர்கள் விரும்பினால்தான் மிகவும் நலம்.

இந்தியாவுக்குச் சுயராஜ்யம் கிடைக்கும் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. ஏனெனில், ஐரோப்பியரோ யுத் தங்களாலும், கலகங்களாலும் வாடி வதங்கிப் போய்விட்டனர். வலுக்குறைவும், திக்கற்ற நிலைமையும் அடைந்து விட்டனர்; ஆசியாக்காரரின் முன்பு, பெருமை குன்றி விட்டனர். போதாக் குறைக்கு இஸ்லாமியர், இந்தியர், சீனர், ஜப்பா னியர் ஆகிய அனைவரும் விழித்துக் கொண்டு விட்டார்கள். ஆதலால், முன்போல் ஆசியாக்காரரை ஐரோப்பியர் நெடுக் காட்டி வரமுடியாது; ஆசியாக்காரரின்மீது தலைமை வகிக் கவும் முடியாது. இக் காரணம் பற்றியே, விரைவில் இந் தியருக்குச் சுயராஜ்யம் கண்டிப்பாகக் கிடைக்கும்.

கதி மோட்சம்:—ஆசியாக்காரராகிய இஸ்லாமியர், இந் தியர், முதலியோர் வல்லரசான ஜாதியார் என்று கிளம்பினால்

போதாது. மனித கோடிகளுக்கே நன்மை தரும்படியான ஜாதியினராக உதித்தோங்க வேண்டும். வாழ்விலும் சரி, சாவிலும் சரி, உலகோர் அனைவருக்கும் ஒரு புதிய மேலான சிறந்த வழியைக் காட்டுவோராகவும் இருக்க வேண்டும்.

மூர்க்க பலம் அல்லது மிருகபலம் (ராணுவபலம்) என்னும் சண்டமாருதம் வீசியடித்து, உலகை ஆட்டி வந்திருக்கிறது. நாசத்துக்கு இடமான அச் சண்டமாருதம் திடீரென ஏற்பட்டதன்று; எதிர்பாராததது மன்று. பல நூற்றாண்டுகளாக இருந்துவரும் மூர்க்கமான ஜாதி கர்வம் என்ன, குடியரசு வேண்டுமென்ற கண்மூடித்தனமான கொள்கையினால் ஏற்பட்ட கலகங்களென்ன, ஜீவகாருண்யமில்லாத தொழிற்சாலை வன்மை யென்ன, பணக் கொழுப்புப் பிடித்தோரின் ஆட்சியென்ன, எதற்கும் யந்திர சாதனத்துக்கு அடிமைப் பட்டுக் கிடப்பதென்ன, பணம் பணம் என்ற பேய்த்தனமென்ன ஆகிய இவைகளால் ஐரோப்பியர் தங்களது நாகரிகத்தின் உயர்வை யிழந்து, துயர் கொண்டு கிடக்கின்றனர்.

உயர்ந்த லட்சியத்துக்காகப் பாடுபடுகிறோ மென்று பாசாங்கு பண்ணி, ஒவ்வொரு ஜாதியினரும் மற்ற ஜாதியினரின் கழுத்தைத் திருகுகின்றனர். தேசிய வாதிகள், போல்ஷிவிக்கர்கள், ஒடுக்கப்பட்ட ஜாதியார்கள், ஒடுக்கும் ஜாதியார்கள், ஆகிய எவ்வகுப்பினரும் சரி, மிருகபலத்தைக் கையாண்டு, பிறரை வருத்தி வாட்டத் தமக்கு உரிமையுண்டென்று கூறுகின்றனர். சென்ற ஐம்பது வருஷகாலமாக பலவானே தர்மவான் எனப்படுகிறான்; இன்றோ இன்னும் கேவலம். தர்மவானைப் பலவான் என்பவன் அடித்து விழுங்கியே விட்டான். உலகில் தர்மம் அடியோடு மறைந்து, பறந்து, அழிந்துபோய் விட்டது.

விசாலமான இவ்வுலகம் விரைவாக அழிந்து கொண்டே போகிறது. இதற்குக் கதி மோட்சம் என்னவோ? ஒன்றும் புலப்படவில்லை. உலகினரை நல்வழியில் திருப்பவேண்டிய கடமை வாய்ந்த குருக்களும், மதாச்சாரியர்களும் பலவான்

9

களுக்குப் பயந்தே போதனை செய்து வருகிறார்கள். பலவானுடைய கருத்துக்கு மாறாக எதையும் அவர்கள் சொல்வதில்லை; இதிலேயே அவர்கள் தங்களது புத்தியைச் செலுத்துகிறார்கள். மேலும், அவர்களாவது தங்களைப் பற்றினமட்டில் பிறருக்கு வழி காட்டுவோராக நடந்து கொள்ளுகிறார்களா? அதுவுமில்லை.

எல்லாரும் சுகமாகவும், சமமாகவும் வாழவேண்டும் என்ற கருத்துடைய அபேதவாதிகள் என்போர் என்னமோ ஊளையிடுகின்றனர். இவர்களும் தயங்குகின்றனர்; தங்களுக்கே திடமாய்த் தெரியாத கொள்கையைப்பற்றிப் பேசுகின்றனர். உங்களுடைய கொள்கை நல்லது தான் என யார் அவர்களுக்குச் சுட்டிச் சொல்லமுடியும்? ஒரு கொள்கை உயர்ந்ததென்றால், அதனை நம்பாத உலகத்திலே அதனை எப்படிச் சுட்டிக்காட்டுவது? அதன்படி நடந்து காட்ட வேண்டுமன்றோ?

தத்தளிக்கும் உலகத்திற்கு வழி காட்டியாக இந்தியாவிலே தோன்றியுள்ளவர் காந்தி. அவரே உலக ரட்சகர். அவர் என்ன சொல்லுகிறார்? **நாம் நம்மையே தியாகஞ் செய்து கொள்வோம், இது** தான் அவருடைய போதனை.

---

## அதிகாரம் 11

## முடிவுரை

"**உலகினர்** அனைவரிடமும் நேசமாக இருக்கவேண்டும். இதுவே நமது போராட்டத்தின் கருத்து. அஹிம்ஸா தர்மமானது மனிதரிடையே உதித்து விட்டது. அது நிலைத்திருக்கும். இதுவே உலக சமாதானத்துக்கு உபாயம்" என்று காந்தி சொல்லி யிருக்கிறார். உலகில் எங்கு பார்த்தாலும் சாந்தம் நிரம்பிக் கிடக்க வெகு காலமாகும்.

இதைப்பற்றி நமக்கு ஐயுறவு இல்லை. சென்ற ஐம்பது வருஷ காலமாக மனித வர்க்கத்தினிடம் பொய்யையும், கொடுமையையும், குரூரத்தையுமே கண்டு வந்திருக்கிறோம். இப்படி ஜனங்கள் பாழ்பட்டுக் கிடந்தாலும் அவர்களை நாம் நேசியாமல் இருக்கலாகுமோ! இந்த இருபதாம் நூற்றாண்டிலுள்ள ஐரோப்பியர் பணப்பித்துப் பிடித்துக் கிடப்பதையும், அப்பித்தினால் பரம அனர்த்தம் நேருகிற தென்பதையும், பல நூற்றாண்டுகளாக உள்ள மனோ விகாரமே அவர்களிடம் நிரம்பிக் கிடக்கிற தென்பதையும், இந்த அந்தகாரத்தினிடையே சத்திய மென்ற சூரிய வெளிச்சம் வீசமுடியாதென்பதையும், நாம் மறந்து விடவில்லை;

என்றாலும் ஆத்ம சக்தி வாய்ந்த மகானொருவர் எவ்வளவோ அற்புதம் காட்ட முடியும். மகான்கள் தோன்றி, நம்மால் சாதிக்க முடியாத காரியங்களைச் சாதித்துளர் என்பது சரித்திர உண்மை. இச்சமயத்திலே இந்தியாவிலிருந்து மங்கள சக்தி தொனிப்பதை நாம் காதாரக் கேட்கிறோம்.

"மூர்க்கர் இது கேட்டு நகைக்கலாம். ஆனால், அந் நகைப்பு அவர்களுடைய மடத்தனத்தையே புலப்படுத்தும். அவர்கள் கை கொட்டிச் சிரிக்கட்டும், உலகினரைக் கை தூக்கி விடப் போகும் சக்தி இந்தியாவில் உதித்துளது. எனக்கு இத்தகைய நம்பிக்கை தோன்றி யிருக்கிறது. அச்சக்தியைக் கண்டு ஐரோப்பியர் அலட்சியஞ் செய்கின்றனர்; அதனை அடக்கவும் பார்க்கின்றனர். என்னைப் போல் நம்பிக்கை கொண்டுள்ளோர் சிலர் தான் உளர். யாரும் நம்பாது போயினும் என்ன? நான் நம்புகின்றேன். உலகனைத்தும் எதிராக நின்றாலும், நம்பிக்கை யழியாது. நமது அஹிம்ஸா தர்மப் போர் மிகவும் கஷ்டமானதே. கோழைத்தனங் கொண்டு நின்றால், சாந்த மார்க்கத்தில் செல்ல முடியாது. மூர்க்கத்தைக்கண்டு வெறுப்பது போலவே, கோழைத்தனத்தையும் நாம் வெறுக்கிறோம். அஹிம்ஸா தர்மத்தில் நம்பிக்கை யில்லாதவர்கள், அல்லது கண்டு பயப்படுகிறவர்கள், நமது

போராட்டத்தில் கலந்து கொள்ளாமல் விலகி நிற்கட்டும். தியாக வழியே சாந்தத்துக்கு மார்க்கம்."

இதுவே காந்தியின் போதம். ஏசுநாதரும் அவரும் ஒருவரே, ஏசுநாதர் சிலுவையில் அறையப்பட்டார். காந்தி சிலுவையில் அறையப்படவில்லை. இது தான் இருவருக்கும் உள்ள வித்தியாசம். ஆசியாக்காரரின் ஆத்ம சக்தி அமோகமாகக் கிளம்பி விட்டது. அதன் அதிர்ச்சி உலகமெங்கும் தாக்குகிறது.

மகத்தான மதங்களும், போதனைகளும் ஆசியாவிலிருந்து கிளம்பி, உலகெங்கும் முன்னம் பரவலாயின. இப்பெருமை ஆசியாவுக்கே உரியது. இரண்டில் ஒன்று நிச்சயம். அதாவது ஒன்று காந்தியின் கொள்கை விரைவில் பரிபூரணமான வெற்றி பெறும்.

இல்லையேல் முன்னம் புத்தர், ஏசுநாதர் முதலிய மகான்கள் தோன்றியதுபோல் பிற்காலத்திலே ஓர் அவதார புருஷன் மீண்டும் இந்தியாவில் உதயமாகி, மனித கோடிகளை நல்வழிக்குக் கொண்டு வருவான்.

சுபம் !

---

Current Thought Press, Triplicane, Madras

# சங்கு நூல்கள்

---

சுதந்திரச் சங்கு பத்திரிகைக்குத் தமிழ்நாடு தந்த ஆதரவைக் கண்டு விலை மிகமிக மலிந்ததாயுள்ள புத்தகங்களையும் வெளியிடுவதற்கு சங்கு காரியாலயத்தார் முயன்று வருகிறார்கள். வடநாட்டில் "சஸ்த ஸாஹித்ய மண்டல்ம்" என்று ஒரு ஸ்தாபனம் இருப்பது போன்று தமிழ் நாட்டிலும் ஒரு ஸ்தாபனம் இருக்கவேண்டுமாதலால் அந்த ஊழியத்தை சங்கு காரியாலயத்தார் மேற்கொண்டிருக்கிறார்கள்.

மஹாத்மா காந்தியின் நூல்களும், இராஜீயம், ஸமூகம், பொருளாதாரம் இவைகளின் முன்னேற்றத்தைப் போதிக்கும் புத்தகங்களும், அறிவாளிகள் பலர் எழுதிய உன்னத நூல்களும் வெளிவருவதற்கு இருக்கின்றன. அந்த வெளியீடுகளை லக்ஷக்கணக்கில் வாங்கி தமிழர் ஆதரிப்பாராக.

சங்கு நூல்கள்

---

மஹாத்மா காந்தி எழுதிய

1. அனாசக்தி யோகம் ... 0 4 0
2. ஆரோக்கிய வழி ... 0 4 0
3. நீதி தர்மம் ... 0 4 0

வில்லியம் தர்ஸ்டன் எழுதிய

4. இல்லற மகா ரகஸியம் ... 0 4 0

ரோமன் ரோலண்ட் எழுதிய

5. மகாத்மா காந்தி சரிதை ... 0 4 0
6. சத்திய சோதனை ... 1 8 0

(மகாத்மா காந்தி சுய சரிதத்தைச் சொல்லுகின்றார்.)

---

அச்சில் உள்ள நூல்கள்

பர்தோலி விஜயம்

பிரும்மசரியமும் இல்லறமும்
மகாத்மா காந்தி எழுதியது.